
கல்கி
KALKI
28.11.99
ரூ. 4.50
ஹே ராம்!
சிடி- ரோம்!

# நினைத்ததை நிறைவேற்றும் அற்புத 90 XXX பிரமிட் இயந்திரம் (WISH PYRAMIDS)



அற்புத மனிதர் M.G. அண்ணாதுரை அவர்களால் சக்தியூட்டப் பெற்ற அதிசய எந்திரம். இதன் நடுவில் உள்ள ஒன்பது பிரமிட் அமைப்பில் உங்கள் கோரிக்கைகளை சிறிய பேப்பரில் எழுதி வைத்து காலை மாலை நினைவுபடுத்த எளிதில் நினைப்பது நிறைவேறும்.

செல்வ வளம் பெற, வாழ்க்கை உயர, விரைவில் திருமணம் நடைபெற, குடும்பத்தில் சச்சரவு நீங்க, நோய்கள் அகல, நினைவாற்றல் அதிகரித்து அதிக மதிப்பெண் பெற, வீட்டில் அற்புத சக்திகள் சூழ, வாஸ்து தோஷங்கள் நீங்க யாவற்றிற்கும் உதவும் அதிசய சக்தி வாய்ந்தது.

90 XXX பிரமிட் விலை ரூ. 120

கிரிஸ்டல் உள் அமைந்தது ரூ. 150

நவரத்தினத்துடன் கிரிஸ்டல் அமைந்த அதிக சக்தி உள்ளது ரூ. 900/-

தேவையுள்ள கருவியுடன் தபால் செலவு ஒன்றிற்கு ரூ. 30 சேர்த்து D.D. அல்லது M.O. மூலம் பெறலாம்.

**பயனடைந்தவரின் பாராட்டுரைகள்**

- அருட்கடல் அரசர் அண்ணாதுரை அவர்களுக்கு
  தாங்கள் அனுப்பிய பிரமிட் பார்சலை பிரிக்கும்போது
  சுறுசுறுவென ஓர் அற்புத சக்தி கைகளில் பரவியது
  எகிப்த்திற்கே சென்று பிரமிட்டை பார்த்து அதனுள் இருந்தது போல்
  உணர்வும் உற்சாகமும் கிடைத்தது. வாழ்க நீவீர்.

  **ஸ்ரீலஸ்ரீ K.K.V.P. கோவிந்த ராஜ பவனாச்சார்ய சுவாமிகள்**
  பவனாச்சார்ய மட பீடாதிபதி, ஸ்ரீரங்கம், திருச்சி.

- ஆசிரியர் அவர்களுக்கு தங்கள் பிரமிட் அமைப்பின் உதவியால் சென்னையில் உள்ள மதர் சுப்பீரியர் அவர்களுக்கு உடல் நலம் பாதிப்பில் உள்ள போது தஞ்சையில் இருந்து பிரார்த்தித்தேன். சில மணிகள் பின் தொலைபேசியில் விசாரித்ததில் உடல் நலம் நல்ல முன்னேற்றம் கிடைத்ததாக கூறினார்கள். எங்களைச் சார்ந்த பல தூய சகோதரிகள் பிரமிட் ஆற்றலை கண்டு வியக்கின்றனர்.

  **Dr. தூய சகோதரி மேரி லூக் M.A., B.T., மாற்று மருத்துவர்,**
  **புனித கமிலஸ் மருத்துவமனை, சுங்குவார் சத்திரம், முளச்சூர் - 602 106.**

- அன்பிற்குரிய ஐயா அவர்களுக்கு, இரவு 9.15 மணிக்கு என் மனதில் உடனடியாக சென்னையில் உள்ள குடும்பத்ினருடன் தொடர்பு கொள்ள வேண்டும் என அதீத உணர்வு உண்டானது. தொலைபேசியில் தொடர்பு கொண்டேன். என் மகள் பிரமிட் சக்தியை பரிசோதனை செய்ய, இரவு 9 மணி அளவில் எழுதி வைத்து நினைத்தேன். நீங்களும் தொடர்பு கொண்டீர்கள் என கூறினாள். உண்மையிலேயே இது ஓர் அற்புத சக்தியுள்ள அதிசயம்தான். எனக்கு தெரிந்து பலருக்கு தங்களின் கிரிஸ்டல்களும் பிரமிடுகளும் பல தீராத பிரச்னைகளைத் தீர்த்து உள்ளது. நன்றி வணக்கம்.

  **S. சுப்ரமண்யம், லேபர் ஆபீஸர், பெரியகுளம், தேனி மாவட்டம்.**

*கிடைக்குமிடம் :*

## ஹீலிங் மேக்னெட்ஸ் & கிரிஸ்டல்ஸ்

நெ. 24/2B, கோபால கிருஷ்ண அய்யர் தெரு, பாண்டிபஜார்,
(மெட்ரோவாட்டர் அருகில்) தியாகராய நகர், சென்னை - 600 017. போன் : 8218268

*மொத்த விற்பனைக்கு :*

மாற்று மருத்துவ மையம், 60, ஜீவன் லால் நகர், திருவொற்றியூர், சென்னை - 600 019. போன் : 5735207.

**எங்களிடம் தரமான காந்த சிகிச்சை கருவிகளும் கிடைக்கும்.**



— சங்கர் மகாதேவன் சொல்கிறார்

# "உலகப் பொது இசை உருவாக்கப் போகிறேன்"

'சங்கமம்' படம் விழுந்தாலும் சங்கர் மகாதேவனின் 'வராக நதிக்கரையோரம்' ரசிகர்களின் நெஞ்சைக் குத்தகை எடுத்து விட்டது. சமீபத்தில் அவரது ஐயப்ப பாடல்கள் கேஸட், விற்பனையில் மகரஜோதியாகப் பிரகாசிக்கிறது. நேற்று ஒரு ஹரிஹரன் அலை என்றால் இன்று நாடெங்கும் சங்கர் மகாதேவன். வயலின், மிருதங்கம், தபலா, ஹார்மோனியம் போன்ற கலவைக் கருவிகளுடன் வடக்கு – தெற்கை இணைத்து நாடோடிப் பாடல்கள், கஜல்கள், பஜன்கள் என்று மேடையில் ராஜ்ஜியம் நடத்தும் சங்கர் சமீபத்தில் துபாய்க்கு ஓர் இசை நிகழ்ச்சிக்காக வந்திருந்தார். சர் ப்ரவாஹ் (Sur Pravah) என்கிற அந்த மெகா சக்ஸஸ் இசைப் பயணத்தின் இடையே சங்கரைக் கல்கிக்காகப் பிரத்தியேகமாக பேட்டி கண்டோம். அந்தச் 'சுருக்' பேட்டியிலிருந்து சில 'நறுக்' பகுதிகள் :

*"**வ**ணக்கம் சாஃப்ட்வேர் இஞ்சினியரே! நீங்கள் சங்கீதத்துக்கு வந்த கதையைச் சொல்ல முடியுமா?"*

"என் பெற்றோர்தான் இதற்கு மூலகாரணம். அவர்கள் இசைப் பிரியர்களாக இருந்தது திருமூலக் காரணம். நான் நாலு வயதில் இருக்கும்போதே கர்நாடக சங்கீதம் பயில

அனுப்பி விட்டார்கள். எங்கள் குடும்பப் பொருளாதார நிலைக்கு அது அதிகப்படி தான். இருந்தாலும் நான் இசை கற்பதில் அவர்களின் ஆர்வம் அத்தகையதாயிருந்தது.

"டி.ஆர். பாலாமணியிடம் என் பால பாடத்தைத் தொடங்கினேன். பத்துப் பன்னி ரண்டு வருடங்கள் அவரிடம் படித்தபின், பிரபல மராத்தி இசையமைப்பாளர் 'ஸ்ரீனி வாஸ் கலே'விடம் சென்றேன். அவரிடமும் தாராதேவி என்பவரிடமும் என் உயர் படிப்பு நடந்தது."

*"நீங்கள் ஒரு தொழில் முறை சாஃப்ட் வேர் இஞ்சினியராயிருந்து எப்படி தடா ரென்று முழு நேரப் பாடகராக முடிவு செய்தீர்கள்?"*

"பள்ளி நாட்களிலிருந்தே பாடி வந்தேன். கல்லூரியில் படிக்கும்போதே விளம்பரப் படங்களுக்கெல்லாம் பாடியிருக்கிறேன். நட்சத்திர நிகழ்ச்சிகள், கலாசார சுற்றுலா என்று அப்போதே இசைப் பயணமென்பது என் இணைபிரியாத விஷயமாகி விட்டது. சொல்லப் போனால், கம்ப்யூட்டரை விட இசையின் மீது என் காதல் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டேயிருந்தது. சம்பிரதாயமாக ஒரு நிறுவனத்தில் ஏழு மாதங்கள் பணியாற்றியது உண்மையே. ஒரே நாளில் என் ராஜினாமாவை வீசி விட்டு வந்ததில் பெரிதாக மனக்குழப்பம் ஏதும் ஏற்படவில்லை. என் முடிவின் மீது நம்பிக்கையிருந்ததால் பழசையெல்லாம் நினைத்துக் குழப்பிக் கொள்ளவில்லை."

*"புகழ், பிரமாதமான மயக்கும் விஷயமாயிற்றே? உங்கள் விஷயத்தில் அது எப்படி....?"*

"நான் புவியில் கால் பதித்து வாழ்கிறேன், விழிப்புடன். புகழெல்லாம் கடந்து போகிற விஷயம். இந்த நிமிஷம் இருப்பது மறு நிமிஷம் இருக்காது! ஒரு கோஷ்டி சூழ்ந்து கொண்டு ஆட்டோகிராஃபுக்கு மொய்த்தால் சந்தோஷமாகத்தான் இருக்கும். அப்போதும் என் பாதங்களை பூமியில் அழுந்தப் பதித்தே இருப்பேன்."

*"உங்கள் 'Breathless' ஆல்பம் வாழ்வின் திருப்புமுனை என்று சொல்வீர்களா?"*

"திருப்புமுனை என்பது நான் வேலையை உதறியகணம்தான். 'ப்ரெத்லஸ்' ஆல்பம் என் இசையுலகப் பிரவேசத்தை மக்கள் அங்கீகரித்த தருணம்."



## எதை ரசிக்கிறார்கள் இவர்கள்?

நிறைந்த இந்த அரங்கில், பார்வையாளர்கள் எதை உன்னிப்பாகக் கவனிக்கிறார்கள் தெரியுமா...? அரசியல், ஆன்மிகச் சொற்பொழிவு அல்ல – கச்சேரி கூட அல்ல... சாவேரி ராகத்தைப் பற்றிய நுணுக்கமான அலசலைத்தான் சென்னை ராககதா அரங்கை நிறைக்கும் இந்தக் கூட்டம் ரசித்துக் கொண்டிருக்கிறது!

இசையைக் கேட்பது போலவே இசையைப் பற்றிப் பேசுவதும் இன்பமான அனுபவம் என்பதை உணர்ந்து, மாதமொரு ராக டிஸ்கஷனுக்கு ஏற்பாடு செய்து வருகிறது கர்நாடகா ஆர்கைவல் சென்டர். இதில் சுறுசுறுப்பாய் வேலை செய்வோர் கர்நாடிக் மியூசிக் சிடி ரோம் புகழ் வித்வான்கள் சௌம்யாவும் சசிகிரணும்.

ராக அலசல்களை மட்டுமின்றி இசை பற்றிய பல்வேறு சங்கதிகளை ஒலி வடிவமாகவும் கலைஞர்களின் பேட்டிகளாகவும் தொகுத்து ஆவணக் காப்பகம் உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

இதைப் போல் ஏற்கெனவே ஓரிரண்டு அமைப்புகள் இருக்கின்றனவே...? என்று கேட்டால், "எங்களுடையது போட்டி அமைப்பு இல்லைங்க..." என்கிறார்கள்.

"ராக அலசலைத் தொடர்ந்து பார்வையாளர்களுக்கு குவிஸ், பரிசும் உண்டு; அப்புறம் அந்த ராகத்திலேயே முழுக்க முழுக்க அமைந்த கச்சேரி..."

இதுவரை சஞ்சய் சுப்ரமண்யனின் சஹானா கச்சேரியும் டி.எம். கிருஷ்ணாவின் சாவேரி கச்சேரியும் வெற்றிகரமாக அமைந்தனவாம்.

– டி. என். சித்ரா

"கொஞ்சம் சொந்த வாழ்க்கை பற்றிப் பேசலாமா? உங்கள் இளம்பருவத்துத் தோழியைத்தான் காதலித்துக் கல்யாணம் பண்ணிக் கொண்டீர்களாமே?"

"ஆமாம்! பதினோராம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்தபோது அவள் எட்டாங் கிளாசில் இருந்தான். பல நாள் நண்பர்கள் நாங்கள். திருமணம் பற்றியெல்லம் யோசித்ததே இல்லை. சின்ன வயசிலிருந்தே ஒருவரையொருவர் நன்கு அறிந்திருக்கும்போது ஆளுக்கொரு ஜோடி எதற்காக வெளியே தேட வேண்டும் என்று தற்செயலாகத் தோன்றியது. அஃப்கோர்ஸ், வழக்கமான பெற்றோர் பிரச்னைகளையெல்லாம் கடந்து எங்கள் பதினேழு வருஷப் பழக்கம் திருமணத்தில் முடிந்தது!"

"எந்தெந்த மொழியில் இப்போது பாடுகிறீர்கள்?"

"மராத்தி, தமிழ், மலையாளம், பெங்காலி என பத்து மொழிகளில் பாடுகிறேன். கொஞ்சம் வெட்கம்தான். நான் தமிழன் என்றாலும் தமிழ்ப் பாடல்களையும் ஹிந்தியில் எழுதி வைத்தே பாடுகிறேன்.

"உங்கள் எதிர்காலத் திட்டங்கள்?"

"எல்லாவிதமான இசையிலும் ஆழம் தேடிச் செல்லப் போகிறேன். அரேபியன், ஆஃப்ரிக்கன், வெஸ்டர்ன் இசை தவிர நமது இந்தியப் பாரம்பரிய இசை இவற்றின் சரியான கலப்பைக் கண்டுபிடிக்கத் திட்டமிருக்கிறது. உலகப் பொதுவான ஒரு இசை வடிவத்தை உருவாக்கி அனைவரையும் ஏற்கச் செய்யும் திட்டம் இருக்கிறது."

"தமிழ்நாட்டில் உங்கள் ஆல்பம் சக்கைப் போடு போடுகிறது. தமிழ் ரசிகர்களுக்கு நீங்கள் கூற விரும்புவது...?"

"புதிய நூற்றாண்டு அவர்களுக்குப் பொலிவானதாக இருக்கட்டும். நிறைய இசை கேளுங்கள். தரமானதை மட்டும் கேளுங்கள். நீங்கள் தரமானதை விரும்பிக் கேட்கக் கேட்கத்தான் நாங்கள் இன்னும் சிறப்பான இசையைத் தர முடியும்."

துபாயிலிருந்து :

**மஞ்சுளா ராமகிருஷ்ணன்**

படம் – நன்றி : **HMV**



# செந்தில் பையன் எந்த கிளாஸ்?

சென்னை ரோட்டரி சங்கமும், ஜெட் ஏர்வேஸ் நிறுவனமும் இணைந்து, குழந்தைகள் தினத்தையொட்டி ஊனமுற்ற, ஆதரவற்ற, ஏழைக்குழந்தைகள் எண்பது பேர் போயிங் விமானத்தில் 'கனவுப் பயணம்' செய்வதற்கு ஏற்பாடு செய்தனர். அந்த விமானத்தில் மேயர் ஸ்டாலின், ஹீரா, செந்தில் வந்திருந்தார்கள்.

விமானம் புறப்பட்ட சிறிது நேரத்துக்கெல்லாம் ஸ்டாலின், ஹீரா, செந்தில் மூவரும் குழந்தைகளுடன் கை குலுக்கி, விசாரிக்க ஆரம்பித்து விட்டனர். மூவரும் அதிகமாக குழந்தைகளிடம் கேட்ட கேள்வி: "பயமாயிருக்கா?"

செந்திலை ஒரு பாட்டு பாடும்படி கேட்டபோது, "நான் பாடினால், நீங்கள் எல்லாம் பிளேனிலிருந்து கீழே குதிச்சி, அடிபட்டுக்குவீங்களே! அடுத்த தடவை எஸ்.பி. பாலசுப்ரமணியத்தை கூட்டிக்கிட்டு வாங்க! அவரை பாடச் சொல்லி ஜாலியா கேளுங்க" என்றார். ஒரு சிறுவன் "உங்க பசங்கள் என்ன படிக்கிறார்கள்?" என்று கேட்க, அவரோ, தலையைச் சொறிந்து கொண்டே, ஒருவன் எட்டாம் வகுப்பு, இன்னொருத்தன்... ஞாபகமில்லையே!" என்று நெளிய, ஒரே கலாட்டாதான்!

ரோட்டரி சங்கம், அடுத்து ஆயிரம் முதியவர்களை, ரயில் மூலம் திருப்பதிக்கு அழைத்துக்கொண்டு போய் தரிசனம் செய்விக்க ஏற்பாடு செய்யப் போகிறார்களாம்!

ஜெட் ஏர்வேஸ் விமானத்திலிருந்து:

**பாரதி**



படம்: பிரவீன் குமார்

# ஹே ராம்! சிடி-

'ஹே ராம்!' படத்தின் முழு விவரங்களும் அடங்கிய சிடி ரோம் வெளியீட்டு நிகழ்ச்சியில் எடுத்த எடுப்பிலேயே களை கட்டி விட்டது, கமலின் பத்திரிகையாளர் சந்திப்பு.

''தமிழ், தெலுங்கு, இந்தி, ஆங்கிலம் இதில் எந்த மொழியில் பேசுவது என்று சிறு குழப்பம். ஆனாலும், எல்லோருக்கும் புரிய வேண்டும் என்பதற்காக, நம் தேசிய மொழியான ஆங்கிலத்திலேயே பேசுகிறேன். தமிழர்கள் மன்னிப்பார்களாக!'' என்று ஆரம்பித்தார். ஆனாலும், தெலுங்கில் கேட்கப்பட்ட கேள்விகளுக்குத் தெலுங்கிலும், மலையாளக் கேள்விக்கு மலையாளத்திலும் பதில் சொன்னார்.

"ஹே ராம் படம் சம்பந்தப்பட்ட விஷயங்களைப் படு ரகசியமாக வைத்துக் கொண்டிருக்கிறேன் என்பது என் மீதுள்ள பலரது குற்றச்சாட்டு. ஆனால் உண்மை அது இல்லை. படம் சம்பந்தப்பட்ட வேலைகளில் மிகவும் மூழ்கி விட்டதால், வேறு எதற்கும் நேரமில்லை'' என்றார் கமல்.



"காந்தியைப் பற்றிய படம் என்பதால், நிறைய ஆராய்ச்சி மேற்கொள்ள வேண்டியிருந்ததா?"

"நான் பிறந்த போது, என் அப்பாவுக்கு வயது ஐம்பது. என் அப்பா, ஒருவிதத்தில் எனக்கு தாத்தா போல. அவரிடமே நிறைய தெரிந்து கொண்டேன். நான் படித்த பாடப் புத்தகங்கள், பத்திரிகைகள், புத்தகங்களிலிருந்து ஏராளமான விஷயங்கள் தெரிந்து கொள்ள முடிந்தது. அட்டன்பரோ போல, காந்தியை எப்படிக் காட்டினால், மக்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்று நான்

யோசிக்க வேண்டிய அவசியமில்லை. இந்தியன் என்கிற முறையில், நான் காந்தியை எப்படிப் பார்க்கிறேனோ, அப்படியே காட்ட எனக்கு உரிமை இருக்கிறது. இது காந்தி பிறந்த தேசத்தில்தான் சாத்தியம்! ஹே ராம்! வித்தியாசப்பட வேண்டும் என்பதற்காக ஏற்றுக் கொள்ளப்படாததை விமர்சிக்கும் படமில்லை. பெருமிதத்துடனும், அதே நேரம் சிறிய கேவலுடனும் இன்றைய தலைமுறை, தான் நடந்து வருவதற்காகப் பாதை செய்தவர்களைப் பார்க்கும் பார்வை; பாதையின் நெளிவு, சுளிவுகளுக்கு, யார் யாரெல்லாம் காரணம் என்பதைப் பார



பட்சமின்றி ஆராயும் முயற்சி! புதிய பாதைகள் செய்கையில், பழைய தவறுகள் நிகழாதிருக்க ஒரு நினைவுக் குறிப்பு!'' என்று கூறும் கமல், படத்தின் விளம்பரங்களில், தலைப்புக்குக் கீழே, 'ஒரு சத்திய



# ரோம்!

சோதனை அனுபவம்' என்று குறிப்பிட்டிருக்கிறார். அதே போல, டைட்டிலை, ஒரு வில் அம்புடன் சித்திரித்திருப்பதற்குக் கமலின் விளக்கம்: "வில், அம்பு ராமரை சிம்பாலிக்காக குறிப்பது என்றாலும், அன்றைய ஆயுதம் வில், அம்பு; இன்று துப்பாக்கி. ஆயுதங்கள் மாறினாலும், மக்களின் மனப்போக்கு மாறவில்லை என்றும் கொள்ளலாம்!''

"படத்தின் ஹீரோ நீங்களா? ஷாருக் கானா?''

சிரித்தபடியே, "பொக்கை வாய் குஜராத்திக் கிழவர்தான் படத்தின் ஹீரோ. சினிமா உலகின் நட்சத்திர அந்தஸ்துக்கு இங்கே இடமில்லை. கதைப்படி என்னை இரண்டாவது ஹீரோ, ஷாருக்கானை மூன்றாவது ஹீரோ என்று சொல்லலாம்!''

"படத்தின் பட்ஜெட் எவ்வளவு?''

"இதுவரை பதினாறு கோடி என்று, என் அண்ணனும், கூட்டுத் தயாரிப்பாளருமான சந்திரஹாசனுக்கு ஹார்ட் அட்டாக் ஏதும் வந்துவிடக் கூடாது என்பதற்காகச் சொல்லிக் கொண்டிருக்கிறோம். இன்னும் கொஞ்சம் செலவு இருக்கிறது. இதில் என் சம்பளம் சேர்த்தியில்லை.''

"திடீரென்று இளையராஜாவை இசையமைக்க வைத்திருப்பது ஏன்?''

"என் பேராசைதான். படம் மிகச் சிறப்பாக இருக்க வேண்டும் என்பதற்காகத் தான் அவரையும் சேர்த்துக் கொண்டிருக் கிறேன்.''

"சென்சாரில் ஏதாவது பிரச்னை வருமென எதிர்பார்க்கிறீர்களா?''

"இல்லை. வர சான்ஸ் இல்லை. அப்படி வந்தால், அதனை எதிர்த்துப் போராடுவதற்குத் தயங்க மாட்டேன்.''

"வர்த்தக ரீதியில் படம் வெற்றி பெறும் வாய்ப்பு எப்படி?''

"நிச்சயம் வெற்றி பெறும். அதற்காகத் தானே பாட்டு, டான்ஸ், காதல், சண்டை எல்லாம். வெறும் விருதுகளுக்காக, யாரும் படம் எடுப்பதில்லை; எடுக்கவும் கூடாது. அவார்டு என்பது ஒரு அங்கீகாரம். அது இதோ இந்த மைக்கை விட கொஞ்சம் கனமானது. அதற்காக, வர்த்தகரீதியான தோல்வியைச் சந்திக்க யாரும் சம்மதிக்க மாட்டார்கள். அகில இந்திய அளவில், சினிமா மார்க்கெட் என்பது மிகப் பெரியது. இதைப் பலரும் புரிந்து கொள்ளவில்லை என்றே சொல்ல வேண்டும்.''

# 'ஹே ராம்!' பற்றி...



● ஹே ராம் படமே ஒரு புது முயற்சி என்றால், இதுபற்றி கமல் தயாரித்திருக்கும் சிடி ரோம் இந்திய திரைப்பட வரலாற்றில் இன்னும் ஒரு மைல் கல். இந்த சிடியில், படத்தில் பணியாற்றியுள்ள நடிகர்கள், டெக்னீஷியன்கள், திரைக்குப் பின்னால் நடந்துள்ள சுவையான தகவல்கள், ஏராளமான புகைப்படங்கள் என்று இடம்பெற்றுள்ளன – தமிழிலும், ஆங்கிலத்திலும். 'மந்த்ரா' என்கிற நிறுவனம் தான் ஹைதராபாதிலுள்ள ராமோஜிராவ் பிலிம் சிடியிலிருக்கும் கம்ப்யூட்டர் கிராபிக்ஸ் ஸ்டுடியோவில் இந்த சிடி–ரோமைத் தயாரித்தது. என்றாலும் அதற்கான டெக்னீஷியன்கள் ஹாலிவுட்டிலிருந்து வரவழைக்கப்பட்டார்கள் என்பது விசேஷம்.

● பாரதம் இரண்டாகக் கூறுபட்டபோது, நடந்த மதக்கலவரத்தினால் பாதிக்கப்பட்ட பல்லாயிரம் பேரில், சாகேத் ராமும் ஒருவன். ஒரு சராசரி தென்னாட்டு பிராமணனான இவனது வாழ்க்கை, மன்னார் குடியிலிருந்து, வேலை நிமித்தமாக கராச்சிக்குப் போகிற போது, கல்கத்தா, கலவரத்தில் அடியோடு திசைமாறிப் போகிறது. தனது வாழ்க்கை சோகங்களுக்கு அரசியல் தலைவர்களது அவசர முடிவுகளே காரணம் என்ற தனிமனிதக் கோபம், அவனை தீவிரவாதியாக்குகிறது. காந்தியை கடுமையாக விமர்சிக்கும் கூட்டத்தில் சேருகிறான். காலப்போக்கில் எது சத்தியம்? எது சாத்தியம் என்ற குழப்பம் அவனுக்கு வர, 1948 ஜனவரி முப்பதாம் தேதி, தன் குழப்பத்துக்கு பதில் தேடிச் செல்கிறான். அங்கே மரணத்தையும், மனிதம் வெல்வதையும் கண்கூடாகக் காண்கிறான். இறுதியில் சன்யாசியாகி விடுகிறான். இதுதான் கதை.

● படத்தில் காந்தி பேசும் வசனங்கள் ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளன. காரணம்? ''காந்தி, வள்ளியம்மையிடம் தமிழ் கற்றுக் கொண்டார் என்றாலும், சரளமாய் அவரால் தமிழ் பேச முடியாது. காந்தி, இந்தி பேசினால், நமக்கு அன்னியப்படுவார். என்றாலும், மொழியை விஞ்சி, அந்தக் காட்சிகளின் அழுத்தம் பார்ப்பவர் நெஞ்சைச் சுடும் என்கிறார் கமல்.

● 1946–ல், மொகஞ்சதாரோவில் தொடங்கி, 1999–ல் சென்னை தெருக்களில் முடிகிறது கதை. ஒரு பக்கம், ஒரு நிமிடம் என்கிற அமெரிக்க திரைக்கதை பார்முலாபடி எழுதப்பட்ட திரைக்கதை. திரைக்கதை மொத்தம் நூற்று எண்பத்தோரு பக்கம். பாடல்களு

"படத்தில் என்ன மெசேஜ் சொல்லியிருக்கிறீர்கள்?"

"தெருவில் மேடை போட்டு, ஏறி நின்று கொண்டு, மக்களைப் பார்த்து அறிவுரை கூறுவது என் வேலை இல்லை. எந்தப் படத்திலும் அதை நான் செய்தது இல்லை. திரைப்படங்கள், மக்களுடனான ஒரு உரையாடல் போல. அதன் மூலம் என் எண்ணங்களை நான் பகிர்ந்து கொள்கிறேன்."

"படத்தில் நீங்கள் ஒரு தீவிரவாதியாக மாறி விடுகிறீர்கள். ஆக, இந்தப் படத்தில் நீங்கள் தீவிரவாதத்தை ஆதரிக்கிறீர்களா?

"இந்திய மண்ணில் பிறந்த ஒருவர், வன்முறையை எப்படி ஆதரிக்க முடியும்? தேவர் மகன், மகா நதி, குருதிப்புனல் போன்ற படங்களைப் பண்ணிவிட்டு, வன்முறை சரிதான் என்று நான் எப்படி வாதிடலாம்? இன்றைய நிலையில், இந்த நாட்டுக்கு, வன்முறை தேவையில்லை என்பது என் கருத்து. ஆனால் படத்தில் வன்முறையைச் சித்திரிக்கும் காட்சிகள் இடம்பெற்றிருக்கின்றன. குடி, குடிகாரன் இரண்டையும் காட்டித் தானே, குடியின் தீமையைச் சொல்ல முடியும்! அது போலத்தான்."

''காந்தி மரணமடைந்தபோது, 'ஹே! ராம்!' என்று அவர் சொல்லவில்லை என்று இன்னமும் ஒரு சர்ச்சை இருக்கிறதே!"

"காந்திஜி மரணமடைவதற்கு பத்து நாட்கள் முன்னரே, அவரைக் கொல்வதற்கு, ஒரு முயற்சி நடந்தது. அப்போது, அவர் தாம் இறக்கிற போது, 'ஹே ராம்'என்று கூறியபடியே இறக்க விரும்புவதாகக் கூறியிருக்கிறார். ஆனால், அவர் சுடப்பட்டபோது, பயன்படுத்தப்பட்ட குண்டு, அவரது

டன் சேர்த்து 195 நிமிடப் படம். ஆக படத்தின் நீளம் : மூன்றே கால் மணி நேரம்.

● படத்துக்கு பைனான்ஸ் செய்திருப்பவர் பிரபல இந்தித் திரையுலக பைனான்சியரான பரத்ஷா. "படம் வெற்றி பெறுமா? லாபம் எவ்வளவு கிடைக்கும்? என்று எதுவும் கேட்காமல், 'எப்போது படம் ஆரம்பிக்கிறீர்கள்? எப்போது முடியும்?' என்று சுருக்கமாகக் கேட்டு சம்மதம் தெரிவித்தாராம் பரத்ஷா. தமது பைனான்சுக்கு அவர் இன்ட்ரஸ்ட் (வட்டி) பற்றிப் பேசவில்லை. காரணம், இந்த சப்ஜெக்ட்டில் அவருக்குள்ள இன்ட்ரஸ்ட் (ஆர்வம்)" என்று நெகிழ்கிறார் கமல்.

● அம்புஜம் என்கிற பாத்திரத்தில், நடிப்புக்கு குட்பை சொல்லி விட்ட ஹேமமாலினி நடித்திருக்கிறார். அம்புஜத்தின் மகள் மைதிலி ரோலில் ஹேமமாலினியின் மகள் இஷாவை நடிக்க வைக்க கமல் பெரிதும் முயற்சித்தார். ஆனால் ஹேமமாலினியின் கணவர் தர்மேந்திரா கண்டிப்பாக மறுத்து விட, (நடுத்தர வயது) மகளாகவும் ஹேமாவே நடித்து விட்டார்.

● காந்திஜி சுடப்பட்டபோது, நேரில் பார்த்த மோகினி மாதூர் என்ற பெண்மணியும் ஹே ராம் படத்தில் ஷாருக்கானின் அம்மாவாக நடித்திருக்கிறார். (அப்போது அவர் வயது பதின்மூன்று) காந்திஜி சுடப்பட்ட காட்சி படமாக்கப்பட்டபோது, பழைய சோக நினைவுகளில் மூழ்கிக் கண் கலங்கி விட்டார் திருமதி மாதூர்.

● அகழ்வாராய்ச்சி நடந்த இடமான மொகஞ்சதாரோ, இப்போது பாகிஸ்தானில் உள்ளது. இப்போதுள்ள அரசியல் சூழ்நிலையில், அங்கு போய்ப் படம்பிடிப்பது சாத்தியமில்லை என்பதால், சென்னையிலிருந்து 45 கி.மீ. தூரத்தில் ஒரு கிராமத்தை ஒட்டிய இடத்தில் மொகஞ்சதாரோ உருவாக்கப்பட்டு, படம் பிடிக்கப்பட்டது.

● டி.கே. பட்டம்மாள் சக்கர நாற்காலியில் ஒலிப்பதிவுக்கூடத்துக்கு வந்து காந்திஜிக்கு மிகவும் பிடித்த வைஷ்ணவ ஜனதோ பாடலை பாடியிருக்கிறார் என்றால், கமல், ஷாருக், ராணிமுகர்ஜி உட்பட பலர் கோரசாக மாடர்ன் டியூனில் பாடும் ரகுபதி ராகவ பாடல் படத்தின் இறுதியில் இடம் பெறுகிறது.

● எம்.எஸ். அவர்கள் இப்போது பாடுவதில்லை என்றாலும், அவர் மீரா (தமிழ், இந்தி) படத்தில் பாடிய பாடல்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

● சந்நியாசம் மேற்கொள்வதற்குச் செய்ய வேண்டிய சடங்குகள், சுலோகங்கள் பற்றி காஞ்சி மடத்தின் பால பெரியவர் கூறியவை ஒலிப்பதிவு செய்யப்பட்டுள்ளன. ஆனால் அவரது ஒரிஜினல் குரலை சினிமாவில் பயன்படுத்துவதற்கு அனுமதி கிடைப்பது உறுதியில்லை. அனுமதி கிடைக்காவிட்டால், கமலின் குரலில் அவை மீண்டும் ஒலிப்பதிவு செய்யப்பட்டு, படத்தில் பயன்படுத்தப்படும்.

● *1946- முதல் 48 வரையிலான ஹிந்துஸ்தான் டைம்ஸ், ஸ்டேட்ஸ்மன், லைஃப் போன்ற பத்திரிகைகளோடு கல்கி, ஆனந்த விகடன் ஆகிய தமிழ்ப் பத்திரிகைகளும் ஹே ராம் படத்தில் காட்டப்படுகின்றன.*

**— சி. எம்.**

உடலில் குண்டு பாய்ந்த இடம் இவற்றை வைத்துப் பார்க்கிறபோது, அவர் ஹே ராம் என்று கூறியிருக்க வாய்ப்பு இல்லை என்றுதான் நான் நினைக்கிறேன். அதே சமயம், குண்டடிபட்டு, பதினைந்து நிமிடம் வரை அவர் உயிருடன்தான் இருந்திருக்கிறார். அந்தப் பதினைந்து நிமிடத்தில், அவரது உதடுகள், ஒரு நூறு தடவையாவது, 'ஹே ராம்!' என்று உச்சரித்திருக்கின்றன. ஆக, அவர் ஹே ராம் என்று கூறியபடியே உயிர் விட்டாரா? இல்லையா? என்ற சர்ச்சையே அவசியமில்லாதது!"

"படத்தில் உங்கள் மகள் ஸ்ருதி நடித்திருக்கிறாராமே!"

"ஆமாம்! ஸ்ருதியின் அம்மா, 'என பொண்ணுக்கு ஏதாவது சான்ஸ் கொடுங்களேன்' என்று கேட்டார். படத்தின் டைரக்டர் வல்லபபாய் பட்டேலின் பெண் பாத்திரத்தில் நடிக்க வாய்ப்புக் கொடுத்தார்."

"ஹே ராம் இயக்கும் அனுபவம், அடுத்து மருதநாயகத்தை இயக்க முன்னோடியாக இருக்குமா?"

"இல்லை. முப்பது நிமிடத்துக்கு மருதநாயகம் எடுத்த அனுபவம், இரண்டு முழு சினிமா எடுக்கும் அனுபவத்தை அளித்தது. அதுதான் இந்தப் படத்தை இயக்குவதற்கு முன்னோடி!"

இறுதியில், "படத்துக்காக மொட்டை அடித்துக் கொண்டீர்களா? என்று ஒரு நிருபர் கேட்டபோது, வாய் விட்டுச் சிரித்து விட்டு கமல் சொன்னார் : "பட்ஜெட் பதினாறு கோடி என்பதால் இப்படி ஒரு கேள்வி கேட்கிறீர்களா?"

**— எஸ். சந்திரமௌலி**

● பாக்கஸ் என்கிற அமெரிக்க சிந்தனைக் குழு உறுப்பினர் ஒருவர் தரும் தகவல்கள் டெல்லி ராஜ தந்திரிகளை அதிர்ச்சிக்குள்ளாக்கியிருக்கிறது. இவரது தகவல்படி, பாக். தனது அணு ஆயுதப் பெருக்கத்தைப் பலமடங்கு அதிகரித்துள்ளதாம். இந்தியாவை விட, தான் அணு ஆயுதத்தில் பலசாலியாக இருக்க வேண்டும் என்பதுதான் பாக்கின் தற்போதைய திட்டமாம்!

● கட்சியின் தோல்விக்கான காரணத்தை ஆராய அமைக்கப்பட்ட ஆத்ம பரிசோதனைக் குழுவின் அறிக்கை, அதன் தலைவர் ஏ.கே. அந்தோணியை தர்மசங்கடத்துக்கு ஆளாக்கியிருக்கிறது. தோல்விக்கு இரண்டு காரணங்கள். ஒன்று: சோனியா அந்நியர் என்பது வாக்காளர்களிடையே வெறுப்பை

## ஆத்ம பரிசோதனையில் தவிக்கும் அந்தோணி!



ஏற்படுத்தியிருக்கிறது. இரண்டாவது: பிரதமர் யார்? வாஜ்பாயா? சோனியாவா என்றால் வாஜ்பாயிக்கே அதிக ஆதரவு என்பது! இந்த அறிக்கையை எப்படி சோனியாவிடம் சமர்ப்பிப்பது என்று தவித்துக்கொண்டிருக்கிறார் அந்தோணி.

● ஒரிசாவில் சூறாவளிப் புயல் சூறையாடிக் கொண்டிருந்தபோது, முதல்வர் கிரிதர் கோமாங்கினால் ஆஸ்பத்திரியிலிருக்கும் தமது மகனைப் பார்க்கக் கூட செல்ல முடியாத நிலை. அப்போது நமது மத்திய சுகாதார அமைச்சர் குடும்பத்தோடு ஜாலியாக ஹரித்துவாருக்குச் சென்று வந்தார் என்று செய்திகள் வெளியானது. கோபமடைந்த அமைச்சர், தமது பத்திரிகைத் தொடர்பாளர்களை அழைத்து ஒரு வாங்கு வாங்கியிருக்கிறார். அன்று மாலையே, மறுப்புச் செய்தி கொடுக்கச் சொல்லியிருக்கிறார். "அமைச்சர் குடும்பத்தோடு ஹரித்துவாருக்குச் செல்லவில்லை. ஏற்கெனவே ஒப்புக் கொண்டிருந்த அரசு விழா ஒன்றுக்காக அவர் மட்டும்தான் சென்று வந்தார்!" என்று மறுப்புச் செய்தி வெளியிட்டனர். "ம்... அமைச்சர்கள் எங்கு வேண்டுமானாலும் போவார்கள். எப்படி வேண்டுமானாலும் அறிக்கை வெளியிடச் சொல்லுவார்கள். நாங்கள்தான் வீட்டுக்குக்கூட தினசரி நேரத்துக்குப் போய்ச் சேர முடிவதில்லை!" என்று அலுத்துக்கொண்டார், அமைச்சரின் பத்திரிகைத் தொடர்பாளர் ஒருவர்.

● "இந்தியர்கள் செக்ஸ் வக்கிரம் பிடித்தவர்கள்!" என்று அங்கலாய்த்துக் கொண்டிருக்கிறார், மத்திய செய்தி ஒலி - ஒளி பரப்பு அமைச்சர் அருண் ஜெய்ட்லி. இந்த டெல்லி வக்கீல், அமைச்சரானதும் செய்த முதல் வேலை, நள்ளிரவு நேரங்களில் 'பலான பலான' படங்களை ஒளி பரப்பிக் கொண்டிருந்த 'டி.பி - 6' என்ற ரஷ்யன் சேடிலைட் சேனலை ஒழித்துக் கட்டியதுதான். அதிலிருந்து அமைச்சரின் வீட்டுக்கு வக்கிரத் தொலைபேசிகள் வந்த வண்ணம் இருக்கிறதாம். எங்கிருந்து வருகின்றன என்பதை அமைச்சக அதிகாரிகளால் கண்டுபிடிக்க முடியவில்லையாம். அமைச்சர் இப்போது எம்.பி.யாக இல்லை. ராஜ்ய சபா எம்.பி. யாகவும் அவர் விரும்பவில்லை. முலாயம் சிங் காலி செய்

திருக்கும் உ.பி. கன்னோஜ் தொகுதியில் போட்டியிட்டே வெற்றி பெற விரும்புகிறார். அங்கு வாஜ்பாயின் பாப்புலாரிட்டியால் தம்மால் வெற்றி பெற முடியும் என்று நம்புகிறார் அமைச்சர். ஆனால் ஒரு ஆலோசகர், "தயவு செய்து கன்னோஜ் தொகுதியில் 'டி.பி.6' சேனலின் பாப்புலாரிட்டி ரேட்டிங்கை கணக்கெடுத்த பிறகு, போட்டியிடுவது பற்றி யோசியுங்கள்!" என்று அமைச்சரிடம் ஒரு போடு போட்டிருக்கிறார்.





• உ.பி.யின் புதிய முதலமைச்சராக ராம் பிரகாஷ் குப்தா என்கிற ஆர்.எஸ்.எஸ்.காரர் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதற்கு என்ன காரணம்? அவர் அலகாபாத் பல்கலைக் கழகத்தில் கணிதப் பேராசிரியராக இருந்தவர். அப்போது பௌதிகப் பேராசிரியராக ராஜேந்திர சிங்கும் உதவிப் பேராசிரியராக முரளி மனோகர் ஜோஷியும் பணியாற்றினார்கள். இந்த பழைய பந்தம்தான் இப்போதைய தேர்வுக்குக் காரணம் என்கிறார்கள்.

• ஒவ்வொரு முறையும் வீட்டு வசதி அமைச்சகம் தான் கிடந்து திண்டாடிக் கொண்டிருக்கிறது. காரணம், முன்னாள் அமைச்சர்கள் வீட்டைக் காலி செய்ய மறுப்பதால், புதிய அமைச்சர்களுக்கு வீடு ஒதுக்க முடிவதில்லை. இப்போது இவர்கள் திண்டாடுவது, முன்னாள் அமைச்சர் ப. சிதம்பரத்திடம். ஔரங்கசீப் ரோடில் இருக்கும் அரசு பங்களாவைக் காலி செய்ய மறுக்கிறார் இவர். வேண்டுமானால் 'மார்க்கெட் ரேட்'டில் வாடகை தந்து விடுவதாகக் கூறுகிறாராம். இவர் வக்கீல் வேறு. எப்படி வெளியேற்றுவது என்று தலையைப் பிய்த்துக் கொண்டிருக்கிறார்கள் அதிகாரிகள்.

• மீண்டும் டீசல் விலை உயரும் என்று அமைச்சரே கோடி காட்டியிருக்கிறார். சர்வ தேசச் சந்தையின் விலையுயர்வை மறுபடியும் காரணம் காட்டியிருக்கிறார். இப்படி சர்வ தேசச் சந்தையையொட்டி, இந்திய எண்ணெய் விலை நிர்ணயிக்கப்படக் கூடாது என்பதற்காகத்தான், 'எண்ணெய் இருப்பு நிதி' அமைக்கப்பட்டது. எண்ணெயில் வரும் லாபத்தைக் கொண்டு அமைக்கப்பட்ட இந்த நிதியிலிருந்து, சர்வதேச எண்ணெய் விலையுயர்வின் போது எடுத்துப் பயன்படுத்தி, இந்திய விலையை உயர்த்தாமல் இருப்பதற்காகவே இந் நிதி. இதை பட்ஜெட் துண்டுகளுக்குப் பயன்படுத்தி விட்டதால் வந்த வினை இது.

**— இந்த்ரப்ரஸ்தன்**

பொதுவாக 'பாப்' பாடல்கள் இளைய தலைமுறையின் அடையாளச் சின்னங்களுள் பிரதானமான ஒன்றாகக் கருதப்படுவது. சீனியர் சிடிஸன்களுக்கு மகாராஜபுரமும் மதுரை மணியும்தான் தோதுப்படும் என்பதாகப் பரவலான நம்பிக்கை காலங்காலமாக இருந்து வருவது. இது நிஜந்தானா? பிரசித்திபெற்ற Tommy Boy நிறுவனத்தின் லேட்டஸ்ட் வெளியீடான 'Music from the Minamax Motion Picture' - நான்கு வால்யூம் கேஸட்டுகளை மியூசிக் டுடே நிறுவனம் உரிமம் பெற்று விற்பனைக்குக் கொண்டு வந்துள்ளது. சுதந்தரத்துக்கு முன் பிறந்த நான்கு பேரிடம் அவற்றைக் கொடுத்துக் கருத்துக் கேட்டோம்.



• கண்ணய்யன்



• செண்பகாம்பாள்

ஸ்ரீரங்கம்மாளுக்கு வயது 76. 'Collective Soul : Dosage' கேஸட்டை வாக்மனில் போட்டு, அவர் காதுகளில் பொருத்திக் கேட்கச் சொன்னதும் முதலில் டிரம் சத்தத்தில் கொஞ்சம் மிரண்டார். பிறகு சுதாரித்துக் கொண்டு மௌனமா



• ஸ்ரீரங்கம்மாள்

கக் கேட்டவர், சில நிமிடங்களில் ஒரு காலை அசைத்துத் தாளம் போட்டார். மேலும் சற்று நேரம் கண்களை மூடிக் கொண்டிருந்தவர், "நல்லாத்தானே இருக்கு? ஆடவெச்சிடும் போலிருக்கே" என்றார்.

"அதெல்லாம் சரி. எவ்ளோ நேரம் கேட்பீங்க?" என்று கேட்டதும், "இன்னும் எவ்ளோ கேஸட் வெச்சிருக்கீங்க?" என்று போட்டார் ஒரு போடு!

# ஆடறீங்களா சார்?



• நடராஜன்

Al Green-இன் 'Here I am' ஐக் கேட்க ஆரம்பித்தார் ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியர் கண்ணய்யன் (65).

ஆரவாரமான உற்சாகத்துடன் ரசித்துத் தாளமெல்லாம் போட்டவர், "இது பாடறதுக்கானதே இல்லை. ஆடறதுக்குத்தான்!" என்றார்.

"ஆடறீங்களா சார்?" என்று கேட்பதற்குள், "நம்ம கர்நாடக சங்கீதத்தோடெல்லாம் ஒப்பிட முடியாது. இது ஒருவிதமான அனுபவம். கண்டிப்பா, ரசிக்க முடியாம இல்லை! பசங்க இதை வால்யூம் பெரிசா வெச்சிக் கேக்கறதுதான் மண்டைல அடிக்கறாப்பல இருக்கு. மத்தபடி மைல்டா வெச்சிக் கேட்டா, இதுவும் இதமாத்தானே இருக்கு?" என்றார்.

நடராஜன் (72) கர்நாடக சங்கீதம் அறிந்தவர். கச்சேரிகளும் செய்தவர். "காருக்குறிச்சி, மதுரை மணிதான் என் ஃபேவரிட்" என்றவரிடம் ரோஸ் ராய்ஸின் 'Wishing on a Star' ஐக் கொடுத்துக் கேட்கச் சொன்னோம்.

"ஓ, ஒண்டர்ஃபுல்! என்ன ரிதம் சென்ஸ்! கணக்குப் பண்ணிப் பார்த்தா ஆதி தாளம் நிக்கறதே! சில பீஸ்ல நம்ம ராகங்களோட சாயலும் தெரியறது. பிரமாதம்! பிரமாதம்!" என்றவரை தட்டியெழுப்பி, "இதைக் காக கொடுத்து வாங்கிக் கேட்பீங்களா?" என்றோம்.

"ஓய் நாட்?" என்றார் கூலாக.

கடைசியாக அகப்பட்டவர் செண்பகாம்பாள் (72) இவருக்குப் போட்டுக் காட்டிய பாடல், கிரேஸ் ஜோன்ஸின் 'I Need a Man'.

அம்மணியின் ஒரே வரி விமர்சனம் : "கேட்டுக்கிட்டே இருக்கலாம் போலிருக்கு."

ஆகவே வாசகர்களே, புதிய நூற்றாண்டில் பல கலாட்டாக்களுக்கான சாத்தியம் வெகு பிரமாதமாகத் தெரிகிறது. பெரிசுகளெல்லாம் எம்டீவி ஷோக்களுக்குப் போக, இளவட்டங்கள் அரியக்குடியையும் செம்மங்குடியையும் தேடி YACM உறுப்பினர்களாகப் போகிறார்கள்!

— கிச்சா

படங்கள் : வெங்கடேஷ்

**புதிய நூற்றாண்டுக்கு வரவேற்புச் சொல்லி, 'உங்கள் மனத்துக்குப் பிடித்தவருக்குப் பரிசளிக்க' என்ற கிரீடத்துடன் 'மிலேனியப் பரிசுகள்' மார்க்கெட்டில் வலம் வரத் துவங்கி விட்டன. இந்தியாவில் கூட இவற்றில் பல கிடைக்கின்றன. ஒரு தொகுப்பு :**

❖ மிகவும் விலையுயர்ந்த கார் பரிசளிக்க வேண்டுமா? உங்கள் சாய்ஸ் லெக்சஸ் எல்.எஸ்.400 அல்லது பார்ஷே 911 மாடல்தான். அட்டகாசமான உட்புற டெகரேஷன்.



எல்லாமே ஆடோமாடிக் என்று பலவித பிளஸ் பாயிண்ட்கள். காரில் இது, இப்படி இருந்திருக்கலாமோ என்ற எண்ணமே துளியும் ஏற்படாது. விலை? அதிகமில்லை ஜென்டில்மேன்! ஐம்பத்தைந்து லட்சம்தான்! இன்னும் சில மாடல்கள் இதைவிட காஸ்ட்லி!



❖ ஹஸல்பிளேட் - இது ஸ்வீடனில் தயாரிக்கப்படும் கேமரா. விண்வெளியில் புகைப்படங்கள் எடுக்க, விண்கலங்களில் பொருத்தப்படுவது இந்தக் கேமராதான். நார்மல் லென்ஸ், டெலி லென்ஸ், உடனடியாக பிரின்ட் கிடைக்கிற போலராய்டு அடாச்மென்ட் போன்ற உபகருவிகளுடன் சேர்த்து விலை: ஐந்து லட்சத்து அறுபத்தி ஏழாயிரத்து முந்நூறு ரூபாய்!

❖ பங்க் அண்டு ஒலுப்செனின் அவன்த் மாடல் மியூசிக் சிஸ்டத்தில் டால்பி ஸ்டீரியோ உட்பட ஏகப்பட்ட அடாச்மென்ட்கள். டெலிவிஷனும் இதில் அடக்கமாம். ஒரே நேரத்தில் ஆறு சி.டி.களைப் போட வசதி உண்டு. விலை? ஏழு முதல் எட்டு லட்சம் வரை.

❖ ஷ்ஃபின் விலை ஐயாயிரத்து ஐநூறு ரூபாய். ரினால்டி தயாரிப்பு. இதன் ஸ்பெஷாலிடி? நவரத்தினங்

களில் கொஞ்சம் விலை குறைவான கற்கள் இந்தக் காலணிகளில் பதிக்கப் பட்டிருக்கும்.

❖ பட்டுத் துணியில் செய்த பெண்களுக்கான கைப் பை. இதனுடன் இணைக்கப்பட்டுள்ளது வெறும் பட்டை இல்லை. தங்கமுலாம் பூசப்பட்ட வெள்ளி செயின். இந்த வெள்ளிச் செயினை ஸ்டைலாக, கழுத்தில் அணிந்து சென்றாலும் ஃபேஷன்தான்! விலை எட்டாயிரத்து ஐந்நூறு!

❖ செல்போன் : எத்தனையோ மாடல்கள் இருந்தாலும், மோட்ரோலா 3688 மாடலின் சிறப்பு : நீளம் மூணே மூணு அங்குலம். ரொம்ப



லேசானது. சப்தம் வராது. பதிலாக இலேசான வைப்ரேஷன்தான் கால் வந்தால் அடையாளம். விலை: இருபத்தி ஒன்பதாயிரம்.

❖ மடி மீது வைத்துக் கொள்ளும் லாப் டாப்

கம்ப்யூட்டர் போய் இப்போது உள்ளங்கையில் வைத்துக் கொள்ளும் Palm Top வந்து விட்டது. விலை: 32 ஆயிரம் ரூபாய்.

❖ பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்ட உடை இது. இந்த மூன்று பீஸ் உடை விலை ஒண்ணரை லட்சம். இத்தனை விலை கொடுக்கும் அளவுக்கு இதில் என்ன சிறப்பு? கிரிஸ்டல் மற்றும் தங்க மணிகள் பொருத்தப்பட்ட இதன் எடை பதினைந்து கிலோ!



❖ மிகவும் காஸ்ட்லியான சாப்பாடு தேவையா? மும்பையின் ஸோடியாக் கிரில் உணவகத்துக்குப் போங்கள். ஸ்காட் டிஷ், கனடியன், நியூஸிலாந்து உணவு வகைகளைக் கொண்ட பத்து சுவையான உணவு ஐட்டங்கள் கொண்டது. உலகின் மிக உயர்ந்த ஒயினும் உண்டு. விலை : பத்தாயிரம் ரூபாய் ஒரு தலைக்கு.



❖ கிரிஸ்டல் இங்க் பாட்டிலுடன் வருகிறது Caran Dache

# அடுத்த நூற்றாண்டைக் கொண்டாட சில பொருள்கள்!





பேனா. இந்த மாதிரி 1888 பேனாக்கள் மட்டுமே உலகில் உள்ளன. எனாமல் வேலைப்பாட்டுடன், வெள்ளிப் பேனா. தங்கத்தாலான நிப். விலை ஒரே ஒரு லட்சம் ரூபாய்.

❖ வீட்டில் வைக்கக்கூடிய நிலைக் கடிகாரம்: ஜெர்மனியில் செய்யப்பட்ட இங்கர் கடிகாரம் இது. ரூபாய் ஆறு லட்சத்து இருபதாயிரம். பதினைந்து நிமிடங்களுக்கு ஒரு தடவை ஒலி எழுப்பும். தங்கமுலாம் பூசப்பட்டது.

❖ கைக் கடிகாரம். ஒன்பது லட்சத்து அறுபத்தி இரண்டாயிரம் ரூபாயில் வாட்ச் வாங்கினால் கையில் கட்டிக் கொள்வதா? தலையில் கட்டிக் கொள்வதா? தங்க வாட்ச். ஆடோ மாடிக். ஆண்டுக்கு மிகக் குறைவான எண்ணிக்கையில் தான் இந்த மாடல் தயாரிக்கப்படுகிறது.

தொகுப்பு :
**கௌதம் ராம்**




# அஞ்சு லட்சம் பட்ஜெட்டில் அட்டகாசம்!

ரீஸன்டா வந்திருக்கற காலச்சுவடு இஷ்யூலலத்தின் அமெரிக்க ரைட்டர் மார்க் ஃபூஸோட ஒரு ஷார்ட் ஸ்டோரி - ட்ரான்ஸ்லேஷன் படிச்சேன். மார்க்ஃபூஸோட பாபுலாரிடிக்கு அவரோட மாஜிக்கல் ரியலிஸத்தை விட, 'எளிமை'தான் முக்கியக் காரணமா இருக்கணும்னு தோணிச்சி. சின்னச் சின்ன சென்டன்ஸஸ், கவித்துவமான வருணைனைகள். 'நச்'னு ஒரு பாதாங்கொட்டை உடையறாப் பல உடைக்கப்படற விஷயம், புரியலைங்கற பேச்சுக்கே இடமில்லை.

இப்படிச் சொல்லும் போது எனக்கு இன்னொரு விஷயமும் தோணுது - இலக்கியத்தையெல்லாம் எழுதறவங்களே ரகம் பிரிச்சுக்கறதுன்றது எவ்வளவு தூரம் சரின்னு யோசிச்சாகணும். எங்க அப்பா காலத்துலயும் தாத்தா காலத்துலயும் எழுதினவங்க இப்படியெல்லாம் தங்களோட எழுத்துக்கு பிராண்ட் நேம் குடுத்துக்கலை - ஒரு பிராண்டுக்குள்ளே எழுதவும் முயற்சி செய்யலை. அவங்க எழுத்துல இருக்கிற ஸ்பான்டேனிடி இன்னிக்கு மாஞ்சு மாஞ்சு 'இஸம்' பண்றவங்ககிட்டே காணாம போயிடுது. போதாக்குறைக்கு, நேர்மையற்ற போர்வையிலே நிறைய ஆபாசம் - அழகான வீட்டு வாசல்ல நிறைஞ்சு கிடக்கிற குப்பைத் தொட்டி மாதிரி!

ரீசன்டா ஒரு புக் ரிலீஸ்லகூட இந்த விஷயம் விவாதமாயிடுச்சு. ஆபாச எழுத்துக்கு ஆபாசமா ஆட்சேபணை எழுந்து, அது அதைவிட ஆபாசமா பேப்பர்ல ரிப்போர்ட் ஆகியிருக்கு. சென்ட்ரல் ஜெயில் கலவரம் மாதிரி இது எவ்வளவு வேகமா பரவுது பாருங்க. எழுத்தாளர்கள் இன்னும் பொறுப்பா நடந்துக்கறது அவங்களுக்கும் நல்லது, சொஸைட்டிக்கும் நல்லதுன்னு நான் சொன்னா இது சுமி சூப்பர்மார்க்கெட்டா இல்லை ஔவையார் அங்காடியான்னு கேப்பீங்க... ஸோ லெட் மி சேஞ்ச் த சப்ஜெக்ட்.

நித்யஸ்ரீ வயலின் வாசிப்பாரான்னு போன வாரம் தும்புரு சார்கிட்டே நான் கேள்வி எழுப்பினதைப் பார்த்துட்டு ஒய்ரசிளம்லேருந்து அவசரமா ஃபேக்ஸ் அனுப்பியிருக்காங்க பத்திரிகைத் தொடர்பாளர் இருத்திகா. 'On a Musical Track' நிகழ்ச்சியில, 31.12.99 அன்னிக்கு, மூணு தலைமுறை வித்வான்கள் ஒரு மேடையில இருப்பாங்கன்னு எழுதியிருக்கியே சுமி... உங்க ரீடர்ஸெல்லாம் தியாகராஜ ஆராதனை மாதிரியான நிகழ்ச்சின்னு நினைச்சுடப் போறாங்க. இதுல முப்பது சீனியர் வித்வான்கள் ரேர் காம்பினேஷன்ஸ்ல இணைஞ்சு மினி கச்சேரி பண்ணுவாங்க. அம்பது யூத் ஸ்டார்ஸ் சேர்ந்து பாடப் போறாங்க - அதுல ஒரு டஜன் வயலின், ம்ருதங்கம்... அப்புறம் ஐநூறு ஸ்கூல் குழந்தைங்க... வேண்டாம் - அது சர்ப்ரைஸா இருக்கட்டும். ஆல்ஸோ, சுதா ரகுநாதனுக்கு இந்த ப்ரோக்ராம்ல ரொம்ப இம்பார்டன்ட் ரோல். அது என்னன்றதையும் நீ பொறுத்திருந்துதான் பார்க்கணும் சுமி'ன்றாங்க இருத்திகா.

பாட்டு தவிர, நிகழ்ச்சியில ஒரு மணி நேரம் வீடியோ காட்சியும் உண்டாம். பொறுப்புகளை ஒய்ரசிளம் மெம்பர்ஸுக்குப் பிரிச்சுக் கொடுத்து தகவல், போட்டோ, வீடியோ கிளிப்பிங்னு சேகரிச்சுக்கிட்டு வர அனுப்பி வைச்சிருக்கார் நிகழ்ச்சி கோ ஆர்டினேடர் ஆனந்த் சிவா.

நிகழ்ச்சிக்கு பட்ஜெட் அஞ்சு லட்சமாம்! ரொம்ப பெருந்தன்மையோட ஸ்பான்ஸர் பண்ணப் போறாங்க சத்யம் ஆன்லைன்.

"ரஜினி படம் ஃபர்ஸ்ட் டே ஃபர்ஸ்ட் ஷோ மாதிரி டிக்கெட்டுக்கு அதுக்குள்ளேயே டிமான்ட் சுமி..."ன்னார் ஆனந்த்.

மன்ற உறுப்பினர்களுக்கு அட்வான்ஸ் புக்கிங் எடுத்துக்குவாங்களா?

— சுமி

வளமான எதிர்காலம்

பாதுகாப்பான முதலீடு

# தமிழக அரசு நிதி நிறுவனமான

# பவர்ஃபைனான்ஸ்

## வழங்கும்

| 13.14% | 18.18% |
|---|---|
| 36 மாதங்கள் மற்றும் அதற்கு மேற்பட்ட காலத்திற்கு மாதாந்திர வட்டி 13%<br>12 மாதங்கள் & 1 நாளுக்கு 12.12%<br>25 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 12.63% | 60 மாதங்களுக்கு மாதாந்திர கூட்டுவட்டி ஆண்டிற்கு 13%) |

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

**(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)**

பவர்ஃபின்

84, டிடிகே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.

தொலைபேசி : 4997689, 4995648.

28-9-99 தேதியிட்ட 'எகனாமிக் டைம்ஸ்' இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

DIPR/1467/DIS/99

**1999 - தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம் மற்றும் சமூக ஒற்றுமை ஆண்டு.**

# மறுக்கிறார் மேயர்!

அன்பார்ந்த ஆசிரியர் அவர்களுக்கு,

14.11.99 நாளிட்ட கல்கி வார இதழில் "நெல்லுக்குப் பாய்ந்தது" என்ற தலைப்பில் சென்னை மாநகராட்சியைப் பற்றி சில செய்திகளை வெளியிட்டு இருக்கிறீர்கள்.

'ஏதாவது குற்றச்சாட்டுக்கள் கூறப்படுமானால் அதைப் பற்றித் தீர விசாரித்து, உண்மையிருந்தால் திருத்திக்கொண்டு, தவறாக இருந்தால் மறுப்புத் தெரிவிக்கும் நல்ல பழக்கத்தை வைத்திருக்கிறது மேயர் தலைமையிலுள்ள சென்னை மாநகராட்சி' என்று குறிப்பிட்டு இருக்கிறீர்கள். எங்களது நிர்வாகத்தின் மீது தாங்கள் வைத்திருக்கும் மதிப்பிற்கும், நம்பிக்கைக்கும் நன்றி தெரிவித்துக் கொள்வதுடன், உங்களைப் போன்ற ஏடுகளின் நம்பிக்கைக்குச் சிறிதும் குந்தகம் இல்லாமல் என்றென்றும் அதே உறுதியுடன் செயல்பட்டு வருவதுதான் இந்த மாநகராட்சியின் நோக்கம் என்பதை மீண்டும் தெளிவுபடுத்திட விரும்புகிறேன்.

சென்னை மாநகரில் கட்டப்படும் 10 மேம்பாலங்களுக்கான உத்தேச மதிப்புத் தொகை 33 சதவிகிதம் கூடுதலாக உயர்த்தப்பட்டு இருப்பதுதான் இப்போதைய பரபரப்பான விவகாரம் என செய்தி வெளியிடப்பட்டுள்ளது.

மாநகரில் கட்டப்பட்டு வரும் 10 மேம்பாலங்களுக்குத் தயாரிக்கப்பட்ட மதிப்பீட்டுத் தொகை ரூ. 115.50 கோடி ஆகும். குறைந்த ஒப்பந்ததாரர்களுக்கு ஒப்பங்கள் நிர்ணயம் செய்யப்பட்டு, பணி ஒப்படைத்த ஒப்பத் தொகை ரூ.92.50 கோடி. இதன்மூலம் மாநகராட்சி மிச்சப்படுத்திய தொகை ரூ. 23.00 கோடி. பொது மக்களின் பணம் விரயம் ஆகாமல் நியாயமான, நேர்மையான முறையில் பணிகள் நடைபெற்று வருகின்றன என்பதற்கு இதுவே எடுத்துக்காட்டு ஆகும்.

காண்ட்ராக்டர் பில்கள் பாஸ் செய்யப்படுவதற்கு சீனியரான ஓர் அதிகாரியை நியமித்திருப்பதாகவும் அந்த அதிகாரி 'இரக்கம்' காட்ட முயற்சிப்பதாகவும் கூறப்பட்டுள்ளது. இது ஆதாரமற்றது என்பதை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

மேம்பாலப் பணிகள் அனைத்தும் மதிப்பீட்டுத் தொகையைவிட குறைவான தொகையில் முடிக்கப்படும். பணிகள் துவங்கப்பட்ட பின்னர், மதிப்பீட்டுத் தொகையிலோ, விலைப் புள்ளியிலோ எந்தவிதமான உயர்வும் இல்லை.

இந்தச் செய்தி ஆதாரமோ, அடிப்படையோ இல்லாமல் முற்றிலும் உண்மைக்குப் புறம்பான செய்தி என்பதைத் தெளிவுபடுத்த வேண்டியது எனது கடமை எனக் கருதுகிறேன்.

மு.க. ஸ்டாலின்,
மேயர்,
சென்னை மாநகராட்சி.








1999 நவம்பர் 28
பிரமாதி கார்த்திகை 12
மலர் : 58
இதழ் : 18

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## (த)டம் (மா)றிய (கா)ங்கிரஸ்!

ஊழல் குற்றச்சாட்டு சுமத்தப்பட்ட ஜெயலலிதாவின் கட்சியுடன் தேர்தல் கூட்டணி அமைக்க காங்கிரஸ் தலைவர் நரசிம்மராவ் முடிவு செய்தபோது என்ன நடந்தது என்பதை தமிழகம் இன்னும் மறந்துவிடவில்லை. மூப்பனார் தலைமையில் தமிழக காங்கிரஸின் முக்கியஸ்தர்கள் கட்சியை விட்டுப் பிரிந்து வந்து, தமிழ் மாநில காங்கிரஸ் என்று தனிக்கட்சி ஆரம்பித்தார்கள். நரசிம்மராவின் கொடும்பாவி எரிக்கப்பட்டது!

'ஹீரோ'வாக அன்று உயர்ந்த தலைவர் கருப்பையா மூப்பனார் இன்று ஜீரோ நிலைக்குத் தாழ்ந்திருப்பதுதான் வேதனை!

பாண்டிச்சேரியில் இனி தி.மு.க. ஆட்சியை த.மா.கா. ஆதரிக்காது என்று முடிவெடுக்கப்பட்டுள்ளது. தமிழகத்தைப் பொறுத்தவரையில் ஆளுங்கட்சியுடனான தோழமைக்கும் குட்பை சொல்லியிருக்கிறது த.மா.கா. சட்டசபையில் அக்கட்சி இனி எதிர்க்கட்சியாகச் செயல்படும் - அதுவும் அ.தி.மு.க.வுடன் இணைந்து! அரசுக்கு எதிரான எல்லாப் போராட்டங்களிலும் அ.தி.மு.க.வுடன் த.மா.காவும் பங்கேற்கும் என்றும் முடிவு செய்திருக்கிறார்கள்.

'96 தேர்தல்களில், தி.மு.க. - த.மா.கா. கூட்டணி அமோக வெற்றி பெற்று, தமிழகத்தில் தி.மு.க. ஆட்சி அமைத்தபோது, ஒரு சிறந்த தோழமைக் கட்சியாக மட்டுமின்றி, சமயங்களில் பொறுப்புள்ள எதிர்க்கட்சியாகவும் செயல்பட்டது த.மா.கா. அதன் உறுப்பினர்கள் தெளிவோடும், தார்மிக பலத்தோடும் ஆட்சியை விமர்சித்தும் ஆலோசனைகள் வழங்கியும் ஆரோக்கியமான




ஜனநாயகச் சூழலை ஏற்படுத்தினார்கள். சொக்கர், அழகிரி போன்றோர் கம்பீரமாகவும் கண்ணியத்துடனும் எதிர்த்தார்கள்.

ஆனால், இப்போது அதே த.மா.கா., சட்டசபையில் அ.தி.மு.க.வுடன் இணைந்து வியூகம் அமைக்க முடிவு செய்துள்ள பிறகு, அதன் குரல் நிச்சயமாகப் பழைய பலத்துடன் ஒலிக்கப் போவதில்லை. பொதுவாக, எதிர்க்கட்சிகளின் வேலையே எதிர்ப்பதுதான் என்பதால், எதிர்க் கட்சியைக் காட்டிலும் தோழமைக் கட்சியின் விமர்சனத்துக்கு மதிப்பு அதிகம்.

இப்போதோ, தோழமைக் கட்சி என்ற தகுதியை இழந்து விட்ட த.மா.கா., தார்மிக பலமற்ற அ.தி.மு.க.வுடன் இணைந்து சட்டசபையில் இயங்க முடிவு செய்திருப்பதால் மிகவும் பலவீனப்பட் டிருக்கிறது.

டெல்லி டீ பார்ட்டியைத் தொடர்ந்து, கடந்த ஆண்டு மத்திய அரசு கவிழ்க்கப்பட்ட போது, மாற்று ஆட்சி அமைக்க பெரிதும் முயன்றது காங்கிரஸ். அப்போது த.மா.காவின் ஆதரவு கோரப்பட்டது என்பதும் ஜெயலலிதா இடம்பெறும் கூட்டணியில் த.மா.கா. இடம்பெறாது என்று மூப்பனார் மறுத்ததும் கூட யாருக்கும் இன்னும் மறந்து போய் விடவில்லை.

'ஊழலையும் ஒதுக்குவோம்; மதவாதத்தையும் ஒதுக்குவோம்' என்கிற நிலையை மேற்கொண்டுதான் த.மா.கா. 1999 தேர்தலின் போது, வாக்குகள் பிரிந்து போவது பற்றிக் கூடக் கவலையின்றி மூன்றாவது அணியாகப் போட்டியிட்டது.

இத்தனைக்கும் பிறகு, இன்றைக்கு அ.தி.மு.க.வுடன் நல்லுறவு; மறைமுகத் தொடர்பு என்று தீர்மானித்து த.மா.கா. தடம் மாறியிருப்பது நல்லதற்கல்ல. எந்த ஊழலுடன் காங்கிரஸ் கைகோத்ததற்காக ஆட்சேபித்ததோ, அதே ஊழலோடு இன்று கைகுலுக்குகிறது த.மா.கா. இதற்குத் தரப்படும் விளக்கங்களும் சமாதானங்களும் வெறும் சப்பைக்கட்டுதான் என்பது எல்லோருக்குமே தெரியும். சட்டசபையில் சேர்ந்து இயங்குவதென்பது, வரவிருக்கும் தேர்தலில் கூட்டணி அமைத்துக் கொள்வதற்கான முதல் படிதான்.




தனிக்கட்சியாகவே இயங்குவோம் காங்கிரஸுடன் இணைய மாட்டோம் என சில மாதங்கள் முன்புதான் த.மா.கா. செயற்குழு முடிவு செய்தது. ஆனால் இன்றோ அக் கட்சி தன்னை காங்கிரசுக்குள் கரைத்துக் கொண்டு அ.தி.மு.க.வின் காலில் விழத் தயாராகி விட்டது.

## குண்டர்கள் இரட்டை ராஜ்ஜியம்!

தமிழக முதல்வரின் கூற்றுப்படி, சென்னை மத்திய சிறையில் நடந்த கலவரம் பிற்பகல் ஒரு மணிக்குத்தான் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. 17.11.99 காலை எட்டு மணிக்கு, பாக்ஸர் வடிவேலு இறந்ததாகச் செய்தி வந்தபோது ஆரம்பித்த கலவரம் இது! ஐந்து மணி நேரம் நீடித்து, பத்து உயிர்களை பலிகொண்டு, நூற்றுக்கும் அதிகமானவர்களைக் காயப்படுத்தியுள்ளது. சிறைக்கு வெளியே மட்டுமின்றி சிறைக்கு உள்ளேயும் குண்டர்கள் ராஜ்ஜியம் கோலோச்சுவதைத்தான் இந்த நீடித்த, பயங்கர கலவரம் உணர்த்துகிறது.

சிறைக்குள் கஞ்சா வியாபாரம் நடத்தி வந்தனர் கைதிகள் என்பது ஒரு செய்தி. அவர்களுக்கென பார்வையாளர்கள் கொண்டு வந்த பழத்தையும் பிஸ்கெட்டையும் கூட காவலர்கள் பிடுங்கிக் கொண்டனர் என்பது இன்னொரு செய்தி. சிறைக்குள் கைதிகளுக்கு அரிவாள் போன்ற பயங்கர ஆயுதங்கள் எப்படி கிடைத்தன என்பது ஆச்சர்யம்.

உண்மை எதுவாயினும், சிறை நிர்வாகம் உடனடியாக சீர்திருத்தப்பட வேண்டிய நிலையில் இருப்பதை மறுக்க முடியாது.

சம்பவத்தை ஆராய நீதி விசாரணை நடத்தப்படவுள்ளது. ஏற்கெனவே இரு விசாரணை கமிஷன்கள், நீதிபதி எம். எம். இஸ்மாயில் பொறுப்பில் இயங்கி அறிக்கைகள் தரப்பட்டுள்ளன. ஆனால், அத்தகைய கமிஷன் அறிக்கைகளைச் செயல்படுத்தாமல், பத்திரமாக அரசு அலுவலகங்களில் சிறைப்படுத்தி வைப்பதில் என்ன பயன்? ○

சென்னை சென்ட்ரல் ஜெயிலில் நடந்துள்ள பயங்கரமான கலவரத்துக்கு பாக்ஸர் வடிவேலு என்ற ரௌடியின் மரணம்தான் பிள்ளையார்சுழி.



• பாக்ஸர் வடிவேலு



வடசென்னைப் பகுதியில் காசிமேட்டைச் சேர்ந்தவன் வடிவேலு. வயது முப்பத்து மூன்று. மீனவ இனம். முறையாகக் குத்துச் சண்டை கற்றுக்கொண்டு பல போட்டிகளிலும் கலந்துகொண்டு வெற்றி பெற்றவன். எதிரி, தாக்குப்பிடிக்க முடியாமல், சோர்ந்து விழுகிறவரை வன்மையாகத் தொடர்ந்து தாக்கி, வீழ்த்துகிற 'நாக் அவுட்' முறை குத்துச் சண்டையில் வடிவேலு கில்லாடி. இவனது பாக்ஸிங் திறமையை நம்பி வடசென்னையில் எண்பதுகளின் ஆரம்பத்தில் 'பெட்டிங்' அமோகமாக நடந்ததாகச் சொல்லப்படுகிறது. குத்துச்சண்டை வெற்றி வீரன் என்கிற முறையில், வடிவேலுவை எம்.ஜி.ஆரே பாராட்டியிருக்கிறார். 88-ம் வருடம்வரை வடிவேலு குத்துச் சண்டைப் போட்டியில் ஒருபோதும் தோற்றது கிடையாது என்கிறார்கள்.

எண்பத்தைந்தாம் வருடத்துக்குப் பின், வடிவேலுவுக்கு வட சென்னைப் பகுதி அ.தி.மு.க.வின் அஞ்சா நெஞ்சனுடன் நெருக்கம் ஏற்பட்டது. அதே சமயம், கட்டைப் பஞ்சாயத்து, வழிப்பறி போன்ற செயல்களிலும் ஈடுபட்டான் வடிவேலு.



வடசென்னைப் பகுதியில் பல்வேறு அ.தி.மு.க. கொடிக் கம்பங்களை இவன் அந்த அரசியல்வாதிகளின் அரவணைப்பில் நட்டதற்கு, அந்தக் கொடி மரங்களிலுள்ள கல்வெட்டுகளே சாட்சி!

**1991-**ல் தராசு பத்திரிகை அலுவலகத்தை, ஒரு ரௌடி கும்பல் தாக்கியது. சத்தியமூர்த்தி, சுப்ரமணியன் என்ற இரண்டு ஊழியர்கள் அதில் உயிரிழந்தனர். பல லட்சத்துக்கு சேதம். இந்த வழக்கில், வடிவேலு கைது செய்யப்பட்டான். தான் தராசு அலுவலகத்துக்கு வந்தது உண்மைதான். ஆனால், தான் யாரையும் தாக்கவில்லை





# திட்டமிட்ட வன்முறையா?

என்று வாக்குமூலம் கொடுத்தான். தன்னை, 'வீடு காலி செய்ய வைப்பதற்காக' என்று சொல்லி எழும்பூரில் சையத் காலனியிலிருந்த தராசு அலுவலகத்துக்கு அனுப்பி வைத்தவர் என்று அப்போதைய சென்னை மாநகர போலீஸ் துணை கமிஷனராக இருந்த ஒருவர் பெயரைக் குறிப்பிட்டான் வடிவேலு. ஆனால், சீக்கிரமே அந்த துணை கமிஷனர் இறந்து விட்டதால், யாருடைய உத்தரவின் பேரில் ரௌடிகள் அனுப்பப்பட்டனர் என்று இன்று வரை தெரியவில்லை.

அது மட்டுமல்ல. தராசு அலுவலகம் தாக்கப்பட்ட வழக்கு எட்டு வருடங்களாக நடந்து கொண்டிருக்கிறது. இன்னமும், சூத்திரதாரி யார் என்பது கண்டு பிடிக்கப்படவில்லை.

வடிவேலு ஜாமீனில் வெளிவந்தவுடன்,



அரசியல் போஷகர்கள் சற்றே ஒரம் ஒதுங்கிக் கொள்ள, கையிலிருந்த பணம், தன் மீதிருந்த கேஸ்களைச் சந்திப்பதில் கரைந்து விடவே, சாப்பாட்டுக்குக் கூட வழியில்லாமல் தவித்தான் வடிவேலு.

தராசு அலுவலகத் தாக்குதல் சம்பந்தப்பட்ட கேஸில், நடக்கும் ஏழாவது மரணம் இது. இந்த வழக்கில் இதுவரை மூன்று சாட்சிகள், இரண்டு அப்ரூவர்கள், துணை போலீஸ் கமிஷனர் ஆகியோர் இறந்துள்ளனர். இந்தப் பட்டியலில் லேட்டஸ்ட்டாக, வழக்கின் முதல் அக்யூஸ்டான வடிவேலு சேர்ந்திருக்கிறான்.

சுமார் பத்து மாதங்களுக்கு முன் குண்டர்கள் சட்டத்தில் கைதான பாக்ஸர் வடிவேலு, இன்னும் இரண்டு மாதத்தில் வெளியே வந்திருப்பான். அதற்குள் அவனுக்கு இப்படியொரு முடிவு வந்து விட்டது. அவன் காலமானதைத் தொடர்ந்து இப்படி வரலாறுகாணாத கலவரம் ஏன் வெடித்தது?

சிறையில் வெள்ளை ரவி, சேரா, (சேரா இறந்து விட்டான் என்றாலும் அவனது ஆட்கள் ஒரு குழுவாக இயங்குகின்றனர்.) பாக்ஸர் வடிவேலு, வெல்டிங் குமார் என்று நாலு தாதாக்களும், ஜெயிலுக்குள்ளேயே தங்களுக்கென்று கும்பல் சேர்த்துக் கொண்டிருந்தனர். இவர்கள் தவிர அல்-உமா பாட்சா கும்பல் மற்றும் விடுதலைப் புலிகள் கும்பலும் உண்டு.

பொதுவாகவே, சிறைவிதிகள் மீறப்படுவதாகச் சொன்னாலும், சில கெடுபிடிகள் உண்டு என்பதால், அவை பிடிக்காத தாதா கைதிகள், ஏதாவது சிறு பொறி கிடைத்தாலும், உடனே கலாட்டா, கலவரம் என்று இறங்கிவிடக் காத்திருப்பார்கள். அது தவிர, துணை ஜெயிலர் ஜெயகுமார் மிகவும் கண்டிப்பான, நேர்மையான அதிகாரி. ஜெயிலுக்குள் போதைப் பொருள்களை அனுமதிக்காமல் தடைபோட்ட ஜெயகுமாரின் மீது கைதிகள் கோபம் கொண்டனர். வடிவேலுவின் மரணம் உணர்ச்சிகளை மேலும் தூண்டியது.

சென்னை மத்திய சிறையின் கொள்ளளவு ஆயிரத்து நானூறு பேர் மட்டும்தான். ஆனால் தண்டனை மற்றும் விசாரணைக் கைதிகள் என்று இரண்டாயிரத்து ஐந்நூறு பேர் சிறையில் இருக்கிறார்கள்! ஆனால், இதற்கு ஏற்ற அளவில் பாதுகாப்புக்குப் போதுமான ஆள் பலம் இருக்கிறதா?

ஜெயிலுக்குள் ஆயுதங்கள் வந்தது எப்படி? சிறையின் சமையலறையில் புகுந்து எல்லாவற்றையும் அடித்து, உடைத்து, அங்கிருந்த சில ஆயுதங்களை எடுத்துக்கொண்டு விட்டனர். சிறையினுள் இருக்கும் ஆயுத அறையின் பூட்டை உடைத்து ஆயுதங்களைக் கைப்பற்றியுள்ளனர் என்பது செய்தி.

வெளியேயிருந்தும் ஆயுதங்கள் சிறைக்குள் வந்துள்ளனவா? எப்படி? லஞ்சம் விளையாடியிருக்கிறதா என்பதெல்லாம் நீதி விசாரணையில் வெளிப்பட்டாக வேண்டும்.

பாக்ஸர் வடிவேலுவின் போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் என்ன சொல்லுகிறது? "இயற்கையான மரணம் என்பதாகவும், இதில் சந்தேகத்துக்கு இடமாக ஏதுமில்லை" என்றும் தெரிவிக்கிறது ஜி.ஹெச். வட்டாரம். ஆனால், சமீபகாலமாகவே, போதைப் பொருள்களின் ஆதிக்கத்துக்கு அடிமையாகிப் போன வடிவேலு, அதன் வரத்துத் தடைபட்டுப் போனதால், உடல் ரீதியாகவும், மனரீதியாகவும் வெகுவாய் பாதிக்கப்பட்டிருக்கக்கூடிய வாய்ப்புகள் இருக்கலாம்.

நீதி விசாரணைக்கு உத்தரவிடப்பட்டுள்ளதால், போலீஸ் அதிகாரிகள் கருத்துத் தெரிவிக்கத் தயங்குகிறார்கள். இரண்டாயிரத்துக்கும் அதிகமானவர்கள் கொண்ட இடத்தில், வரலாறுகாணாத விதமான கலவரம் நடக்கிற போது, ஓர் அதிகாரி உயிருடன் எரிக்கப்பட்ட சூழ்நிலையில் நாங்கள் இயங்கியிருக்கிறோம். ஐம்பத்தைந்து போலீசார் காயம் அடைந்துள்ளனர். எங்கள் நடவடிக்கை நியாயமானதா என்பதை நீதி விசாரணை கூறிவிடும் என்கின்றனர்.

"சட்டசபைத் தொடரின் தொடக்க நாளன்று இத்தகைய சம்பவம் நடந்திருக்கிறதே? ஜெயிலுக்குள் கலவரம் தொடங்கிய சிறிது நேரத்துக்கெல்லாம் ஜெயில் வாசலில் பெரும் கும்பல் கூடி, போலீசாருக்கு எதிராக கோஷமிட்டது எப்படி? ஜி.ஹெச்சில் கூட்டம் எப்படி அவ்வளவு விரைவில் சேர்ந்தது? கால் மணி நேரத்தில் ஸ்தலத்தில் இருந்த ஒரு டீ.வி. குழு எப்படி வந்து சேர்ந்தது? ஜெயில் கலவரம் யதேச்சையான ஒன்று என்று நம்புவது சிரமமாக இருக்கிறதே!" – இதுதான் கமிஷனர் அலுவலகத்துக்கு வரும் பத்திரிகையாளர்கள் மத்தியில் அடிபடுகிற பேச்சு!

**— கௌதம் ராம்**

படங்கள்: **சௌந்தரராஜன்**

ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மஹா பெரியவா துணை

# இறைவன் நற்பணி மன்றம், பொன்னூர்

## பொன்னூரில் ஒரு Guest House

மயிலாடுதுறை தாலுக்காவில் வாகீசப் பெருமானும் திருஞானசம்பந்தரும் தங்கள் தேவாரங்களில் 'திருஅன்னியூர்' என்று குறிப்பிடும் 'பொன்னூர்' கிராமம் ஸ்ரீ ப்ருஹந் நாயகி சமேத ஸ்ரீ ஆபத்ஸஹாயேஸ்வரர் மற்றும் கரிய மாணிக்கப் பெருமாள், மாரியம்மன், ஐயனார், காமாட்சி கோயில்களின் மஹா கும்பாபிஷேகங்கள் இரண்டரையாண்டுகளுக்கு முன்பு பகவத் கிருபையாலும் ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் அனுக்ரஹத்தாலும் விமரிசையாக நடந்தேறியது யாவரும் அறிந்ததே. 'வேண்டுதல்' செலுத்த வரும் அன்பர்கள் தங்கி வழிபாடு செய்ய உதவும் வகையில் சிறிய 'தங்கும் விடுதி' ஒன்று (Small Guest house) அன்பர்கள் தந்த பொருளுதவியைக் கொண்டு கட்டி முடித்திருக்கிறோம். சென்ற 21.11.1999 ஞாயிற்றுக்கிழமை சுப வேளையில் க்ருஹப்ரவேசம் எளிய முறையில் நடந்தேறியது.

பொன்னூர் கிராமக் கோவில்களிலெல்லாம் நித்யபூஜை இடைவிடாமல் செவ்வனே நடைபெற்று வர குடும்பத்திற்கு ஆயிரம் ரூபாய் என்று அன்பர்கள் நன்கொடை அளிக்க வேண்டுகிறோம். காசோலை (அ) D.D.யில் "IRAIVAN NARPANI MANDRAM" என்று குறிப்பிட்டு தங்கள் பெயர்கள், நக்ஷத்ரங்களோடு முழு முகவரியையும் எழுதி கீழ்கண்ட விலாசத்துக்கு அனுப்பவும். பக்தர்கள் அனைவருக்கும் குரு அருளும் திருஅருளும் குறைவறக் கிடைக்கப் பிரார்த்திக்கிறோம்.

No.1, 2ndCross Street,
E.K. Raghava Reddiar Colony,
Jaffarkhanpet, Chennai - 600 083

இப்படிக்கு
V. ராஜாமணி
for இறைவன் நற்பணி மன்றம்,
(பொன்னூர்)

**நேரு தமது மகள் இந்திரா காந்திக்கு எழுதிய கடிதங்களுக்குப் பிறகு, சரித்திரம் படைக்கப் போகின்றன, எழுத்தாளர் ஷோபா டே தமது மக்களுக்கு எழுதிய லிகிதங்கள்....!**

ஷோபா டே, பேச்சுவாக்கில், தம் பப்ளிஷர்களிடம், "நான் முக்கியமான தினங்களில் என் குழந்தைகளுக்குக் கடிதங்கள் எழுதுவேன்'' என்றிருக்கிறார். அவ்வளவு தான்!

பெங்குயின்காரர்கள் உடனே, 'அதை எல்லாம் கொடுங்களேன்... அப்படியே ஒரு புத்தகமாக வெளியிட்டு விடலாம்' என்றிருக்கிறார்கள். ஆனால் இவரது குழந்தைகள் 'ஒரிஜினலை'க் கொடுக்க மறுத்து விட்டதாலும், மிலெனிய வெளியீடாக அந்தப் புத்தகம் வெளிவர இருந்ததாலும், ஷோபா டே அத்தனையையும் மறுபடியும் எழுத ஆரம்பித்தார். மார்ச்சில் துவங்கி நவம்பர் தொடக்கத்தில் முடித்ததை, நவம்பர் இறுதிக்குள் கடைகளில் பிடித்துவிட முடியும்.

எழுதும்போதே குழந்தைகளை ஒரு பார்வை பார்க்க இவரே அனுமதித்தாலும், அவர்கள் கண்ணியமாக மறுத்துவிட்டனராம்! ஆனாலும் என்ன எழுதியிருக்கிறார் என்பது பற்றி எல்லோருமே ஆர்வமான படபடப்புடன் காத்திருக்கிறார்கள்.

"பின்னட்டையில் லேட் நைட் பார்ட்டிகள், டீன் ஏஜ் கவலைகள் போன்றவற்றைப் பற்றி எல்லாம் அம்மா கவலைப்பட்டிருக்கிறார்; ஆனால் அது நிச்சயம் என்னைப் பற்றியது அல்ல'' என்கிறார் மூத்த மகள் ராதிகா.

"அம்மாவுக்கு ஃபிக்ஷன் போரடித்து விட்டதென்று தெரியும்; இப்படி ஏதாவது செய்வார் என எதிர்பார்த்துக் கொண்டே இருந்தேன்'' என்கிறார் மகள்களில் இளையவரான ஆதித்யா(24). அவந்திகா(21), அருந்ததி (14), அநந்திதா(10) எல்லோருமே "நெர்வஸாகி''யிருக்கிறார்கள்– "அம்மா நிறையவே எங்களுடன் உறவாடுவார்; இதில் ஒன்றும் லெக்சரடித்திருக்க மாட்டார் என்று நினைக்கிறோம். ஆனால் எந்தெந்த சம்பவங்களை நினைவு கூர்ந்திருக்கிறார் எனப் பார்க்க ஆவலாயுள்ளோம்'' என்கிறார்கள் கோரஸாக!

எல்லா கடிதங்களும் எல்லோருக்குமல்ல! சில பெண்களுக்கு; சில பையன்களுக்கு; சில பொதுவானவை; சில குறிப்பிட்ட பெண்ணுக்கோ, பிள்ளைக்கோ...

"இது குழந்தை வளர்ப்பில் என் அனுபவங்களின் பிரதிபலிப்பு... குழந்தை வளர்ப்பு போதினி எல்லாமில்லை; என் அனுபவங்கள் உங்களுக்கு உபயோகமாக இருந்தால் சந்தோஷம்... அவ்வளவே'' என்னும் டே, ஆணித்தரமாகக் கூறும் ஒரே ஒரு அட்வைஸ்– " குழந்தைகளை நம்பிக்கை எனும் கரங்களால் தழுவுங்கள்; இந்தக் கையில்லை என்றால் வேறு எத்தனை கையிருந்தும் பயனில்லை''–

250ரூபாய் விலையுள்ள இந்தப் புத்தகத்திலிருந்து, மாதிரிக்கு ஒரே ஒரு கடிதம் இதோ–

என் அன்புமிக்க மகள்களே,

கொஞ்ச நாளாகவே உங்கள் எல்லோரிடமும் ஒரு கேள்வி கேட்க வேண்டும் என முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். இத்தனை நாட்களாகக் கேட்காததற்குக் காரணம், உங்கள் பதிலை எதிர்கொள்ள நான் தயாராகவில்லை என்பதே! கடைசியில் அந்தத் தருணம் வந்தே விட்டது.

பக்கத்திலுள்ள ஒரு 'க்ளப்'பில் என்னைப் பேச அழைத்திருந்தபோதுதான் முகத்தில றைந்த மாதிரி அந்தத் தருணம் என்னை எதிர்கொண்டது! கூடியிருந்த பெண்களின் மத்தியில், நான் 25 வருடமாகப் பழகிவந்த அழகான, அறிவுள்ள, திறமையான ஒரு முகம் பளிச்சிட்டது. அவளுக்கு டீன் ஏஜில் ஒரு மகள் இருக்கிறாள்.

## ஒரிஜல்

அவள் திடீரென்று என்னை நோக்கி, "உன்னுடைய பெண்களாயிருப்பதைப் பற்றி உன் பெண்களே என்ன நினைக்கிறார்கள் ஷோபா? நீ ஒரு 'ஹை-ப்ரொஃபைல்' பெண்மணி; அழகாக வேறு இருக்கிறாய்; நிச்சயம் உன் பெண்களை உன்னுடன் ஒப்பிடாமல் இருக்க மாட்டார்கள்; அவர்களுக்கு அது பிடிக்காமலும் இருக்கலாம்; இதுவே அவர்களை ஒரு சுமையாகவும் அழுத்தலாம்; உனக்கு அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பது தெரியுமா?'' என்கிறாள்.

என் அன்புக் கண்மணிகளே, நான் உங்கள் முன் இந்தக் கேள்வியை வைக்கிறேன். உங்களுக்கு என் மகள்களாய் இருப்பதில் ஏதேனும் சங்கடமிருக்கிறதா? உங்களை ஒருவருக்கொருவருடனோ, என்னு

# ஓடுகிறது "ஸ்பீட் போஸ்ட்"

டனோ அடிக்கடி ஒப்பிடுகிறார்களா? அது ஒரு அனாவசிய பாரமாக உங்களை அழுத்துகிறதா? நன்றாகச் சிந்தித்து விட்டு பதில் சொன்னால் போதும்.

நான் அந்தப் பெண்மணிக்கு என்ன பதில் சொன்னேன் என்று தெரிந்து கொள்வதில் உங்களுக்கு ஆர்வமிருக்கலாம்; நான் தட்டிக் கழிக்கப் பார்த்தேனா? பொய் சொன்னேனா? புத்திசாலித்தனமாக பதிலிறுத்தேனா? எல்லாவற்றிலும் கொஞ்சம் கொஞ்சமிருக்குமென நினைக்கிறேன்.

நான் பளிச்சென்று 'என் பெண்களுக்கெல்லாம் அவரவர் தனித்தன்மை என்ற பாதுகாப்பு வளையம் உண்டு; அவர்கள் எந்த பாரத்தையும் சுமப்பதாக நான் நினைக்கவில்லை; பொதுவாகவே பெற்றோர்தான் இப்படிப்பட்ட சுமைகளைத் திணிப்பவர்கள்; நான் என் குழந்தைகளை யாருடனும் ஒப்பிடுவதேயில்லை; அவர்களுக்கு ஒருவருக்கொருவர் போட்டி போட வேண்டிய தேவையில்லை; என்னுடன் போட்டியிட வேண்டிய அவசியமுமில்லை'- என்று சொல்லிவிட்டேன்.

அந்த சமயத்தில் நான் அப்படிச் சொன்னதை நானும் நம்பினேன். ஆனால் நிதானமாக அசைபோடுகையில், தனித்தன்மையுடைய பெண்களால், தங்களைப் பிறருடன் ஒப்பிடாமல் வாழ்வது சாத்தியமாகுமா என்ற சந்தேகம் என்னையே தாக்கியது. அது முடியவே முடியாதுதான். பொறாமை தலைதூக்கி, உறவுகளை விரிசலாக்காத வரையில், அப்படிப்பட்ட நினைவுகள் எழுவதில் தவறேயில்லை; உண்மையில் அவைதான் வளர்ச்சிக்கும் வித்திடும்!

நீங்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமானவர்கள்; ஒற்றுமையின் கீற்று கூட இல்லை; ஆனால் அது ஆச்சர்யமான விஷயமில்லை; எங்கள் குடும்பத்திலேயே இந்த வேற்றுமைகள் நிலவின.

என் சகோதரிகள் மந்தாகினி, குந்தா இருவருமே என்னிலிருந்து மிகவும் வேறுபட்டவர்கள். என் தாய் சுயமரியாதை மிக்க பலசாலி; எங்கள் கருத்துக்களில் ஒற்றுமை இருந்தாலும், தோற்றத்தில் ஒற்றுமையிருந்ததில்லை; ஏதோ ஒரு சாயலில் ஒத்திருப்போம்... அவ்வளவுதான். நடை, உடை, பாவனை, விருப்பு, வெறுப்பு எல்லாமே



• ஷோபா டே தம் மக்களுடன்...

தனித் தனிதான். அடிக்கடி எங்களைப் பிறர் ஒப்பிடுவார்கள். எங்களுக்கு இது எரிச்சலைக் கிளப்பி இருக்கலாம்; ஆனால் அதற்காக நாங்கள் தவிடு பொடியாகிவிடவில்லை; தூக்கமின்றித் தவித்ததில்லை.

நீங்களும் அப்படித்தானென்று நினைக்கிறேன். நல்லவேளையாக இதுவரையில் உங்களுக்குள் எந்தத் தீவிரமான மனவேற்றுமையோ உளைச்சல்களோ எழுந்ததாகத் தெரியவில்லை. ஏதோ அவ்வப்போது சின்னச் சின்ன சண்டைகளோ, தாயுடன் மோதல்களோ பரவாயில்லை; உங்களை அவை அஜீரணப்படுத்தாத வரையில் கவலையில்லை.

என்னுடைய பெண்களாகப் பிறந்ததற்காக நீங்கள் எப்போதாவது வெட்கப்பட்டிருக்கலாம்; வேதனை அடைந்திருக்கலாம்; சினமுற்றிருக்கலாம்; நிச்சயமாக, உங்கள் பள்ளியிலோ, கல்லூரியிலோ, வேலை செய்யுமிடத்திலோ நிகழ்ந்த ஏதாவதொரு சம்பவம், 'நாம் வேறொருவர் மகனாகப் பிறந்திருக்கக் கூடாதா?' என உங்களை ஏங்க வைத்திருக்கலாம். ஆனால் நிச்சயமாக, உங்கள் வாழ்க்கை அத்தனை மேடு பள்ளங்கள் நிரம்பியதாக இருந்திருக்காது என நம்புகிறேன்.

என்ன என் செல்வங்களே...? அது உண்மைதானா? நான் நினைப்பது சரிதானா?... சொல்லுங்கள்...ம்... என்னால் தாங்கிக் கொள்ள முடியும்...

நம்பிக்கையுடன்,
அம்மா.

தொகுப்பு: **ஜெயஸ்ரீ ராஜ்**

---

## கல்கி தீபாவளி மலர் '99

# ஒவியத்தில் வடித்த காவியம்!

✉ இந்த வருட கல்கி தீபாவளி மலர் அரியதோர் கலைக் களஞ்சியமாகத் திகழ்கிறது. கதைகள், கட்டுரைகள், கவிதைகள், ஓவியங்கள், புகைப்படங்கள் என்று எல்லாமே, மலரின் அமைப்பு உட்பட தன்னிகரற்ற தரத்துடன் மிளிர்கிறது. அதுவும் இந்த வருட கல்கி தீபாவளி மலரின் அட்டைப்பட ஓவியம் அபார அழகுடன் மனதை அப்படியே அள்ளுகிறது. காவியத்திற்கு ஓவியம் படைக்க முடியும். ஓவியத்தையே காவியமாகப் படைக்க முடியுமா? முடியும் என்று நிரூபித்திருக்கிறார் ஓவியர் மணியம் செல்வன்.




மங்கைநல்லூர், சின்னஞ்சிறு கோபு.

✉ கல்கி தீபாவளி மலர் கண்டேன். ரசித்துப் படித்தேன். அரிய – சுவாரஸ்யமான கட்டுரைகள் மற்றும் வண்ணப் புகைப்படங்கள் மலரை சிறப்பாக்குகின்றன. 2099-ம் வருடத்திலும் புரட்டிப் பார்த்து, படித்து மகிழச் செய்ய, 'எது கர்மயோகம்' என்ற தலைப்பில் அமைந்த சுவாமி பஜனானந்தர் அருளிய கட்டுரைத் தொகுப்பு ஒன்றே போதும்.

மதுரை-20, கே.எம். ரவிச்சந்திரன்.

✉ கல்கி 'தீபாவளி மலர்' வாங்கியதும் வியப்பு மேலிட்டது. கண்ணைக் கவரும் அட்டைப் படத்தை ரசித்தபடி பிரித்துப் படித்தேன். அற்புதம்! அற்புதம்!! அற்புதம்!!! 'பேஷ் பேஷ்' என்று கல்கி கூறுவாரே, அது போல பாராட்ட வேண்டும் போல் இருந்தது. அருமையான படைப்புகள். சிறந்த கட்டமைப்பு. போற்றிப் பாதுகாக்க வேண்டிய பெட்டகம்.

செங்காடு, செ.ஆ. கிருஷ்ணமூர்த்தி.

✉ அரசியல் தீபாவளி ஜோக்ஸ், கண்கவர் கா(ட்)சிப் படங்கள், கிராம தேவதைகள், கானகத்து நாக ரத்தினங்களின் அச்சுறுத்தல், விஷமப் பிரியாவின் விஷமத்தனமான வீட்டுக் குறிப்புகள், சகஸ்ரதாரா, துபாய், வண்ண மிகு காட்சிகள், பக்கத்துக்குப் பக்கம் மாதுரியின் சிரிப்பு வெடி, ஒன்றரைக் கண்ணனைக் கண்டீரா கட்டுரைக்கு பத்மவாசனின் படங்கள்... அனைத்தும் மலருக்கு அலங்கார வளைவுகள்!

சாத்தூர், எம். செல்லையா.

## பலன் மிக்கதும் பாதுகாப்பானதும்
## TDFC யின் முதலீட்டு திட்டங்களே!

# 13·14%

36 மாதம் அதற்குமேல்
13% மாதாந்திர வட்டி உண்டு
1வருடம் 12.12% மற்றும்
25 மாதங்கள் 12.63% காலாண்டிற்கு

# 18·18%

60 மாதங்களுக்கு
வருடவட்டி 13% மாதந்தோறும்
கூட்டுவட்டி முறையில் கணக்கிடப்படும்.

★ Rating from CRISIL FA(+) indicates adequate safety.
● Registered with RBI as NBFC vide Regn. No.: 07.00403

மேலும் விபரங்களுக்கு:

## தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 99, கிரீம்ஸ் சாலை, எம்.என். அலுவலக வளாகம், சென்னை-6.
**தொலைபேசி : 8292059, 8292917, 8293351, தந்தி :TAFCON. P.B.No.719**

கிளைகள் :

- ★ டிடிசி பேருந்து நிலையம், காந்திபுரம், கோயம்புத்தூர்-641 044. தொலைபேசி : (0422) 497102
- ★ டிடிசி பேருந்து நிலைய வளாகம், திருச்சி-620 001. தொலைபேசி:(0431) 464188
- ★ ராணி மங்கம்மாள் சத்திரம், மதுரை-625 001. தொலைபேசி: (0452) 741686
- ★ முனிசிபல் அலுவலக வளாகம், காமராஜர் சாலை, ஈரோடு-638 001. தொலைபேசி:(0424) 258204

- ● உள்ளூர் காசோலைகள் மற்றும் சென்னை வரைவோலைகள் மட்டுமே பெற்றுக்கொள்ளப்படும்.
- ● காசோலைகளும், வரைவோலைகளும், சனி மற்றும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் சென்னை அலுவலகத்தில் ஏற்கப்படும்

**உங்களது முதலீடு "டிடிஎப்சி" யில் பாதுகாப்பானது - பத்திரமானது**

இந்த விளம்பரம் கம்பெனியகல் 29.9.99 தினகரனில் வெளியிடப்பட்ட சட்ட பூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.
DIPR/1488/DIS/99/ELEGANT

**1999 தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம் மற்றும் சமூக ஒற்றுமை ஆண்டு**



• முதல்வர் ஜானகிராமன்



• கண்ணன்

**தி.மு.க. கூட்டணி அமைச்சரவை தொடர்வதா, வேண்டாமா என்று பாண்டிச்சேரியில் த.மா.கா. எடுக்கப் போகும் முடிவு. அதன் ஒட்டுமொத்த அரசியல் எதிர்காலத்தை முடிவு செய்யும் ஒன்றாகக் கூட இருக்கக்கூடும். இந்த நிலையில் பாண்டி அரசியல் பிரமுகர்கள் அங்குள்ள ஊசலாட்டத்தைப் பற்றி என்ன நினைக்கிறார்கள்? பலரையும் சந்தித்துப் பேசினோம்....**

# த.மா.காவின்

த.மா.காவின் நிலை பற்றியெல்லாம் கவலைப்படாமல் எட்டு உறுப்பினர்களைக் கொண்ட தி.மு.க. சற்று தைரியத்துடனேயே இருக்கிறது என்று சொல்லலாம். "இந்த மூன்றரை வருட காலத்தில் பல சாதனைகளைச் செய்திருக்கிறோம். தாழ்த்தப்பட்டவர்கள், பிற்படுத்தப்பட்டவர்கள், மாணவர்கள், அரசு ஊழியர்கள் என்று எல்லா பிரிவு மக்களுக்கும் நல்லது செய்திருக்கிறோம். தி.மு.க. தலைமையிலுள்ள இந்தக் கூட்டணி ஆட்சி கவிழ்வதை, த.மா.கா. சட்டமன்ற உறுப்பினர்களே விரும்பவில்லை. 1996 சட்டமன்றத் தேர்தலின்போது மக்களிடம் கூட்டணி அரசு என்று தெரிவித்துத்தான் வோட்டு வாங்கினோம். கூட்டணியில் தொடர்ந்து இருந்து ஐந்து வருடத்தைப் பூர்த்தி செய்வது த.மா.கா.வின் தார்மீகக் கடமை. அந்தக் கடமையில் அது தவறுமானால் மக்கள் மன்னிக்க மாட்டார்கள். ஏற்கெனவே, மத்திய அரசைக் கவிழ்த்த அவப்பெயர் த.மா.காவுக்கு இருக்கிறது. எனவே அவர்கள் பொறுப்புடன் நடந்து கொள்ள வேண்டும். மீறி 'கவிழ்ப்பு' வேலையில் ஈடுபட்டார்கள் என்றால் எங்கள் அரசை காத்துக் கொள்ள நாங்களும் சில 'முயற்சிகளை' எடுக்க வேண்டியிருக்கும். அந்த நிலை த.மா.கா.வின் எதிர்காலத்துக்கு நன்மை பயப்பதாக இருக்காது!" என்று சொன்னார், தி.மு.க. சட்டமன்ற உறுப்பினரான மாரிமுத்து.

அமைச்சரவையிலிருந்து விலகி, த.மா.கா.வின் நாடாளுமன்ற வேட்பாளராகக் கண்ணன் பாண்டியில் போட்டியிட்டபோதே தி.மு.க. - த.மா.கா.விடையே பெரிய இடைவெளி ஏற்பட்டு விட்டது. இந்த அரசியல் நிலை, அரசு இயந்திரத்தைப் பாதித்து, அது செயல்படாத நிலையில் இருக்கிறது என்று பாண்டியில் பலர் நம்மிடம் சொன்னார்கள். ஆனால் முதல்வர் ஜானகிராமன் இதை மறுத்தார்.

"அரசியல் சூழ்நிலை காரணமாக நிர்வாகத்தில் எந்த மெத்தனமும் இல்லை. இன்னமும் கேட்டால் பணிகள் விறுவிறுப்பாய் நடக்கின்றன. 1952 முதல் 1996 வரை புதுவைக்குக் கிடைத்த மத்திய நிதி உதவி 170 கோடிதான். ஆனால் கடந்த மூன்று வருட காலத்தில் மட்டும் 140 கோடி பெற்றிருக்கிறோம். இதுவரை பாண்டியில் என்ன நிலை? ஒரு கோஷ்டி ஆண்டு கொண்டிருக்கும்; அதே கட்சியின் மற்றொரு கோஷ்டி எதிர்த்துக் கொண்டிருக்கும். இப்போது அந்த இரு கோஷ்டிகளும் அரசுக்கு வெளியே தரையில் கிடக்கும் மீன் போல் இருக்கிறார்கள். ஒரு சாமான்யன் முதல்வராக இருப்பது அவர்களுக்கு எரிச்சலாக இருக்கிறது. த.மா.கா.வைப் பொறுத்தவரையில் எங்களை

# விபரீத விளையாட்டு!

விரும்புகிறவர்களும் இருக்கிறார்கள்; வெறுப்பவர்களும் இருக்கிறார்கள். எங்கள் தலைவருக்கும் - மூப்பனாருக்கும் உள்ள நட்பு காரணமாக இந்த ஆட்சிக்கு எந்த ஆபத்தும் இல்லை!" என்றார் ஜானகிராமன்.

"எந்தக் கட்சிப் பாகுபாடும் இன்றி எல்லா தொகுதிகளிலும் வளர்ச்சிப் பணிகள் நடந்து வருகின்றன. இந்த அரசு தொடர்ந்து நடந்து ஐந்து வருடத்தை நிறைவு செய்ய வேண்டும்; செய்யும்!" என்றார் ஜனதாதள சட்டமன்ற உறுப்பினர் ராஜாராம்.

"அரசுப் பணிகளில் எந்தச் சுணக்கமும் கிடையாது. வளர்ச்சிப் பணிகள், நலத் திட்டப் பணிகள் என்று எல்லா பணிகளுக்கான வேலைகளும் விரைந்து நடக்கின்றன" என்றார்கள் அரசு ஊழியர் மத்திய கூட்டமைப்பைச் சேர்ந்த லட்சுமணசாமியும், சேஷாச்சலமும். இதற்கு முன்னர் எந்த அரசும் செய்யாத பல நன்மைகளை அரசு ஊழியர்களுக்கு ஜானகிராமன் தலைமையிலுள்ள அரசு செய்திருப்பதாக மனநிறைவுடன் சொல்கிறார்கள் அவர்கள்.

**த.**மா.கா.வின் நிலைதான் சற்று பரிதாபமாக இருக்கிறது. "தமிழகத்தில் எதிர், எதிராக நின்று கொண்டிருக்கும் நிலையில், பாண்டியில் மட்டும் தி.மு.க.வுடன் எப்படிக் கைகுலுக்கிக் கொள்வது?" என்பதுதான் அவர்கள் முன் உள்ள பெரிய கேள்வி. "இந்தக் கூட்டணி அரசு கடந்த மூன்றரை வருடங்களாக நல்ல பணிகளைச் செய்து வருகிறது. கடந்த நான்கைந்து மாதங்களாக நிலவும் அரசியல் நிலை காரணமாக சில அதிகாரிகள் பணிகளில் சுணக்கம் காட்டுகிறார்கள். சிலர் மனச்சாட்சியுடன் உழைக்கிறார்கள். மொத்தத்தில் இந்த நிலை துரதிர்ஷ்டமான ஒன்றுதான்" என்று சொன்னார் த.மா.கா. சட்டமன்ற உறுப்பினரான பாலாஜி. தி.மு.க. அரசிலிருந்து வெளியேறினால் த.மா.காவில் பிளவு உண்டாகுமா என்று கேள்வி எழுப்பினால், த.மா.காவினர் முழுமூச்சாக மறுக்கிறார்கள். "தலைவர் மூப்பனார் என்ன முடிவெடுக்கிறாரோ.. அதற்கு நாங்கள் கட்டுப்படுவோம்!" என்கிறார் பாலாஜி.

"தி.மு.க., பாஜகவுடன் கூட்டணி கண்டபோதே அரசை விட்டு வெளியேறி இருக்க வேண்டும். அப்போது பஸ்ஸை மிஸ் செய்து விட்டோம். இப்போது நான்கு மாதங்களாக அரசு நடந்து கொண்டிருக்கிறது. இந்த நிலையில் கவிழ்ப்பு வேலையில் ஈடுபட்டால் தேவையில்லாமல் ஓர் அரசியல் நெருக்கடியை உண்டாக்கி, மக்களிடம் நல்ல பெயரை இழந்து விடுவோம் என்பதில் சந்தேகமில்லை" என்கிறார்கள் த.மா.காவினர்.

இது தவிர, "நாங்கள் காங்கிரஸ் கட்சியுடன் இணைந்து செயல்படுகின்ற நிலையில், காலப்போக்கில் ஆங்காங்கே உள்ளூரில் உற்சாகமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கும் இளைஞர்கள், உற்சாகம் குன்றி வேறு கட்சிகளுக்குச் செல்லும் ஆபத்தும் இருக்கிறது" என்கிறார்கள் அவர்கள்.

"இப்போது மதவாதக் கட்சியுடனான கூட்டணியில் தி.மு.க. இருப்பதால்தான், நாங்கள் விலகி வருகிறோம் என்பதுதான் எங்கள்



• காங்கிரஸ் தலைவர் சண்முகம்

• மாரிமுத்து, எம்.எல்.ஏ.



• பாலாஜி எம்.எல்.ஏ.



நிலை. ஆனால் அரசியலில் என்ன வேண்டு மானாலும் நடக்கலாம். நாளையே ஏதோ பிரச்னை காரணமாக தி.மு.க. பா.ஜ.கவிட மிருந்து விலகக்கூடிய நிலை கூட வரலாம். அடுத்த சட்டமன்றத் தேர்தலுக்கோ இன்னமும் ஒன்றரை வருடம் இருக்கிறது. பொறுத் துப் பார்க்கலாமே.சரியான மாற்று ஏற்பாடு கள் உறுதியாக இல்லாதவரை ஆட்சியி லிருந்து நாங்கள் வெளியேறுவது என்பது ஒரு விபரீத விளையாட்டு என்றுதான் சொல்ல வேண்டும்" என்கிறார் த.மா.கா. சட்டமன்ற உறுப்பினர் ஒருவர்.

மகாபாரதத்து கண்ணன் போன்று பாண்டி அரசியலில், மாநில த.மா.கா. தலைவர் கண்ணனின் பங்கும் கணிசமானது. கட்சிப் பாகுபாடின்றி எல்லாப் பிரிவு மக்களின் அபிமானத்தையும் பெற்றவர் கண்ணன். 'தி.மு.க. அரசிலிருந்து விலகி விட வேண்டும்' என்று பிடிவாதமாக வற்புறுத்துபவர் கண்ணன்தான். காரணம், இப்போது அவருக்கு முதல்வராகும் வாய்ப்பிருப்பதாக அவர் கருதுகிறார். இந்த வாய்ப்பை விட்டால் எதிர்காலத்தில் அந்த உயர்பதவி தமக்குக் கிடைக்கும் வாய்ப்பு இல்லையென்று அவர் கருதுகிறார். எனவேதான் ஆட்சி மாற்றத்திற்காக மூப்பனாரிடம் தொடர்ந்து வலியுறுத்தி வருகிறார் என்பதுதான் அவர் மீது தி.மு.கவினர் வைக்கும் குற்றச்சாட்டு.

"நான் எந்தப் பதவியையும் எதிர்பார்த்து ஏங்கவும் இல்லை; காத்திருக்கவும் இல்லை" என்கிறார் கண்ணன். "இங்குள்ள அரசியல் நிலைமைகளை முழுவதுமாக தலைவர் முன்னால் வைத்திருக்கிறோம். தலைவரும் எம்.எல். ஏக்களை தனித்தனியாகச் சந்தித்து அவர்கள் கருத்தைக் கேட்டிருக்கிறார். எனவே தலைவர் முடிவு தலைவர் கையில்" என்று தொடர்ந்து சொன்னார் கண்ணன்.

கண்ணன் இப்படிச் சொன்னாலும், அவரது ஆதரவாளர்கள், "த.மா.கா – காங்கிரஸ் இணைந்து ஆட்சி நடத்தும் நிலையில் கண்ணன்தான் ஸார் முதல்வர். அவருக்கு முதல்வர் பதவி இல்லையென்றால் வேறெந்தப் பதவியையும் ஏற்க மாட்டார். கட்சிப் பணியிலேயே மனநிம்மதி அடைவார்" என்கிறார்கள்.

காங்கிரஸில் முதல்வர் பதவிக்கு ஆசைப்படுபவர் வைத்தியலிங்கம். ஆனால் த.மா.கா. எம்.எல்.ஏ. சுந்தசாமிக்குக் கட்சி மாற பணம் கொடுத்ததாக சி.பி.ஐ. தொடர்ந்துள்ள வழக்கில் அவர் மீதும் சந்தேக ஊசி தொங்குகிறது. எனவே அவருக்கு முதல்வராகும் வாய்ப்பில்லை. பரூக் பாராளுமன்ற உறுப்பினர் ஆகி விட்டார். மாநில காங்கிரஸ் தலைவர் சண்முகம் சட்டமன்ற உறுப்பினர் இல்லை. ஆனால் இவர்களிடையே கண்ணனை முதல்வராக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதில் மட்டும் ஒத்த கருத்து இல்லை.

இதுபற்றி சண்முகத்திடம் கேட்டபோது, "த.மா.காவினர் கொள்கை அடிப்படையில் ஒரு முடிவெடுக்க வேண்டிய நிலையில் இருக்கிறார்கள். நீங்கள் ஏன் ஒரு குறிப்பிட்ட பதவியுடன் இணைத்து இந்தப் பிரச்னையை கொச்சைப்படுத்துகிறீர்கள்?" என்றார்.

த.மா.காவின் அரசியல் விவகாரக் குழு கூட்டத்தில் 'பாண்டி விவகாரத்தில் ஒரு முடிவு எடுக்க வேண்டும்' என்று அனைவரும் ஒன்றுபட்டுச் சொல்லியிருக்கிறார்கள். கலைஞருடன் உள்ள நட்பை பின்னுக்குத் தள்ளிவிட்டு, அரசியல் முடிவை முன்னிறுத்தும் அவசியம் மூப்பனாருக்கு ஏற்பட்டு விட்டதாகவும் சொல்கிறார்கள் த.மா.கா. பிரமுகர்கள். சோனியாவின் தூதராக வயலார் ரவி இரண்டு முறை மூப்பனாரிடம் பேசி விட்டுச் சென்றிருக்கிறார். தீவிரமான எதிர்க்கட்சியாகச் செயல்படுவோம் என்று தமிழக த.மா.கா.வுக்கு வழிகாட்டிய மூப்பனார், பாண்டி விவகாரத்தில் என்ன முடிவு எடுக்கப் போகிறார் என்று அரசியல் வட்டாரம் ஆவலோடு பார்த்துக் கொண்டிருக்கிறது.

**— ப்ரியன்**

படங்கள் : **சரவணன்**



''நம்ம டைப்பிஸ்ட் பாபு ரொம்ப வீக்...''

''எதை வச்சு சொல்ற?''

''தண்ணி அடிப்பியான்னு கேட்டு முடிக்கல, அதுக்குள்ள கிக்கேறி கீழே விழுந்துட்டான்!''

**– ஜி. ராமமூர்த்தி**

## "பிரான்ஸில் குணமடையாத இடுப்பு வலி பாண்டிச்சேரியில் ஆப்ரேஷன் இன்றி குணமடைந்தது!!!..."



Colas M Antoinette

Mrs. Colas Marie - Antoinette
Lathouche Street,
Pondicherry - 1

கடந்த 7 வருடங்களாக இடுப்பில் வலி இருந்து வந்தது. இதனால் குனிந்து நிமிரும் போதும், சிறிது தூரம் நடக்கும் போதும், உட்கார்ந்து எழுந்திருக்கும் போதும் மாடிப்படி ஏறி இறங்கும் பொழுதும் பிடிப்புடன் கூடிய வலி இருந்தது நான் **FRANCE** நாட்டில் வசித்து வந்ததால் அங்குள்ள **ORTHO SPECIALIST** களிடம் சிகிச்சைக்காக சென்று, **M.R.I. SCAN** எடுத்துப் பார்த்ததில் கடைசி இரண்டு எலும்புகள் விலகி இருப்பதாகக் கூறினார்கள். **(L4,L5 DISC PROLAPSE).** இதற்கு மருந்துகளையும், இடுப்பில் போட்டுக் கொள்வதற்கு **Belt**-ம் எழுதிக் கொடுத்தார்கள் ஆனாலும் வலி குறையவில்லை. பிறகு ஆப்ரேஷன், **(OPERATION)** செய்ய வேண்டும் என்று கூறினார்கள். இதற்கிடையே என் கணவர் பணியிலிருந்து **Retired** ஆகி விட்டதால், நாங்கள் பாண்டிச்சேரிக்கு வந்தோம். அப்போது **"MARC HERBAL CARE (P) LTD"** நிறுவனத்தின் விளம்பரத்தை செய்தித்தாள்களில் பார்த்து, என் கணவருடன் அங்கு சென்றேன். அங்கு, டாக்டரிடம் **Consult** செய்து, அவர்கள் கொடுத்த மூலிகை பவுல்டீஸ் **(POULTICE)** – ஐ வெளிப்பிரயோகமாக தினமும் தவறாமல் தடவி வந்தேன். 9 வார தொடர்ச்சியான சிகிச்சைக்குப்பின் என் இடுப்பு மற்றும் கால் வலிகள் நீங்கி பரிபூரண நிவாரணம் அடைந்தேன், நன்றி. வணக்கம்.

- ★ காலம் காலமாக வேதமகரிஷிகள் சித்தர்கள் கண்டுபிடித்து பரிசோதித்து அனுபவப்பட்டு வெற்றிகண்ட ஆயுர்வேத மூலிகை மருத்துவமுறைப்படி எங்களது நிறுவனம் ஒரு வெளிப்பிரயோக மூலிகை பவுல்டிசை (Poultice) கொண்டு ஆர்த்திரைட்டீஸ், ஸ்பாண்டிலைட்டீஸ், தோள்பட்டை வலி, முதுகுவலி, குதிக்கால்வலி, கைகால் மூட்டுவலி ஆகியவைகளுக்கு தகுதிவாய்ந்த அனுபவம் மிக்க ஆயுர்வேத, சித்தா மற்றும் அலோபதி மருத்துவர்களின் மேற்பார்வைகளின் கீழ் சிகிச்சை அளித்து வருகிறோம்.
- ★ ஒரு வரைப்போல் மற்றொருவரது உடல்வன்மை இருப்பது இல்லை என்பது யாவரும் அறிந்த உண்மை எனவே கால மாற்ற விளைவுகளால் மனிதனின் உடல்வன்மையில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்ப சிகிச்சையும் பலன்களும் வேறுபடலாம் என்பதை **MARC HERBAL CARE (P) LTD** நன்கு உணர்ந்துள்ளன.

கலந்து ஆலோசிக்க
இப்போதே
தொடர்பு கொள்க.
தொலைபேசி
**0413-346683**

காலை 9 மணி முதல், இரவு 7 மணி வரை
வாரத்தில் 7 நாட்களும் திறந்திருக்கும்.

**MARC ஹெர்பல் கேர் (பி) லிமிடெட்**
32, செயின்ட் தெரெஸ் வீதி, பாண்டிச்சேரி – 1
(ராமன் தியேட்டர் எதிர் வீதி, ஃபார்ச்சூன் பேக்கரி எதிரில்)
**Fax : 91 - 0413 - 346683**

---

ஸ்ரீ ராமஜெயம்



# ஸ்ரீ மாருதி டிராவல்ஸ்

தொலைபேசி எண் 5511786 10/6, ராஜேஸ்வரி தெரு, பெரம்பூர், சென்னை - 600 011

(ஆன்மீக சுற்றுலா குழு அமைப்பாளர்கள்)

பகவத் கிருபையில் "BEST TOURIST TRAVEL AWARD" என்ற விருதினை
தமிழ்நாடு சினிமா கலை மன்றம் மூலமாக பெற்று ஆன்மீக அன்பர்களின் நல்வாழ்த்தினை பெற்ற நிறுவனம்.
**ஸ்ரீ மாருதியின் யாத்திரைத் திட்டத்தில் உறுப்பினராகி பயன் பெறுங்கள். விவரங்கட்கு:**
மங்கையர்மலர் நவம்பர் மாத தீபாவளி இதழ் 1 பக்கம் 28, கல்கி 7.11.99 இதழ் பக்கம் 29 பார்க்கவும்.

***எமது 2000 ஆண்டுக்கான சிறப்பு யாத்திரைகள்***



① **6.12.99** ஒரு நாள் சோளிங்கர் யோக நரசிம்மர் தரிசனம். பஸ் கட்டணம் மட்டும் ரூ. 90/- சாப்பாடு செலவு அவரவருடையது.

② **28.1.2000 - 10** நாட்கள் சிங்கப்பூர், மலேசியா, பாங்காக் விமான கட்டணம், ஊர் சுற்றிப் பார்த்தல், சாப்பாடு செலவு உட்பட நபர் ஒருவருக்கு ரூ. 39,800/-

③ **24.2.2000** - 4 நாட்கள் அகோபிலம், மந்திராலயம், மகா நந்தி, ஸ்ரீசைலம் – சாப்பாடு, இரவு தங்குதல், பஸ் கட்டணம் Deluxe 54 இருக்கை 3x2 பஸ் – ரூ. 950/- Super Deluxe Bus 2x2 இருக்கை ரூ. 1150/-

④ **20.3.2000 – 10** நாட்கள் – காசி, கயா, அயோத்தியா, அலகாபாத் இரயில் கட்டணம், ஊர் சுற்றிப் பார்த்தல், சாப்பாடு, இரவு தங்குதல் உட்பட நபர் ஒருவருக்கு ரூ.3150/-

⑤ **APR - 2000 - 7** நாட்கள் கர்நாடக மாநில யாத்திரை.



முழு விவரமறிய சுய விலாசமிட்ட ரூ. 3/- ஸ்டாம்ப் அடங்கிய கவர் அனுப்பவும்.
விவரங்கள் அனுப்பப்படும்.

*பங்கு பெறுவீர்! பாக்கியவான்களாவீர்!*

மேலும் விவரங்களுக்கு: **V. சீனிவாசன்** *(அமைப்பாளர்)*

**ஸ்ரீ மாருதி டிராவல்ஸ் & கேட்டரிங் சர்வீஸ்**
பெரம்பூர், **தொலைபேசி: 5511786**

# முதல்வன்

நல்லவன் ஒருத்தன், ஒரே ஒருநாள் முதலமைச்சரானால் என்னென்ன காரியங்கள் சாதிக்க முடியும்?

இந்தக் கொசு அளவு கருவை அடைகாத்து, டைனோசார் அளவு குட்டி போடப் பேயாய் உழைத்திருக்கும் ஷங்கருக்கு அந்த இறுக்கமான திரைக்கதைக்காக முதல் பாராட்டு. முற்றிலும் கனவுமயமான ஒரு விஷயத்துக்கு நம்பகத்தன்மை ஏற்றுவது என்பது சாதாரண விஷயமல்ல.

ஒவ்வொரு இந்தியனுக்கும் அரசியல்வாதிகளை ஒழித்துக் கட்டி விடும் ஆசை, ஒவ்வொரு முறை வோட்டுப் போட்டதற்கு மறுநாளிலிருந்து உண்டாகி விடும். இந்த சைகாலஜியை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டு, கதாநாயகன், முதல்வரைச் சந்திப்பதற்குத் தோதாக ஒரு டீவி நிருபர் பின்னணி, முதல்வர் மோசம் என்பதற்கு ஆதாரமாக ஒரு முன்னாள் முதல்வரது கல்யாண குணங்களின் சாயல், அரசு அதிகாரிகளின் இயல்பான மெத்தனம் என்று விஷயங்களுக்குச் சுலபமான சாத்தியங்கள் பேன்ட் பாக்கெட்டிலிருந்தே கிடைத்து விடுகின்றன. தவிரவும் சுஜாதா மாதிரி ஒரு விவரம் தெரிந்த வசனகர்த்தாவும் இருக்கும் போது சுலபமாக ஒரு 'நேடிவிடி' வந்து விடுகிறது.

அர்ஜுனுக்கு இது மறு வாழ்வு. ஒரு மாறுதலுக்கு கோட்-சூட் போட்ட முதல்வராக வந்து ரேஷன் கடை ஊழல், போலீஸ் ஸ்டேஷன் அக்கிரமங்கள், குடிசைமாற்று வாரிய ஊழல் என எல்லாவற்றையும் 'சஸ்பென்ஷன்கள்' மூலமே தீர்த்து வைத்து(!) நேரம் கிடைக்கும் போது மோட்டார் சைக்கிளில் ஏறி பக்கத்து கிராமத்துக்குப் போய் மனீஷா கொய்ராலாவுடன் உப்புக் கருவாடு, ஊறவெச்ச சோறு என்று பாட்டுப் பாடி விட்டு வருகிறார்.

ஷங்கரின் கிராஃபிக்ஸ் பிரும்மாண்டங்களுக்கு ஓர் எல்லையே கிடையாது போலிருக்கிறது. எழுபது எம்.எம். மலைப் பிரதேசமே பற்றி எரிய, நடுவில் ஆடும் அந்த ஆட்டம் கனவில் வந்து பயமுறுத்தும். 'வ்வவன்னே, வ்வன்னே முதல்வ்வவன்னே' என்று பொரிவிளங்காய் உருண்டையைக் கடித்துக் கொண்டே பாடுவது போல் பாடும் பாடலில் கிராஃபிக்ஸ் நாகங்கள் பயமுறுத்துவதற்குப் பதிலாக கிச்சுக்கிச்சு மூட்டுகின்றன. (நம் இலக்கியவாதிகள் இதையெல்லாம் மேஜிக்கல் ரியலிஸ வகையில் சேர்த்துக் கொள்வார்களா?)

சிற்சில காட்சிகள் படத்தின் செய்தியை மீறி மனத்தில் நிற்பதையும் சொல்ல வேண்டும். உதாரணத்துக்கு, அர்ஜுனின் பெற்றோர் குண்டுவெடித்து இறக்கிற காட்சி. ஒரு மருதாணிக் கிண்ணம், விழுந்து கிடப்பதை குளோசப்பில் காட்டுவதன் மூலமே விபத்தின் கோரத்தைச் சொல்லி விட முடிகிறது ஷங்கரால்.

பிறகு அந்த மக்கள் குறை கேட்கும் காட்சியில் மனீஷாவிடமிருந்து வரும் போன். சீரியஸாக பெப்ஸி உங்கள் சாய்ஸ் பாணியில் குறைகள் கேட்டு உடனடி நிவர்த்தி பண்ணிக் கொண்டிருக்கிறார் அர்ஜுன்.

அந்நேரத்தில் வரும் மனீஷாவின் போன், 'உன் சட்டை சரியில்லை; நீலக்கலருக்கு மாற்று' என்று நடுவர்மன்றத் தீர்ப்பாக ஒலிக்கிறது.

காட்சியின் நகைச்சுவை இத்துடன் முடிந்து விட்டாலும் கவனமாக அடுத்த காட்சியில் ஒரு தீவிரப் பிரச்னையை நோக்கிப் போகும் முதல்வர், நீல ஷர்ட்டுக்கு மாறியிருப்பதைத் தியேட்டரில் வயதான ஆயாக்கள் கூட உச்சுக் கொட்டி ரசிக்கிறார்கள்.

மிக நீளமான படம். சுஷ்மிதாசென்னின் எம்டீவி ரக நடனம், மனீஷாவின் காதல் கசிந்துருகல், வடிவேலுவின் 'வராக' நகைச்சுவை என ரிலாக்ஸேஷனுக்கு ஆங்காங்கே சில ஐட்டங்கள் இருப்பினும் படம் முழுக்க ஒரு டாகுமென்டரியின் உக்கிரம் தவிர்க்க முடியாமல் விரவியிருக்கிறது.

படத்தின் பலம் மட்டுமல்ல; பலவீனமும் அதுவேதான்.

— ஔரங்கசீப்

# நடக்குமென்பார்;



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

உங்க பிரச்னைகள் தீர்ந்து பெரும்பாலும் தொட்டதெல்லாம் துலங்கற நேரம் வந்தாச்சு. நீண்ட நாள் கனவுகள் நனவாகும். எதிர்பாராத அதிர்ஷ்ட வாய்ப்புகள், உயர்கல்வி வசதி, வெளிநாடு டூர்னு அசத்தப் போறீங்க. சிலருக்கு பக்தி பீறிட்டு, கோயில் கோயிலா சுத்துவாங்க. கலைஞர்களுக்கும் இயந்திரத் துறையினருக்கும் வெற்றி வாய்ப்புகள் பிரகாசமா இருக்கு. வீடு மாற்றம், புது வீடு வாங்கறது மாதிரியான காரியங்களுக்கு வாரப் பிற்பகுதில சாதகமான சூழ்நிலை இருக்கு.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

உழைப்பும் அலைச்சலும் அதிகமாக இருக்கும். லட்சிய வேட்கை உள்ள உங்களுக்கு இப்ப தடைகளே அதிகமாக இருக்கும். மனக்குழப்பம், வீட்டுல சண்டை சச்சரவுன்னு ரொம்பக் கஷ்டப்படுவீங்க. ஆனாலும் தொழில் ரீதில உங்க புகழுக்கு பங்கம் வராது. பொருளாதார நிலைமை பிரச்னை தராதுன்னாலும் செலவுகள் கட்டுக்குள்ள இருக்காது. வீட்டுல சில நல்ல காரியங்கள் நடக்கப் போவுது. உங்க ஆபீஸ் பிரச்னைகளை வீட்டுக்கு எடுத்து வராம, வீட்டையும் கொஞ்சம் கவனிங்க.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்க செயல்திறனும் புத்திசாலித்தனமும் மேலோங்கியிருக்கும். பணம் கூரையைப் பிச்சிக்கிட்டு கொட்டாட்டாலும் போதுமான அளவு இருக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு எதிர்பார்த்த பதவி உயர்வு, பழைய பாக்கிகள் வந்து சேரும். மாணவர்கள் போட்டி, பந்தயங்கள்ல வெற்றி பெறுவாங்க. சிலருக்குத் திருமண ஏற்பாடுகள் நடக்கும். உடல் நலன்ல கொஞ்சம் அக்கறை செலுத்துங்க. இந்த வாரம் ஒரு வெளியூர்ப் பயணம் அநேகமா இருக்கும்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

சாதாரணமான வாரம். பெரிய அபிவிருத்திகளை எதிர்பார்க்காதீங்க. அதே சமயம் தினசரி அலுவல்கள் சீரா நடக்கும். சிலருக்கு லேசான உடல்நலக் குறைவு வரலாம். வீட்டுப் பெரியவங்களோட மனவேறுபாடு உண்டாகலாம். தொழில்துறையினர் புதிய முயற்சிகளை ஒரு வாரம் தள்ளிப் போடறது நல்லது. சிலருக்கு எதிர்பாராத விருந்தாளிகளால் திடீர்ச் செலவுகள் இருக்கும். பயணத்துல எச்சரிக்கை அவசியம். பஸ்ல பிக்பாக்கெட், இழப்புகள் சிலருக்கு ஏற்படலாம்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

உற்சாகமான வாரம். பலருக்குக் கல்யாண வேளை கூடி வரும். பார்ட்டிகள்ல கலந்துக்கற வாய்ப்பும் இருக்கும். வெளியூர்ப் பயணங்கள் ஆக்கம் தரும். உடல்நலன் சீரா இருக்கும். விளையாட்டு, கலை, அறிவியல் துறையினருக்குப் பரிசுகள் சேரும். ஒரு போன்கால், அல்லது கடிதம் சந்தோஷச் செய்தி தாங்கி வரும். பெண்களுக்குப் புது நகை யோகம் இருக்கு. ஆன்மிக சொற்பொழிவாளர்களுக்குத் தொண்டைக்கட்டு அபாயமும் இருக்கு.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

சினிமாக்காரர்களுக்கு பல சந்தோஷ அனுபவங்கள் வரப் போவுது. நண்பர்களால் எதிர்பாராத பேருதவி நிச்சயம். பணம் புரளும் நேரம்ங்கறதால செலவுல கவனமா இருங்க. கொடுக்கல் வாங்கல்ல உஷாரா இருக்கணும். எதிர்பாராத ஒரு பெரிய மனிதர் சந்திப்பும் ஆதாயமும் இருக்கும். அரசு ஊழியர்களுக்கும் கல்லூரி மாணவர்களுக்கும் உற்சாகமான வாரமா இருக்கும். சிலர் வீடு மனை வாங்கத் திட்டம் போடுவாங்க.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

கொஞ்சம் செலவுகளை குறைக்

களும். வீணான பொருள்களை வாங்கிக் குவிக்காதீங்க. கடன் கேட்டால் கட் அண்ட் ரைட்டா முடியாதுன்னு சொல்லிடுங்க. இந்த வாரம் பணிகள் அதிகமாகவும் பலன் குறைவாகவுமிருக்கும். சிலர் நிறைய வெளியூர்ப் பயணம் செய்ய வேண்டி வரலாம். திருமண யோகம் பெண்களுக்குக் கூடி வருது. முக்கியமான முடிவுகளை எடுக்கும் போது பெரியவங்களை கருத்துக் கேட்டுக்கறது நல்லது.



**விருச்சிகம்** : (விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)

தொழில் வளர்ச்சி பிரமாதமா இருக்கும். புகழும் பாராட்டும் குவியப் போறது. எழுத்தாளர்களுக்கு திடீர் அதிர்ஷ்டங்கள் அடிக்கும். அரசு மூலம் ஏதாவது பண வரவு பாக்கியிருந்தா இப்ப வரும். அரசியல்வாதிகள் சில முக்கிய முடிவுகள் எடுத்து, மக்களுக்குத் திகைப்பைக் கொடுப்பாங்க. பிரார்த்தனையில் மனம் லயிக்கும். சிலருக்குப் புண்ணிய யாத்திரை போகும் வாய்ப்பும் கூடி வரும். நண்பர்களை மட்டும் அளவுக்கு அதிகமா நம்பாதீங்க. சமயத்துல கவுத்துடுவாங்க.



**தனுசு** : (மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)

காதல் நினைவுகள் சுகமா

# நடக்கும்!

வலம் வரும். உல்லாச அனுபவங்கள் தித்திக்கும். விருந்து கேளிக்கைகளுக்கும் குறைவிருக்காது. மக்களால் ஆதாயம் உண்டு. சிலர் டூ வீலர் மாதிரி ஏதாவது புதுசா வாங்குவாங்க. பெண்களுக்குப் புத்தாடை யோகம் இருக்கு. குழாயடிச் சண்டைகள்ல சிக்கிக்காதீங்க. ஆபீஸ்லேயும் அளவோட பேசறது நல்லது. மேலதிகாரிகளோட அதிருப்திக்கு ஆளாகி, சிலர் கஷ்டப்படுவாங்க. கடன் வாங்காம/கொடுக்காம இருக்கறது இப்ப ரொம்ப நல்லது.



**மகரம்** : (உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)

கொஞ்சம் சிக்கலான வாரம். எதிலும் நல்ல பலன்களை எதிர்பார்க்க முடியாது. செலவு கட்டுக்குள்ள இருக்காது. தவிர பொருள் இழப்புக்கும் வாய்ப்பிருக்கு. வீண் வம்புகள்ல சிக்கிக்காதீங்க. அடுத்தவங்களைப் பத்தி கமெண்ட் அடிக்காதீங்க. அரசியல்வாதிகள், கலைஞர்களுக்குப் போட்டிகளால தொந்தரவு ஜாஸ்தியா இருக்கும். வீட்டுலயும் குழப்பங்கள் மிகும். விட்டுக் கொடுத்து நடந்துக்கங்க.



**கும்பம்** : (அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)

ஆன்மிகவாதியான உங்களுக்கு இப்ப நேரம் நல்லா இருக்கு. நினைச்ச காரியத்தை முடிப்பீங்க. சமூகப் பணிகள்ல ஆர்வம் கூடும். கொஞ்சம் வீட்டையும் கவனிச்சா நல்லது. பணப் பிரச்னை இருக்காது. உடன் பிறந்தவர்களால சில சிக்கல்கள் உண்டாகலாம். பெற்றோர் உடல்நலன் கவலைக்குரியதா இருக்கும். ஆபீஸ்ல அதிகாரிகள் கோபித்துக் கொள்ளும்படி ஒரு இசகுபிசகான காரியம் பண்ணுவீங்க. உங்க பக்கத்து வீட்டுக்காரங்களோட சண்டை சச்சரவு இல்லாம பார்த்துக்க வேண்டியது இப்ப ரொம்ப முக்கியம்.





மீன ராசிக்காரரான தேவயானி, முக்கியமான பொறுப்புகளை சிறப்பா நிறைவேத்துவாராம்! புகழ் கூடுமாம்!

**மீனம்** : (பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

சில முக்கியமான பொறுப்புகளை சிறப்பா நிறைவேத்துவீங்க. அதனால புகழ்கூடும். சிலருக்கு எதிர்பாராத பணவரவு இருக்கும். அறிவியல், கலை, கம்ப்யூட்டர் துறையினருக்கு வெற்றி வாய்ப்பு கூடும். சட்டம், காவல் துறையினருக்கு வேலையும் பலனும் அதிகமா இருக்கும். சமூக சேவகர்கள், அரசியல்வாதிகளுக்குப் புகழ் கூடும். ஆன்மிக சுற்றுப் பயணம் ஒண்ணு ஆனந்தமா அமையும். பெண்களுக்குப் பதவி உயர்வுக்கான வாய்ப்பு பிரகாசமா இருக்குது. ●

நவம்பர் 24 முதல் 30 வரை

# கோணல் மரம்

மும்தாஜ் யாசீன்

"அம்மா... பெரியண்ணன் நாகுவைப் போட்டு அடிக்குது!" சின்னப் பொண்ணு ஓடி வந்து சொன்னபோது புகையடிக்கும் ஈர விறகை சபித்தபடி அடுப்பைப் பற்ற வைத்துக் கொண்டிருந்தாள் காளியம்மாள்.

அடிவயிறு பற்றிக் கொள்ள, "அட நாசமாப் போக... எங்கேடி?" வாரிச் சுருட் டிக் கொண்டு எழுந்தாள்

"தேரடி முக்கூட்லம்மா..."

"அடுப்பைப் பார்த்துக்க.... வந்துட் டேன்..."

எட்டு வயதுப் பெண் என்ன பார்க்கும் என யோசிக்க முடியவில்லை. விடுவிடு வென்று நடக்க ஆரம்பித்தாள்.

தேரடி அப்படியொன்றும் பக்கம் இடை யாது.

"போறதுக்குள்ள என்ன ஆகுமோ... பாவிப்பய என்ன பாடுபடுத்தறானோ?"

பெரியவனை நினைக்கும்போது உள்ளுக் குள் எரிந்தது. வரவர அவனது அட்டகாசம் தாங்க முடியவில்லை. தினத்துக்கும் ஏதாவது சண்டை, ரகளை. அவன் வீட்டிலிருக்கும் போது சின்னதுகளை விட்டுப் போக முடிவ தில்லை. மனத்துக்குள் ஒரு திகில் இருந்து கொண்டேயிருக்கும். எந்த நேரத்தில் என்ன செய்வான் என்று தெரியாது.

திடீரென்று நாகுவோ, சின்னப் பொண்ணோ அலறுவார்கள்.

"என்னடி... என்னடா?" ஓடிப் போய்ப் பார்த்தால் கையை முறுக்கிக் கொண்டிருப் பான். முடியைக் கொத்தாகப் பிடித்திருப் பான். கீழே தள்ளியிருப்பான்.

"பாரும்மா... காசு தரலைன்னு அண் ணன் அடிக்குது."

காசு. காசு. இந்த வயதிலேயே காசு ருசி வந்து விட்டது. செலவு பண்ணவும் கற்றிருந் தான். எல்லாம் கெட்ட சகவாசம். சினிமா, பீடி, வேறு என்னென்ன இழவுகளோ. வீட்டில் பத்திரமாக தகரப் பெட்டியில் வைத்திருந்த கால் கொலுசு காணாமல் போயிருக்கிறது. தகரப் பெட்டியிலிருந்த பணத்தை ஒரு தடவை திருடியது உண்டு. பித்தளைப் பாத்திரங்கள் ஒவ்வொன்றாகத் தொலைந்திருக்கிறது.

திடீரென்று வீட்டிற்கு வர மாட்டான். சினிமாக் கொட்டகையிலோ, சந்தைப் பேட் டையில் மூணு சீட்டு விளையாடும் பையன் களுடனோ பார்த்ததாக யாராவது சொல்வார் கள். அப்போதைக்கு வெறுத்துப் போய், "எக்கேடுனா கெட்டு நாசமாப் போகட்டும்..." என்றுதான் தோன் றும். கொஞ்ச நேரத்தில் மனம் கசிய ஓடிப் போய் கூட்டி வருவாள்.

கன்னம் ஒடுங்கி, கண்கள் குழி விழுந்து இரண்டு மூன்று நாள் பசியுடன் அள்ளி அள்ளித் தின்பதைப் பார்த்தபடி, "உனக்கு என்னடா புடிச்சிருக்கு? ஏன் இப்படி இருக்கே?" என புலம்பியபடியே பரிமாறு வாள். அவளது அழுகைக்கு எதிர்ச் சொல் பேசாமல் தலை கவிழ்ந்து இருப்பான். ஆத்திரமான வார்த்தைகளுக்கு மட்டும் முறைப்பான். தனது விதியைப் பற்றி இரக்கம் தரும் வார்த்தைகளால் அவள் பேசு வது அவனிடத்தில் எவ்விதப் பாதிப்பையும் ஏற்படுத்தாதது போலிருக்கும்.

அல்லும் பகலும் அவனது கவலைதான் காளியம்மாளுக்கு. தகப்பன் இல்லை என்ப தால் எந்தக் குறையும் அவள் வைத்ததில்லை. ஐந்தாம் வகுப்பு வரை படிக்க வைத்தாள். மூணாம் வருஷமும் பெயில் ஆன போது சண்முகம் வாத்தியார் அவளைக் கூப்பிட்டு அனுப்பி, சொன்னார். "உம் மகனுக்கு படிக்கிற ஆர்வமே இல்லைம்மா. ஏதாச்சும் ஒர்க்ஷாப்புல விடு. தொழில் கத்துக்கட் டும்...."

மணியண்ணன் பட்டறையில் ஒண் ணரை வருஷம் இருந்தான். ஒருநாள்

தானாகவே உதறி விட்டு வந்தான்.

"ஏண்டா...?

"அந்தாளு மூஞ்சியக் கண்டாலே புடிக் கலை."

"ஏண்டா.. நீ தொழிலே கத்துக்கத்தானே போறே...?"

"அதுவும்தான் புடிக்கலை... போ..."

கொஞ்ச நாள் சுற்றிக் கொண்டிருந்து விட்டு லாரி கிளீனராகப் போனான். ஒவ்வொரு முதலாளியாக மாறிக் கொண்டிருந்தான். "எங்கூட ரைஸ் மில்லுக்கு வாயேண்டா... முதலாளிகிட்டச் சொல்லி சேர்த்து விடறேன்..."

"அதெல்லாம் நமக்கு சரிப்படாது..."

வீட்டிற்கும் காசு தருவது கிடையாது. 'அப்பனும் இல்லையே... தம்பி தங்கையை வச்சுக்கிட்டு அம்மா கஷ்டப்படறாளேன்னு நெனைப்பு வருதா.. மவனுக்கு?' என ஒரோர் சமயம் தோன்றும். 'எல்லாம் அந்தந்த வயசு வந்தா... புரியும்...' என தனக்குத்தானே சமாதானம் சொல்லிக் கொள்வாள்.

அவள்தான் வேறு என்ன செய்ய முடியும்?

**பெ**ரிய பள்ளிவாசல் காம்பவுண்டு சுவரைத் தாண்டி, வடக்குத் தெருவில் நடக்கும் போது, நாகு நொண்டி நொண்டி வந்து கொண்டிருந்தான்.



# பார்த்திபனின் புதிய ஃபார்முலா!



ஷோலோவை விட, இன்னொரு ஹீரோவுடன் இணைந்து நடிப்பதையே அதிகம் விரும்புகிறார் பார்த்திபன். 'நீ வருவாயென' வெற்றியின் விளைவாக அடுத்தது, ஜேம்ஸ் பாண்ட்.

இதில் ஜேம்ஸாக பிரபுதேவா. பாண்டுவாகப் பார்த்திபன். இரு திருடர்களின் கதை என்கிறார்கள். திருடா, திருடா; டாட்டா–பிர்லா என பழைய ஞாபகம் வர நியாயமில்லை. ''டோட்டலி நியூ'' என்கிறார் படத்தின் பி.ஆர்.ஓ.

குடியரசு தினத்தன்று குட்டு உடைந்து விடும்.

அம்மாவைக் கண்டதும் அவனது துக்கம் உடைப்பெடுத்து விட்டது.

வலிமைமிக்க மிருகம் குதறிப் போட்டதைப் போலிருந்தான். முழங்கையில் சிராய்ப்புக் காயம். முகத்தில் இரத்தக் கசிவுடன் நகக்கீறல். கீழே விழுந்திருப்பான் போல. உடலெங்கும் புழுதி. சட்டை கசங்கிக் கிழிசலுடன்...

"என்னடா... சண்டை? அந்த மோசக்காரன் எங்கேடா?"

"அம்மா.... அம்மா..." என்று நாகு அழ ஆரம்பித்தான். அவளது அணைப்பில் இறுகியிருந்த முடிச்சு அவிழ்ந்து கதறலாக மாறி விட்டது.

அவளது கண்களும் கலங்க ஆரம்பித்தன.

"அழுவாதே... வீட்டுக்கு வா... பேசிக்கலாம்..."

"என்ன மதனி... பைட் சீன் முடிஞ்சுதா?" சைக்கிளில் அந்தப் பக்கம் போன பர்வதத்தம்மாள் மகன் கேட்டான். ஒரே வயிற்றில் பிறந்ததுகள் வீதியில் கட்டிப் புரண்டால் யாருக்குத்தான் இளப்பமாக இருக்காது?

வீட்டிற்கு வந்ததும் நாகராஜனை ஆற அமர உட்கார வைத்து, ''அவன்ட்ட ஏண்டா சண்டைக்குப் போறே...?'' எனக் கேட்டாள்.

"நான் போகலை. அவனா சண்டைக்கு வர்றான்ம்மா..." என்றான் நாகு.

"என்ன எழவாம் அவனுக்கு?"

"அரிசி வாங்க நீ குடுத்ததுல அஞ்சு ரூவா குடுறான்னான். முடியாதுன்னேன். அதுக்கு... அதுக்கு..." நாகுவால் பேச முடியவில்லை.

"அழுவாதே... அடக்க ஆள் இல்லைன்னு நெனைச்சுட்டான் போல. பாக்குறேன். பொறு!" என்றாள் காளியம்மாள்.

மணி எட்டு இருக்கும் போலிருந்தது. ஸ்கூல் வேன் சப்தம் கேட்டது.

"ஏம்மா... வேலைக்குப் போகலையா?" சின்னப் பொண்ணு மெதுவாகக் கேட்டாள்.

வெறித்த பார்வையுடன் சுவரில் சாய்ந்திருந்த காளியம்மாளின் முகத்தில் சலனமில்லை. அம்மாவையும், அவளது மடியில் குப்புறப்படுத்திருந்த சின்ன அண்ணனையும் மாறி மாறிப் பார்த்து விட்டு அவளும் படுத்துக் கொண்டாள்.

வாசலில் வெளிச்சம் நிழலாடியது.

"ஏண்டி... நாகுவை அந்தப் பாவி அடிச்சுப் போட்டானாமே... என்னைக் கூப்பிடக் கூடாது?" வாசுகி அக்காள் உள்ளே வந்தாள்.

---



"அந்தப் படத்தோட கிளைமாக்ஸ்ல வேர்த்து விறுவிறுத்துப் போயிடுது."

"அவ்வளவு த்ரில்லா...?"

"ஊஹூம்; கடைசி பத்து நிமிஷம் தியேட்டர்ல ஃபேன் எல்லாத்தையும் நிறுத்திடறாங்களா... உட்கார முடியாத அளவுக்குப் புழுக்கம் சார்!"

— சீர்காழி ரேவதி

ரைஸ் மில்லில் அவளோடு வேலை பார்க்கிறவள். அவளுக்குத் தெரியாத குடும்ப சங்கதி கிடையாது. "வாக்கா..." காளியம்மாள் நகர்ந்து இடம் கொடுத்தாள்.

"இப்படியே விட்டா அவன் திருந்த மாட்டான். எந்திரி. முதலாளிகிட்டப் போயி சொல்லலாம்..." வாசுகி அக்காள் எப்போதும் சொல்வதை இப்போதும் சொன்னாள். முதலாளியிடத்திலும் சரி, அவரது சம்சாரத்திடமும் சரி அவளுக்கு நல்ல பழக்கம் உண்டு. எது ஒன்றுக்கும் மேஸ்திரிக்கு போன் போட்டு, "வாசுகிய வரச் சொல்லு..." என்று சொல்வது அந்தம்மாவுக்குப் பழக்கமாக இருந்தது. "முதலாளி நல்ல மனுஷர்டி. நம்ம நல்லது கெட்டதுகள்ல நிசம்மா ஏதாச்சும் செய்யணும்னு நினைக்கிறவர் அவர்..." என்று அடிக்கடி சொல்வாள். பெரியவனின் ஒவ்வொரு அடாவடிச் செயலுக்கும் கவலைப்பட்டாலும், முதலாளியிடம் சொல்லி அவனைக் கண்டிக்க வேண்டும் என்று காளியம்மாள் நினைத்தது இல்லை. ஆனால் இப்போதைய மனநிலையில், 'வேற என்ன தான் பண்றது? நமக்குன்னு எந்த ஆம்பளை இருக்கான் தட்டிக் கேட்க?' என யோசித்தாள்.

"இந்த வயசுல பாவ புண்ணியம் தெரியணும். கெட்டதுக்கு பயப்படணும். பின்னால அதெல்லாம் வராது. பழி பாவத்துக்கு அஞ்ச மாட்டானுக. உன் நல்லதுக்குத்தான் சொல்றேன். எந்திரி... இத்தனை கஷ்டப்பட்டு நீ வளத்ததுக்கு அர்த்தமில்லாமல் போகும். ஊர் உலகம் உன்னைத்தான் குத்தம் சொல்லும்..." அந்தக்காள் பேசப் பேச காளியம்மாவின் மனம் அடியோடு மாறி விட்டது.

"முதலாளி இதுல என்னக்கா பண்ண முடியும்?" என்றாள்.

"அதை அப்புறம் சொல்றேன். முதல்ல நீ கௌம்பு" அவளின் உத்தரவை எதிர்பார்க்காமல், "எந்திரிங்க..." என நாகுவையும், சின்னப் பொண்ணையும் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வெளியே வந்தாள் - வாசுகி.

காளியம்மாளும் புறப்பட வேண்டியதாயிற்று.

ஈஸிசேரில் சாய்ந்து கண்களை மூடியபடி அவள் சொல்வதை எல்லாம் கேட்ட முதலாளி, "நான் என்ன செய்யணும்..." என்றார்.

"அய்யாவாப் பார்த்து எது செஞ்சாலும் சரி..." என்றாள் வாசுகி.

இந்த ரீதியான வார்த்தைகள் முதலாளியை வீழ்த்தி விடும் போலும். முதலாளி மீண்டும் கண்களை மூடிக் கொண்டார். அவர்கள் அவரையே பார்த்துக் கொண்டிருக்க படக்கென்று கண்களைத் திறந்தார்.

"போலீஸ்ல புடிச்சுக் குடுக்கலாமா?"

"அது வேணாம்ங்க..."

முதலாளி மீண்டும் யோசித்தார்.

"சரி... சின்னவனை விட்டு விசாரிக்கச் சொல்றேன். சரிதானே?" வாசுகியின் முகம் பிரகாசமடைந்தது.

பெரியவரைப் போல நிதானம் காட்டக் கூடியவரல்ல சின்ன முதலாளி. சொல்லுக்கு எதிர்வார்த்தை பேசினாலே கோபம் வந்து விடும். கெட்ட வார்த்தை தெறித்து விழும்.



**"உங்க மகளும் உங்களை மாதிரியே நடிகை ஆயிடுவான்னு தோணுது மேடம்."**
**"எப்படிச் சொல்றீங்க?"**
**"நறுமணம்னு எழுதச் சொன்னா, மறுமணம்னு எழுதறாளே!"**
**— சீர்காழி ரேவதி**

உதறிக் கொண்டு எழுகிற வேகத்திலேயே வேலையாட்கள் நடுங்கிப் போவார்கள். அவனை இழுத்து வந்து எதிரில் நிறுத்தினாலே பயல் ஆடிப் போவான். நாலு சாத்தினால் ஜென்மத்துக்கும் மறக்காது.

"அதான் சொல்லிட்டன்ல... பாக்கலாம்..." என்றார் முதலாளி.

விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தார்கள்.

வாசுகி பெருமையுடன் பார்க்க, காளியம்மாளின் மனம் இலேசாகி இருந்தது.

இரண்டு மூன்று தினங்களுக்கு ரைஸ் மில்லில் இதே பேச்சாக இருந்தது. அவளது புருஷனின் குணத்தை அறிந்தவர்கள், "அவருக்குப் பொறந்ததா இப்படி?" என ஆதங்கப்

## காதல் சொல்லும் ஜோடி!

காதலர்களுக்குப் பிரிவுதானே பெரிய பிரச்னை?

இங்கே, ஒரே வீட்டில் வ[illegible]கிற காதலர்களின் பிரச்னையைச் சொல்கிறார், [illegible]தர் சி. படம்– காதல் சொல்ல வந்தேன்.

நியூசிலாந்துக்கெல்லாம் போய் படம் பிடித்து



வந்திருக்கும் டைரக்டரே, ஸ்டில்லில் இஷா அணிந்திருக்கும் இத்தனை தடிமனான வளையல் எந்த ஊர் ஃபாஷன்?

பட்டார்கள். "என்னதான் இருந்தாலும்... பொம்பளை வளர்ப்புத்தானேங்கிறது சரியாத்தாம் போச்சு..." அவளுடன் களத்தில் நெல் தூவும் போதும், குருணையைப் புடைக்கும் போதும் ஜோடி சேருகிறவர்கள் வருத்தப்பட்டார்கள். "இத முதல்லியே சொல்லியிருக்கணும். முதலாளி இத்தனை தூரம் வளர விட்டிருக்க மாட்டார்.... இனி அவன் திருந்திருவான். பாரு..."

அவளுக்குள்ளும் நம்பிக்கை முளை விட ஆரம்பித்தது. அவள் சொல்வதைக் கேட்டு சின்னதுகளுக்கும் ஆர்வம் வந்து விட்டது.

"ஏம்மா.... பெரியண்ணனை புடிச்சிருவாங்களா?"

"ம்..."

"அடிப்பாங்களா?"

"தெரியலை..."

"அம[illegible]சாத்தான் திருந்துவான்னு அந்தக்கா சொல்லிச்சு...."

ஒரு வாரமாகி விட்டது – அவன் வீட்டிற்கு வந்து. ஐந்து ரூபாய் கூட இல்லாமல் சண்டை போட்டவன் சோத்துப் பாட்டுக்கு என்ன செய்கிறான் என்று தெரியவில்லை. வாயில் வைக்கும் கவளம் உள்ளே இறங்காமல் எதுக்களித்தது அவளுக்கு.

"எனக்குன்னு இந்த நாற விதியை எழுதிப் போட்டியே ஆண்டவனே..." கண்கள் கசிய உருகிக் கொண்டிருந்தாள்.

அவள் எதிர்ப்படும்போதெல்லாம் முதலாளியும் விசாரித்துக் கொண்டுதானிருந்தார்.

"ஏம்புள்ள... ஒம்பையனைப் பத்தி ஏதாச்சும் தகவல் தெரியுமா?"

"இல்லீங்க.. முதலாளி.."

"நானும் விசாரிச்ச வரைக்கும் இங்கதான் சுத்தறானாம். ஆளுககிட்ட சொல்லி இருக்கேன். கெடைக்கட்டும்..."

"சரிங்க..."

"உன் கண்ணுல பட்டான்னா ஒண்ணும் பேசாதே. சின்னவனுக்குத் தகவல் அனுப்பிரு. அவன் பார்த்துப்பான்..."

"சரி, முதலாளி..."

அன்றிர[illegible] அவளுக்கொரு கனவு வந்தது.

பெரியவன் பிடிபட்டிருந்தான். தூணில் கட்டியிருந்தார்கள். எதிரே துடுப்புத் துடுப்பாக கை கால்களுடன் சின்ன முதலாளி. கையில் சுருட்டிப் பிடித்த இடுப்பு பெல்ட்.

பெல்ட் மின்[illegible]கச் சுழன்றது. சுளீரென்று சதையை[illegible]த்துக் குதறும் வீச்சு. பையன் சுருண்[illegible]ந்தான். "பெரிய சண்டிராடா [illegible] [illegible]ல ரவுடித்தனம் பண்றியா?"

தலைமுடியைக் [illegible]தாகப் பிடித்துத் தூக்கினார். முறுக்கி[illegible] வலது கை முகத்தில் இறங்கியது. வாய் [illegible] சிவப்புச் சிதறல். லாடம் பதித்த செ[illegible]க காலில் நெஞ்சில் ஓங்கி மிதித்தார். "[illegible]டுக் கேளு. இப்படியே கொன்னுருவேன்..."

இரண்டாவது மிதிக்கு பையன் நடுங்கிப் போனான். [illegible] வாயைத் திறந்தான். கும்பிட்டபடி[illegible]ம.. வேணாம் முதலாளி" என்[illegible]கினான்.

"அப்படி வா வழிக்கு... சொன்னபடி கேக்கிறியா?"

"கேக்கறேன்..."

"நெசந்தானே?"

"சத்தியமா..."

சின்ன முதலாளி நெஞ்சு சட்டையைப்

பற்றிச் சுவரோடு அழுத்தி நிறுத்தினார். முகத்தில் எதிரி மன்னனை வீழ்த்திய எக்காளம். கையசைத்து காளியம்மாளைக் கூப்பிட்டார். "பாவம்னு இதோட விடறேன்... இனிமே ஏதாச்சும் பண்ணினா வந்து சொல்லு..."

"சரீங்க... முதலாளி.."

"கூட்டிட்டுப் போ..."

தள்ளாடி நிற்கும் மகனை நீர்கசியப் பார்க்கிறாள். ஆதரவாகத் தோளைப் பற்றி தட்டி விட்டாள். "எனக்கு அடி வாங்கிக் குடுத்துட்டியா?" அடிபட்ட பாம்பாகச் சீறும் கண்கள். குரோதப் பார்வை. நடுங்க வைக்கும் பல் நெறிப்பு.

படக்கென்று விழித்தாள். நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது.

தாகமெடுத்தது. மொண்டு குடித்து விட்டு வந்தாள். நாகு தங்கையின் மீது கால போட்டிருக்க விலக்கி விட்டாள். சேலையால் போர்த்தி விட்டாள். அசப்பில் தன் ஜாடையில் இருக்கும் சின்னப் பொண்ணை பார்த்தாள். தூக்கம் வராது போலிருந்தது. ரேஷன் அரிசி பையோடு இருந்தது. எடுத்துக் கல் பொறுக்கினாலும் வேலையாகும்.

படீரென்று ஜன்னலில் சப்தம். கல் ஒன்று உள்ளே வந்து விழுந்தது. திடுக்கிட்டு சுதாரிப்பதற்குள் இன்னொரு கல். "ஆர்ராது?"

வாரிச் சுருட்டி எழுந்து ஜன்னலருகே செல்ல, வெளியே அவன் – பெரியவன்.

அவன் தலையைக் கண்டதும் ஆவேசத்துடன், "என்னைப் புடிக்க ஆள் அனுப்பறியா... நீயெல்லாம் பெத்தவளா?" என்று [illegible]யும் கல் பொறுக்கி வீச, குனிந்து கொண்டாள். [illegible] சின்னதுகளும் விழித்துக் கொண்டன.



"அம்மா... நான் பின்னாடி வழியா ஓடிப் போய் முதலாளியக் கூட்டி வரவா?" என்றான் நாகு.

காளியம்மாள் அதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. சுருக்குப் பையைப் பிரித்துப் பணம் எடுத்தாள். இரண்டு பத்து ரூபாய். சின்னப் பொண்ணுவிடம் நீட்டி, "பசியில கத்திட்டுக் கெடக்கிறான். இந்தா... இதை அவன்கிட்டக் குடு" என்றாள்.

"அம்மா... சின்ன [illegible]"

"அதெல்லாம் வேணாண்டா. பாவம். அவனுக்கா புத்தி வர்றப்ப வரட்டும். காசை வாங்கிட்டு முதலாளி கண்ல படாம போகச் சொல்லு..." என்றாள்.

நாகு ஒன்றும் புரியாமல் அம்மாவையே பார்த்துக் கொண்டு நின்றான் ●

## வருகிறது அகனி!

அசோக்குமாரின் 'காமா' பலத்த சர்ச்சைகளுக்கும் வெட்டுகளுக்கும் இரையாகி, ஓடி முடிந்த சூடு ஆறவில்லை. அதற்குள் வருகிறது, காமாக்னி.

ஜகதீஷ் ரெட்டி என்பவர் இயக்கும் இப்படத்தில் மும்பை மாடல் கமலேஷுமை உத்திரப்பிரதேசத்து சுஷ்மிதாராயும் (பெயரை உற்றுக் கவனியுங்கள்; புனை பெயரில் என்ன ஒரு 'உலக' இணைப்பு!) நடிக்கிறார்கள்.

மறைந்த இசையமைப்பாளர் ஆர்.டி. பர்மனின் உதவியாளர் ராம் இதில் இசையமைப்பாளராக அறிமுகமாவது ஒரு விசேஷம்.

அது சரி. படம் என்ன மொழி?

சொல்லவும் அவசியமா? ஹிந்தியிலிருந்து டெப்பிங்குங்க.

சேலம் அருகே ராசிபுரத்துக்குப் பக்கத்தில் உள்ள கிராமத்தைச் சேர்ந்தவர் விஜயா. வயது 25. திருமணமாகி இரண்டு குழந்தைகள். ஒருநாள், தெரியாத்தனமாக விஷத்தைச் சாப்பிட்டு விட்டார் விஜயா. கணவர், அப்பா – அம்மா என்று மொத்தக் குடும்பமும் சேலம் மருத்துவமனைக்கு விஜயாவைத் தூக்கிக் கொண்டு ஓடினார்கள். விஷ முறிவுச் சிகிச்சையின் ஒரு பகுதியாக, வென்டிலேட்டர் இயந்திரம் வழியாக செயற்கைச் சுவாசம் கொடுக்க வேண்டியிருந்தது. வென்டிலேடரின் டியூபை, தொண்டைக்கு உள்ளே செலுத்தி, தொடர்ந்து சிகிச்சை அளித்ததில் விஜயா பிழைத்துக் கொண்டார்.

ஆனால், செயற்கை சுவாசத்துக்காக மூச்சுக் குழாயில் வென்டிலேடர் டியூபை அதிக நாள் பொருத்தி வைத்திருந்ததன் காரணமாக, மூச்சுக் குழலில் திசு தடித்துப் போய், அங்கங்கே தழும்புகள் ஏற்பட்டு விட்டன! இந்தத் தழும்புகள் மூச்சுக் குழாயில் உருவானதால், பாதை சுருங்கி, சரியாக மூச்சு விட முடியாமல் திணறினார் விஜயா.

மரணத்தின் பிடியிலிருந்து காப்பாற்றிய டாக்டர்கள், விஜயாவின் பெற்றோரிடம், 'இனி இங்கேயே வைத்துக் கொண்டிருப்பதில் பயனில்லை. சென்னைக்கு அழைத்துக் கொண்டு போய், நவீன சிகிச்சை முறையில் ஏதாவது செய்ய முடிந்தால், பிரச்னையைத் தீர்க்கலாம்' என்று யோசனை சொன்னார்கள்.

விஜயாவின் குடும்பம் விவசாயக் குடும்பம். நிதி வசதி அவ்வளவாக இல்லாதது. இருந்தாலும் சேலத்து டாக்டர்களின் சிபாரிசின்படி சென்னைக்குக் கூட்டிக் கொண்டு வந்து, காது-மூக்கு-தொண்டை சிகிச்சை நிபுணர் டாக்டர் மோகன் காமேசுவரனிடத்தில் காண்பித்தார்கள்.

கழுத்திலிருந்து கிட்டத்தட்ட நாலு அங்குலத்துக்கு மூச்சுக் குழாய் குறுகியிருந்தது. குரல்வளைக்குக் கீழே, அதுவும் மூச்சுக் குழாயின் அடிப்பாகத்தில், நுரையீரலோடு சேருகிற இடத்தில், தழும்பு காரணமாக, இயல்பான அளவை விடக் குறுகியிருந்தது. இதுதான் விஜயா மூச்சுவிடத் திணறியதற்குக் காரணமாக இருந்தது.

"சாதாரணமாக, இப்படிப்பட்ட நிலையில் மார்பைத் திறந்து அறுவைச் சிகிச்சை செய்வார்கள். ஆனால், விஜயாவுக்கு மூச்சுக் குழாய் ஏற்கெனவே சுருங்கியுள்ள நிலையில், அனஸ்தீசியா எனும் மயக்க மருந்து கொடுப்பது உட்பட, அறுவைச் சிகிச்சையில் பல தரப்பட்ட சிக்கல்கள் எழும். ஹார்வி ஹாஸ்பிடல் அதிபர் டாக்டர் நரேஷ்குமாரிடம் பேசினேன். 'பிரச்னைகள் நிறைந்த ஒரு நோயாளி என்னிடம் வந்திருக்கிறார். அவரை எப்படியாவது காப்பாற்றி, இயல்பாக மூச்சு விட வைப்பது நமக்கு முன்னால் உள்ள சவால்' என்றேன். அயல்நாடுகளில் பல மருத்துவமனைகளில் பணியாற்றி, சற்று வித்தியாசமாகச் சிந்தித்துச் செயல்படுகிற டாக்டர் நரேஷ்குமார், என்னோடு ஒத்துழைக்க முன்வந்தார். ஹார்வி ஹாசட ஹாஸ்பிடலில்* விஜயாவுக்குச் சிகிச்சை அளிக்கத் தீர்மானித்தோம்!'' என்றார் டாக்டர் மோகன் காமேசுவரன்.

• விஜயா



தொடர்ந்தார் டாக்டர் நரேஷ்குமார் :

"மூச்சுக் குழாயில் தடை ஏற்பட்டு அதை அறுவைச் சிகிச்சை மூலம் நீக்குவது

சகஜம்தான். ஆனால் இது சிக்கலானதாக இருந்தது. ஈ.என்.டி. சிகிச்சை நிபுணர்கள் சில சமயங்களில் லேசர் கருவியைப் பயன் படுத்துவது தெரியும். ஆனால் இங்கே அதி லும் ஒரு பிரச்னை குறுக்கிட்டது. லேசர் சிகிச்சையின்போது, ஆக்ஸிஜனுடன் லேசர் ஒளிக்கதிர் சேர்ந்தால் தீப்பற்றிக் கொள்ளும் விபரீதம் இருந்தது. அதைத் தவிர்ப்பது எப் படி? அதாவது, நோயாளி மூச்சு விடுவதை யும் நிறுத்த வேண்டும். அறுவைச் சிகிச்சை யும் செய்ய வேண்டும்! இது எப்படி சாத்தி யம்? அனஸ்தீசியா நிபுணர் டாக்டர் ரத்ன ராஜுடன் கலந்து ஆலோசித்தோம்.

லேசர் சிகிச்சையின் போது இதயத்தை இயக்க ஹார்ட்-லங் மெஷினுடன் நோயாளியை இணைப்பது. இயந்திரம் நோயாளிக்காக மூச்சுவிடும் வேலையைச் செய்யும் நேரத்தில், சிகிச்சையை முடித்து விடுவது என்று தீர்மானித்தோம்.

"மறுபடி ஒரு பிரச்னை எழுந்தது. சிகிச் சைப் பகுதியில மூச்சுக் காற்று படக்கூடாது! இப்படி ஆக்ஸிஜன் படாதவாறு கண் காணிக்க, அனஸ்தீசியா நிபுணர், நோயாளி யின் காலில் உள்ள பிரதான ரத்தக்குழாய் வழியாக ஹார்ட்-லங் மெஷினை இணைத்து விட்டார்!

"லேசர் சிகிச்சை தொடங்கினோம். இதற்காக உபயோகித்த கே.டி.பி. லேசர் மிக நவீனமானது. இதன் சக்தி அபாரமானது. இதன் ஒளி, ஒரு சிமெண்ட் சுவரைக் கூட உடைத்து விட முடியும்! இந்த லேசர் ஒளியில் ஆறில் ஒரு பங்கைத்தான் சிகிச் சைக்குப் பயன்படுத்தினோம்!

"லேசர் சிகிச்சையின்போது, திசு தடிப் பினால் உருவான தழும்புகள் மறைந்தன. விஜயாவின் மூச்சுக் குழாய்ப் பாதையில் இருந்த தடைகள் எல்லாம் நீங்கி, பழைய மாதிரி ஆயிற்று. கிட்டத்தட்ட ஒன்றரை மணி நேரம்தான் லேசர் சிகிச்சை. அறுவைச் சிகிச்சை என்றால் இரத்தச் சேதம் உண்டா கும். இதில் ஒரு துளி கூட இரத்தச் சேதம் இல்லை. கத்தியும் கிடையாது. ஹார்ட்-லங் மெஷினும் லேசர் கதிருமாகச் சேர்ந்து ஒரு நவீன உத்தியைக் கையாண்டோம். ஒரு சவாலை வெற்றிகரமாகச் சமாளித்த திருப்தி உண்டாயிற்று!"

"ஒரு சாதனை நிகழ்த்திக் கொண்டிருக் கிறோம் என்று தெரியாமலேதான் சிகிச்சை யைச் செய்து முடித்தோம்!" என்றார் டாக்டர் மோகன் காமேசுவரன்.

"இத்தனை சிக்கல்களுடன் ஒரு நோயாளி நம்மிடம் வந்திருக்கிறார். எப்படியாவது அவரைக் காப்பாற்றியாக வேண்டும் என்று தான் ஆரம்பத்தில் சிகிச்சையைத் தொடங்கி னோம். எல்லாம் முடிந்த பிறகு, இது சம்பந்தமான மெடிகல் சரித்திரங்களை இன்டர்நெட்டில் ஆராய்ந்த பிறகு தான் தெரிந்தது, உலகிலேயே முதல் முறையாக இப்படி ஓர் 'அறுவைச் சிகிச்சை'யை இங்கே செய்திருக் கிறோம் என்று!" என்றார் டாக்டர் நரேஷ்குமார்.




• டாக்டர் நரேஷ்குமார், டாக்டர் ரவி, டாக்டர் ரத்னராஜ், டாக்டர் மோகன் காமேஸ்வரன், விஜயா.

**நா**ம் விஜயாவைச் சந்தித்த போது, முன்பு மூச்சு விட மிகவும் சிரமப்பட்டதையும், இப்போது அப்படி இல்லை என்றும் சொன் னார். மூச்சு இரைக்காமல் பேசி னார்.

"எவ்வளவு செலவு ஆயிற்று?" என்று அவரிடம் கேட்டபோது, டாக்டர்களை நோக்கிக் கையைக் காட்டினார் நன்றியுடன்.

டாக்டர் நரேஷ்குமார் பீஸ் எதுவும் வாங்கிக் கொள்ளவில்லை என்ப தோடு, தமது ஹார்வி ஹார்ட் ஹாஸ்பிட லில் ஆன செலவுகளையும் கூட வாங்கிக் கொள்ளவில்லையாம்!

— எஸ்.வி.என்.




## நான்காம் அத்தியாயம்

### ஐயனார் கோயில்

கெடில நதிக்கரையில் பாட்டனும் பேரனும் பேசிக் கொண்டிருந்த அதே சமயத்தில் கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள திருக்கானாட்டு முள்ளூர் என்னும் ஊரில் நம் பழைய நண்பர்களான ஆழ்வார்க்கடியானும் வந்தியத்தேவனும் ஒரு விநோதமான காரியத்தில் ஈடுபட்டிருந்தார்கள். அக்காலத்தில் வடகாவேரியாகிய கொள்ளிடமும் தென் காவேரியைப் போலவே புண்ணிய நதியாகக் கருதப்பட்டு வந்தது. துலா மாதத்தில் தினந்தோறும் கானாட்டுமுள்ளூர் ஆலயத்தில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான் ரிஷபாரூடராகக் கொள்ளிடக் கரைக்கு எழுந்தருளி ஸ்நானத்துக்கு வந்துள்ள பக்தர்களுக்குச் சேவை தருவது வழக்கம். மத்தியான வேளையில் ஒவ்வொரு நாளும் உற்சவமாகவே இருக்கும். அக்கம் பக்கத்துக் கிராமங்களிலிருந்து பக்தர்கள் திரண்டு வருவார்கள். சைவர்களும் வருவார்கள்; வைஷ்ணவர்களும் வருவார்கள். விஷ்ணு கோயில் அந்த ஊரில் சிறிதாக இருப்பினும் அந்தக் கோயிலிலிருந்தும், பகவான் கருட வாகனத்தில் ஆரோகணித்துக் கொள்

அமரர் கல்கி

ளிடக் கரைக்கு எழுந்தருளுவார்.

இவ்விதம் துலா மாதத்தில் வட காவேரியில் ஸ்நானம் செய்வதற்காக வந்து கூடியிருந்த ஜனக் கூட்டத்தினிடையே ஆழ்வார்க்கடியான் ஒரு நாவல் கிளையை மண்ணில் நட்டு வைத்துக் கொண்டு, "நாவலோ நாவல்! நாவலோ நாவல்! இந்த நாவலந் தீவில் வைஷ்ணவ சமயமே மேலான சமயம் என்று நிலைநாட்டுவதற்கு வாதப் போர் புரிய வந்துள்ளேன். சைவர்கள், சாக்தர்கள், அத்வைதிகள், காபாலிகர்கள், காளாமுகர்கள், புத்தர்கள், சமணர்கள் யார் வேண்டுமானாலும் வாதப் போர் புரிய வரலாம். அவர்கள் வெற்றி பெற்றால் அவர்களை என் தோள் மீது தூக்கி வைத்துக்கொண்டு ஊரைச் சுற்றி ஊர்வலம் வருவேன். அவர்கள் தோற்றால் இடுப்புத் துணியைத் தவிர மற்றதையெல்லாம் இங்கே கொடுத்து விட்டுப் போக வேணும்! நாவலோ நாவல்!'' என்று கத்திக் கொண்டிருந்தான். அவனுக்கு முன்னால் ருத்திராட்ச மாலைகள், மகர கண்டிகள், கமண்டலங்கள், குண்டலங்கள், பட்டு பீதாம்பரங்கள், பொற்காசுகள் ஆகியவை குவிந்து கிடந்தன. இவற்றிலிருந்து அவன் வெகுநேரம் வாதமிட்டுப் பலரை வாதப் போரில் வென்றிருக்க வேண்டும் என்பது தெளிவாகியிருந்தது. அவனுக்குப் பக்கத்தில் கடம்ப மரம் ஒன்றில் சாய்ந்து கொண்டு வந்தியத்தேவன் கையில் உருவிய கத்தியுடன் நின்று கொண்டிருந்தான். இப்போது அவனுடைய அரையில் உடுத்திய ஒரு துணியும் கையில் ஒரு கத்தியும் மட்டும்தான் இருந்தன. அவனுடைய தோற்றத்திலிருந்து ஆழ்வார்க்கடியான் மீது பலாத்காரத்தைப் பிரயோகிக்கப் பார்த்தவர்களை அவன் கத்தியை வீசிப் பயமுறுத்தி அனுப்பியிருக்க வேண்டும் என்று தோன்றியது. அந்தச் சமயத்தில் கூட்டமாகவும் கோஷித்துக்கொண்டும் வந்த சைவர் கூட்டம் ஒன்றைப் பார்த்து அவன் கூறிய மொழிகளிலிருந்தும் அது வெளியாயிற்று.

''எச்சரிக்கை! நியாயமாக வாதப் போர் செய்வோர் செய்யலாம். அத்துமீறி இந்த வைஷ்ணவன் மீது யாராவது கையை வைத்தால் இந்த வாளுக்கு இரையாவார்கள்!'' என்று கூறியதுடன், கத்தியையும் இருமுறை சுழற்றினான். கோபத்துடன் வந்த சைவர்கள் சாந்தமடைந்தார்கள். அவர்களில் ஒருவர், ''ஓ! வைஷ்ணவனே! ஏதோ நீ இன்றைக்கு வாதத்தில் ஜயித்து விட்டதாக எண்ணிக் கர்வம் கொள்ளாதே! திருநாரையூருக்குப் போ! அங்கே உன்னை வாதில் வென்று புறமுதுகிட்டு ஓடச் செய்யக்கூடிய நம்பியாண்டார் நம்பி இருக்கிறார்!'' என்றார்.

''உங்கள் திருநாரையூர் நம்பியைத் திருநாராயணபுரத்து அனந்த பட்டரிடம் வந்து வாதமிடச் சொல்லுங்கள்! அங்கே நானும் ஒருவேளை இருந்தாலும் இருப்பேன்!'' என்று கூறினான் ஆழ்வார்க்கடியான்.

பலமுறை அவன் "நாவலோ நாவல்!" என்று கூவியும் யாரும் புதிதாக வாதமிட வரவில்லை. எனவே, நாவல் கிளையை எடுத்து விட்டுச் சங்கு சக்கரம் பொறித்த வெற்றிக் கொடியை ஆழ்வார்க்கடியான் நட்டான். பக்கத்தில் நின்று எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த வைஷ்ணவர்கள் சிலர் உடனே அவன் அருகில் வந்து அவனைத் தூக்கித் தோளில் வைத்துக்கொண்டு,

"நாராயணனே நம் தெய்வம்!
நாமெல்லாரும் துதிசெய்வம்!''

என்று பாடிக்கொண்டு கூத்தாடினார்கள். பிறகு அவர்கள், ''வீர வைஷ்ணவனே! எங்கள் இல்லத்துக்கு வந்து திரு அமுது செய்து அருள வேண்டும்!'' என்று பிரார்த்தித்தார்கள். "அங்ஙனமே ஆகுக!'' என்று ஆழ்வார்க்கடியான் கம்பீரமாகக் கூறிவிட்டு, வந்தியத்தேவனையும் அழைத்துக்கொண்டு சென்றான். இருவரும் புளியோதரை, திருக்கண்ணமுது, ததியோன்னம் ஆகியவற்றை வயிறு முட்டும்படி ஒரு கை பார்த்தார்கள். ஆழ்வார்க்கடியான்

தான் வாதப் போரில் சம்பாதித்த பொருள்களில், அங்க வஸ்திரமாக அணியக் கூடிய பீதாம்பரம் ஒன்றை மட்டும் வந்தியத்தேவனிடம் கொடுத்து விட்டு மற்றவற்றை ஸ்ரீ வைஷ்ண வர்களிடம் கொடுத்து அவற்றின் பெறுமானத்துக்குப் பொற் கழஞ்சுகள் பெற்றுக்கொண்டான். வைஷ்ணவ சமயத்தின் மேன்மையை நிலை நாட்டிக்கொண்டு வடக்கே ஹரித் வாரம் வரையில் போக வேண்டி யிருப்பதால் தனக்குப் பொற்காசு தேவை என்பதாக அவன் தெரிவித் துக்கொண்டான். ஸ்ரீ வைஷ்ணவர்களும் மனமுவந்து பொருள்களின் பெறு மானத்துக்கு அதிகமாகவே பொற் காசுகள் கொடுத்தார்கள். பெற்றுக் கொண்டு ஆழ்வார்க்கடியானும் வந் தியத்தேவனும் பிற்பகலில் கடம்பூரை நோக்கிப் பயணமானார்கள்.

கொள்ளிடத்தில் பெரு வெள்ளம் போய்க் கொண்டிருந்தபடி யால் அவர்கள் ஏறி வந்த குதிரை களைக் கொண்டு வர முடியவில்லை. அவர்கள் நதியைக் கடந்த ஓடத்தில் ஜனங்கள் அதிகமாக ஏறியிருந்த படியால் படகு வட கரையை அடை யும் சமயத்தில் கவிழ்ந்து விட்டது. மற்றவர்களைப் போல் வந்தியத் தேவனும் ஆற்று வெள்ளத்தில் விழுந்து நீந்திக் கரை சேர வேண்டியதாயிற்று. அச் சமயம், அத்தனை காலமாக எத் தனையோ நெருக்கடியான நிகழ்ச்சி களிலும் வந்தியத்தேவன் காப்பாற்றிக் கொண்டு வந்த அவனுடைய அரைக் கச்சச் சுருளும் அதில் அவன் பத்திரப் படுத்தி வைத்திருந்த இலச்சினைகளும் இளையபிராட்டி தந்த ஓலையுங்கூட நதி வெள்ளத்தில் போய் விட்டன. அவற்றுடன் இருந்த பொன் நாணயங் களும் போய் விட்டன. புதிய குதிரை கள் வாங்குவதற்குப் பணம் சேகரிப் பதற்காகவே மேற்கூறிய யுக்தியை அவர்கள் கையாண்டார்கள். யுக்தி பலித்துக் கொஞ்சம் பணமும் கிடைத் தது. ஆனால் அந்தக் கிராமாந்தரப் பகுதிகளில் குதிரை எங்கும் விலைக்குக் கிடைக்காது என்றும் தெரிந்தது. கடம்பூர் கிராமத்தில் வாரம் ஒருநாள் நடைபெறும் சந்தையில் ஒருவேளை குதிரைகள் விற்பனைக்கு வரலாம். இல்லாவிடில் திருப்பாப்புலியூர் சென்று தான் வாங்க வேண்டும்.

கடம்பூருக்குப் போவதா, வேண் டாமா என்பது பற்றி அந்த நண் பர்களுக்குள் விவாதம் நடந்தது. அதில் உள்ள சாதக பாதகங்களைப் பற்றி விவாதித்தார்கள். கடம்பூரில், ஆதித்த கரிகாலரின் வருகையைப் பற்றி ஏதேனும் செய்தி கிடைத்தாலும் கிடைக்கலாம். காஞ்சியிலிருந்து புறப் பட்டு விட்டாரா, எந்த வழியாக வருகிறார் என்று ஏதேனும் தகவல் தெரிந்தால் நல்லது அல்லவா? ஆனால் கடம்பூரில் தெரிந்தவர்களின் கண்ணில் படக் கூடாது. கந்தமாறனைச் சந்திக்க நேர்ந்து விட்டால் ஆபத்தாய்ப் போய் விடும். ஒருவேளை பழுவேட்டரையரின் பரிவாரங்கள் இதற்குள் வந்திருந்தால், அதுவும் தொல்லைதான்!–

"வைஷ்ணவனே! உனக்குத்தான் இரவில் சுவர் ஏறிக் குதிக்கத் தெரியுமே? சம்புவரையர் குதிரை லாயத்திலிருந்தே இரண்டு குதிரைகளைக் கொண்டு வந்து விடலாமே?" என்றான் வந்தியத்தேவன்.

"நான் சுவர் ஏறிக் குதிப்பேன். ஆனால் குதிரைகளுக்குச் சுவர் ஏறிக் குதிக்கத் தெரிய வேண்டுமே?" என்றான் வைஷ்ணவன்.

"பழுவூர்ப் பரிவாரங்கள் அங்கே வந்திருந்தால், இரண்டு குதிரைகளை அடித்துக் கொண்டு போகலாம். அவர் கள் முன்னொரு சமயம் கடம்பூரில் என்னுடைய குதிரையை விரட்டியடித் தார்கள் அல்லவா? அதற்குப் பழிக்குப் பழி வாங்க வேண்டும்!" என்றான் வாணர் குல வீரன்.

சில மாதங்களுக்கு முன்பு கடம்பூரில் அவர்கள் சந்தித்தது பற்றியும் அன்று இரவு நடந்த அபூர்வ சம்பவங்களைப் பற்றியும் வழி நெடுக பேசிக் கொண்டு

வந்தார்கள். இருவரும் சூரியன் அஸ்தமிக்கும் சமயத்துக்குக் கடம்பூரை அடைந்தார்கள்.

கடம்பூர் அவர்கள் எதிர்பார்த்



தது போல் அமர்க்களப்பட்டுக் கொண்டு தானிருந்தது. அரண்மனையும் கோட்டை வாசலும் கொடிகளாலும் தோரணங்களாலும் தொங்கல் மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டு விளங்கின. கோட்டை வாசலிலும் சரி, மதில் சுவரைச் சுற்றியும் சரி, முன்னை விடக் காவல் பலமாக இருந்தது. பட்டத்து இளவரசர் ஆதித்த கரிகாலர் வருகிறார் என்றால், கேட்க வேண்டுமா! அதே சமயத்தில், தனாதிகாரி பெரிய பழுவேட்டரையரும் ராணியுடன் வரப் போகிறார். இரண்டு பேருடைய பரிவாரங்களும் வருவார்கள். சில நாளைக்கு ஊர் தடபுடல் பட்டுக்



கொண்டுதானிருக்கும்.

இதையெல்லாம் பற்றிக் கடம்பூர் கடைத் தெருவில் ஜனங்கள் பேசிக் கொண்டிருந்ததை இரு நண்பர்களும் கேட்டார்கள். ஜனங்கள் பேச்சிலிருந்து இரு சாராரும் இன்னும் வந்து சேர வில்லை என்று தெரிந்தது. சம்புவரையர் மகன் கந்தமாறன் ஆதித்த கரிகாலரை அழைத்து வரக் காஞ்சிக்கே புறப்பட்டுப் போயிருக்கிறான் என்றும் தெரிந்தது. இந்தப் பரபரப்பான பேச்சுக்களுக்கிடையில் சிலர் 'கடல் கொண்டு விட்ட' இளவரசன் அருள்மொழிவர்மனைப் பற்றியும் மெல்லிய குரலில் பேசினார்கள். அவ்வளவு பெரிய துக்க சம்பவம் நடந்திருக்கும்போது இங்கே விருந்துகளுக்கும் களியாட்டங்களுக்கும் ஏற்பாடு நடந்து வருவது பலருக்குப் பிடிக்கவில்லை என்பது, ஜாடை மாடையாக அவர்கள் பேசிக் கொண்டதிலிருந்து தெரிந்தது.

ஆழ்வார்க்கடியானும் வந்தியத்தேவனும் இந்தப் பேச்சுக்களையெல்லாம் காது கொடுத்துக் கேளாதவர்கள் போல் கேட்டுக்கொண்டு ஊரைத் தாண்டிப் போனார்கள். ஊருக்குள் எங்கேயும் இரவு தங்க அவர்கள் விரும்பவில்லை. ஊருக்கு அப்பால் சமீபத்தில் எங்கேயாவது பாழடைந்த மண்டபம், அல்லது சத்திரம் சாவடி இல்லாமலா போகும்? அப்படியில்லாவிட்டால், இரவு திருநாராயணபுரத்துக்குப் போய்த் தங்கி விடுவது நல்லது. அங்கேயுள்ள பெரிய பெருமாள் கோயிலின் நூற்றுக்கால் மண்டபத்தில் நிம்மதியாகப் படுத்து உறங்கலாம். முதல் நாள் இரவு நிகழ்ச்சிகளுக்குப் பிறகு ஓர் இரவு நல்ல தூக்கம் அவர்களுக்கு அவசியமாயிருந்தது.

கடம்பூரைத் தாண்டிச் சாலையோடு சிறிது தூரம் சென்றதும் அடர்த்தியான மூங்கில் காடு ஒன்றும் அதற்குள் ஐயனார் கோவில் ஒன்றும் தெரிந்தன. "வைஷ்ணவரே! இனி மேல் என்னால் நடக்க முடியாது. இரவு இந்தக் கோவிலில் படுத்திருக்கலாம். யார் கண்ணிலும் படாமலிருப்பதற்கு இது நல்ல இடம்!'' என்றான் வந்தியத்தேவன்.

"அப்பனே! நீ சொல்வது தவறு! இம்மாதிரி இடங்களுக்கு நம்மைப் போல் இன்னும் யாராவது வந்து சேர மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

"அப்படி வருகிறவர்கள் குதிரைகளுடன் வந்தார்களானால் ரொம்ப நல்லது'' என்றான் வந்தியத்தேவன்.

"இந்த மூங்கில் காட்டுக்குள் எந்தக் குதிரையும் நுழைய முடியாது. மனிதர்கள் நுழைந்து செல்வதே கடினமான காரியம் ஆயிற்றே!''

"எங்கேயாவது ஒற்றையடிப் பாதை ஒன்று இல்லாமற் போகாது. கோயில் பூசாரி வரக்கூடிய வழியேனும் இருந்து தானே ஆக வேண்டும்?''

இருவரும் அடர்த்தியாக மண்டிக்கிடந்த மூங்கில் புதர்களைச் சுற்றிச் சுற்றி வந்து, கடைசியாகக் குறுகலான ஒற்றையடிப் பாதை ஒன்றைக் கண்டுபிடித்தார்கள். அதன் வழியாக உடம்பில் முட்கள் கிறாமல் நடந்து போவது மிகவும் பிரயாசையாக இருந்தது. இவ்விதம் சிறிது தூரம் சென்ற பிறகு கொஞ்சம் இடைவெளி காணப்பட்டது. அதில் சிறிய ஐயனார் கோவில் இருந்தது. கோவிலுக்கு எதிரே பலிபீடமும் அதையொட்டி மண்ணினால் செய்து காளவாயில் சுடப்பட்ட யானைகளும் குதிரைகளும் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. ஐயனாருக்கு வேண்டுதல் செய்து கொள்ளும் பக்தர்கள் இவ்விதம் மண்ணினால் செய்த குதிரைகளும் யானைகளும் கொண்டு வந்து வைப்பது வழக்கம்.

அவற்றைப் பார்த்ததும், வந்தியத்தேவன், "குதிரைகளைப் பற்றி இவ்வளவு கவலைப்படுகிறோமே? ஐயனாரைக் கேட்டு இரண்டு குதிரைகள் வாங்கிக் கொள்ளலாமே?'' என்றான்.

"மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கக் கூடாது என்ற பழமொழி தெரியாதா!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"வைஷ்ணவனே! எங்கள் ஐயனார் மிகவும் சக்தி வாய்ந்த தெய்வம். கேட்ட வரத்தை உடனே கொடுக்கக் கூடியவர். உங்கள் விஷ்ணுவைப் போல் பக்தர்களைத் தவிக்க விட்டு விட்டுப் பட்டப்பகலில் தூங்கிக்கொண்டிருப்பவர் அல்ல!" என்றான் வந்தியத்தேவன்.

"அப்படியானால் இந்த மண் குதிரைகளுக்கு உயிர் கொடுத்தாலும் கொடுப்பார் என்று சொல்லு! ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. பணம் மிச்சம்!"

"உண்மையான பக்தி இருந்தால் மண் குதிரைகளும் உயிர் பெறும்! பார்க்கப் போனால், நம்முடைய உடம்புகள் மட்டும் என்ன? பிரம்மதேவன் மண்ணினால் செய்து உயிர் கொடுத்ததுதானே?"

"நன்கு சொன்னாய், தம்பி! இந்த உடம்பு மண்ணினால் செய்த உடம்பு என்பதை மறந்து விடுகிறோம். அதை அடிக்கடி ஞாபகப்படுத்திக் கொள்வதற்காகவே திருமண்ணைக் குழைத்து நெற்றியிலும் உடம்பிலும் இட்டுக் கொள்ளும்படி வைஷ்ணவ ஆச்சாரிய புருஷர்கள் கட்டளையிட்டிருக்கிறார்கள்!"

வந்தியத்தேவன் "உஷ்!" என்று சொல்லி, ஆழ்வார்க்கடியானுடைய கையைப் பிடித்துக்கொண்டு, இன்னொரு கையினால் எதிரே சுட்டிக் காட்டினான். சூரியன் அஸ்தமித்துச் சிறிது நேரம் ஆகி விட்டது. நாலாபுறமும் இருண்ட மூங்கில் தோப்புகள் சூழ்ந்திருந்த அச் சிறிய இடைவெளியில் மிக மங்கலாகத் தெரிந்த வெளிச்சத்தில் ஐயனாருடைய வாகனங்கள் உயிர் பெற்று அசைவதாகத் தோன்றின. ஒரு யானையும் ஒரு குதிரையும் இடம் பெயர்ந்து நகர்ந்தன. கண்ணால் கண்ட இந்த அற்புதத்தை நம்புவதா, இல்லையா என்று தெரியாமல் வந்தியத்தேவன் சிறிது நேரம் திகைத்து நின்றான். ஆனாலும் ஐயனாருடைய அற்புத சக்தியை ஆழ்வார்க்கடியானுக்கு உடனே உணர்த்தி விடக் கூடிய சந்தர்ப்பத்தை இழக்கவும் அவனுக்கு மனம் வரவில்லை. "வைஷ்ணவரே! பார்த்தீரா...?" என்று அவன் சொல்வதற்குள், ஆழ்வார்க்கடியான் அவனுடைய கையை இறுக்கிப் பிடித்து, உதட்டில் விரல் வைத்து சமிக்ஞை காட்டி, பேச்சை நிறுத்தினான். பின்னர், இறுக்கிப் பிடித்த கையினால் வந்தியத்தேவனைப் பற்றியவாறு அவனை இழுத்துக்கொண்டு அந்த மூங்கில் புதருக்குப் பின்னால் சென்று நன்றாக மறைந்து நின்றான்.

குதிரையும் யானையும் அசைந்து சிறிது விலகிக் கொடுத்தன அல்லவா? அப்படி விலகிக் கொடுத்து இடைவெளி ஏற்பட்ட இடத்தில் ஒரு மனிதனுடைய தலை மட்டும் தெரிந்தது. அந்தத் தலை அப்பாலும் இப்பாலும் திரும்பி நாலுபுறமும் பார்த்தது. ஐயனாருடைய பலி பீடத்துக்குப் பக்கத்தில் இம்மாதிரி ஒரு தலை மட்டும் தோன்றி நாலாபுறமும் சுழன்று விழித்த காட்சி மிகப் பயங்கரமாயிருந்தது. எவ்வளவோ பயங்கரங்களைப் பார்த்திருந்த வந்தியத்தேவனுடைய மெய் சிலிர்த்தது. ஆனால் ஆழ்வார்க்கடியான் தன்னைப் பிடித்திருந்த கை சிறிதும் நடுக்க முறாமலும் தளராமலும் இருந்ததை அறிந்து வந்தியத்தேவன் நெஞ்சுறுதி கொண்டான்.

இவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்தத் தலை எழும்பி மேலே வந்தது. ஒரு மனிதனுடைய மார்பு வரையில் தெரிந்தது. பிறகு அம் மனிதன் முழுமையான உருவத்துடன் கிளம்பி மேலே வந்தான். அம்மனிதன் வெளி வந்த இடத்தில் ஒரு சிறிய பிளவு. கரிய இருள் சூழ்ந்த பாதாள பிலத்துவாரத்தைப் போல, பயங்கரமாக வாயைத் திறந்துகொண்டிருந்தது.

சற்று உற்றுப் பார்த்த பின்னர் அந்த மனிதன் யார் என்பதும் அவர்களுக்குத் தெரிந்து விட்டது. கடம்பூர் மாளிகை



யில் பணியாளனாக இருந்து கொண்டே ரவிதாஸனுடைய சதிக் கும்பலிலும் சேர்ந்திருந்த இடும்பன்காரிதான் அவன்.

இதை இருவரும் ஏக காலத்தில் அறிந்து கொண்டதும் ஒருவரையொருவர் பார்த்துத் தங்கள் வியப்பைச் சமிக்ஞையினாலேயே தெரிவித்துக்கொண்டார்கள்.

இடும்பன்காரி திறந்திருந்த துவாரத்தை அப்படியே விட்டு விட்டு, மறுபடியும் ஒருதடவை சுற்று முற்றும் பார்த்து விட்டு. ஐயனார் கோயிலை நோக்கி நடந்தான். கோயில் கதவைத்

திறந்துகொண்டு உள்ளே போனான். சிறிது நேரத்துக்கெல்லாம் கோயிலுக்குள்ளேயிருந்து முணுக்கு முணுக்கு என்று வெளிச்சம் தெரிந்தது. கோவிலுக்குள் விளக்கேற்றப்பட்டிருக்கிறது என்பதை அறிந்துகொண்டார்கள்.

''தம்பி! இதைப் பற்றி என்ன நினைக்கிறாய்!'' என்று முணுமுணுக்கும் குரலில் அடியான் கேட்டான்.

''ஐயனார் சக்தியுள்ள தெய்வம் என்று நினைக்கிறேன்; குதிரைக்கு உயிர் வந்ததைப் பார்க்கவில்லையா?'' என்றான் வந்தியத்தேவன்.

''அது சரி! இப்போது வந்தானே அவனைப் பற்றி என்ன நினைக்கிறாய்?''

''அவன் ஐயனார் கோயில் பூசாரி போலிருக்கிறது. நாமும் போய்ச் சுவாமி தரிசனம் செய்யலாமா?''

''கொஞ்சம் பொறு! இன்னும் யாராவது சுவாமி தரிசனத்துக்கு வருகிறார்களா என்று பார்த்துக் கொள்ளலாம்.''

''இன்னும் யாரேனும் வருவார்கள் என்று நினைக்கிறீர்களா?''

''பின் எதற்காக இவன் விளக்குப் போடுகிறான்?''

''பூசாரி கோவிலுக்கு விளக்குப் போடுவதில் ஆச்சரியம் என்ன?''

''தம்பி! அவன் யார் என்று தெரியவில்லையா?''

''நன்றாய்த் தெரிகிறது. கொள்ளிடத்தின் தென் கரையில் எனக்குக் குதிரை வாங்கிக்கொண்டு வந்து கொடுத்தானே? அந்த இடும்பன்காரி அவன்தான்! இப்போதும் அவனிடம் குதிரை கேட்கலாம் என்று பார்க்கிறேன்...''

''நல்ல யோசனை செய்தாய்!''

''உமக்குப் பிடிக்கவில்லையா?''

''இடும்பன்காரி உனக்குக் குதிரை வாங்கிக் கொடுத்தவன் மட்டும் அல்ல; ரவிதாஸன் கூட்டத்தைச் சேர்ந்தவன்.''

''அப்படியானால், இன்னொரு நல்ல யோசனை தோன்றுகிறது.''

''என்ன? என்ன?''

''இடும்பன்காரி ஐயனார் கைங்கரியத்தில் ஈடுபட்டிருக்கும்போது, அவன் எங்கிருந்து வந்து முளைத்தான் என்பதைப் பார்த்துத் தெரிந்துகொண்டு வரலாம் என்று எண்ணுகிறேன்.''

''அது எப்படி முடியும்?''

''அவன் வெளியே வந்த துவாரத்தினால் நான் உள்ளே போக முடியாதா?''

''முடியலாம். ஆனால் அதில் உள்ள அபாயங்கள்...''

''அபாயம் இல்லாத காரியம் எது?''

''அப்புறம் உன் இஷ்டம்.''

''வைஷ்ணவரே! நீங்கள் இங்கேயிருந்து என்ன நடக்கிறதென்று பார்த்துக்கொண்டிருங்கள்...''

''அதற்கென்ன கஷ்டம்? நான் இருந்து பார்த்துக்கொண்டிருக்கிறேன். சுரங்க வழி எங்கே போகும் என்று உனக்கு ஏதாவது தோன்றுகிறதா?''

''தோன்றுகிறது சுவாமி, தோன்றுகிறது! அது சரிதானா என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.''

''அதை நீ எதற்காகத் தெரிந்துகொள்ள வேணும்?''

''ஏதேனும் ஒரு சமயத்தில் உபயோகப் படலாம். யார் கண்டது?''

அச்சமயம் சற்றுத் தூரத்தில் வேறு பேச்சுக் குரல்கள் கேட்டன.

''தாமதிப்பதற்கு நேரமில்லை. வைஷ்ணவரே! நான் திரும்பி வருகிற வரையில் இங்கேயே இருப்பீர் அல்லவா? அல்லது சுக்ரீவன் வாலிக்குச் செய்தது போல் செய்து விடுவீரா?''

''உயிர் உள்ள வரையில் இங்கேயே இருக்கிறேன். ஆனால் நீ திரும்பி வருவது என்ன நிச்சயம்?''

''உயிர் இருந்தால் நானும் திரும்பி வருவேன்...''

இவ்விதம் சொல்லிக்கொண்டே வந்தியத்தேவன் நாலே பாய்ச்சலில் துவாரம் தெரிந்த இடத்தை நோக்கி ஓடினான். அதற்குள் இறங்கினான்.

மறுகணமே அந்த இருண்ட பள்ளத்தில் மறைந்தான். பிலத்துவாரம் அவனை அப்படியே விழுங்கி விட்டதாகத் தோன்றியது.

கோயிலுக்குள் சென்றிருந்த இடும்பன்காரி வெளியே வந்து சுற்று முற்றும் பார்த்தான். திறந்திருந்த துவாரம் அவன் கண்ணில் பட்டது. உடனே அவ்விடம் சென்று பலி பீடத்துக்குப் பக்கத்தில் நாட்டப்பட்டிருந்த சூலாயுதத்தைச் சுழற்றித் திருகினான்.

இடம் பெயர்ந்து அகன்றிருந்த யானையும் குதிரையும் மறுபடியும் நெருங்கி வந்தன. துவாரம் அடைபட்டு, இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது.

இந்தக் காரியத்தைச் செய்துவிட்டு இடும்பன்காரி மறுபடியும் கோவில் வாசற்படியண்டை வந்தான். அதே சமயத்தில் ரவிதாஸன், சோமன் சாம்பவன் முதலியவர்களும் வேறு திசையிலிருந்து வந்து சேர்ந்தார்கள்.

ஆழ்வார்க்கடியான் மூங்கில் காட்டுக்குப் பின்னால் இன்னும் நன்றாக மறைந்துகொண்டான்.

கோவில் வாசற்படிமேல் ரவிதாஸன் உட்கார்ந்துகொண்டான். மற்றவர்கள் அவன் எதிரே தரையில் அமர்ந்தார்கள்.

"தோழர்களே! நாம் கைக் கொண்ட விரதம் நிறைவேறும் சமயம் நெருங்கி விட்டது!" என்றான் ரவிதாஸன்.

''இவ்வாறுதான் ஆறு மாதமாக 'நெருங்கி விட்டது' 'நெருங்கி விட்டது' என்று சொல்லிக்கொண்டிருக்கிறோம்'' என்றான் ஒருவன்.

"ஆம்; அதில் தவறு ஒன்றுமில்லை. ஆறு மாதமாகவே அந்த நாள் நெருங்கி வந்து கொண்டிருந்தது. இப்போது விரல் விட்டு எண்ணக் கூடிய நாள் கணக்கில் நெருங்கி விட்டது. ஆதித்த கரிகாலன் காஞ்சியை விட்டுக் கிளம்பி விட்டான் என்ற செய்தி வந்திருக்கிறது. திருக்கோவலூர்க் கிழவன் அவனைத் தடுத்து நிறுத்தச் செய்த பிரயத்தனம் பலிக்கவில்லையாம்!"

"வழியில் வேறு யாராவது தடுத்து நிறுத்த மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?"

"ஆதித்த கரிகாலன் முன் வைத்த காலைப் பின் வைக்கிறவன் அல்ல. இனி யார் தடுத்தாலும் கேட்க மாட்டான்..."

"அவனுடைய தமக்கை சொல்லி அனுப்பிய செய்தி போய்ச் சேர்ந்தால்..."

"அது எப்படிப் போய்ச் சேர முடியும்? செய்தி கொண்டு போன வாலிபனைத்தான் காட்டில் கட்டிப் போட்டு விட்டு வந்தோமே?"

''அழகுதான்! அவனை இன்று காலையில் கொள்ளிடத்தின் வடகரையிலே பார்த்தேன். அவனோடு நமது இன்னொரு பகைவனும் சேர்ந்திருக்கிறான்...''

"அது யார்?"

"போலி வைஷ்ணவ வேஷதாரி!"

"அப்படியானால் நாம் ஜாக்கிரதையாயிருக்க வேண்டியதுதான். அவர்கள் ஆதித்த கரிகாலனைச் சந்திக்காமல் தடுக்கப் பார்க்க வேண்டும்."

"தும்பை விட்டு வாலைப் பிடிக்கிற கதையாக இருக்கிறது. கையில் அகப்பட்டவனை அங்கே ஒரு வழியாகத் தீர்த்திருக்கலாம். ராணி எதற்காக அவனை உயிரோடு விடச் சொன்னாள் என்று தெரியவில்லை..."

"தோழர்களே! எனக்கும் அது அப்போது புரியாமல்தான் இருந்தது. அப்புறம் தெரிந்துகொண்டேன். ராணி என்னையும் மிஞ்சி விட்டாள் என்பதை ஒத்துக் கொள்கிறேன். மிக முக்கியமான ஒரு நோக்கத்துடன் தான் வந்தியத்தேவனை உயிரோடு விட்டு விடச் சொன்னாள் ராணி. அதை நீங்கள் இப்போது தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை. வந்தியத்தேவனைப் பற்றிக் கவலை வேண்டாம். ஆனால் அந்த வைஷ்ணவனைக் கண்டால் சிறிதும் தயங்காமல் உயிரை வாங்கி விட்டு மறு காரியம் பாருங்கள்..." என்றான் ரவிதாஸன்.

(தொடரும்)

# சாராய வியாபாரிகளை

"ஆறு, சினிமா தியேட்டர், பள்ளிக்கூடம் பக்கமெல்லாம் பொம்பளைங்க நாங்க நடமாடவே முடியாது. ஒற்றையாளா வெளியில போனா ஒரே சிட்டியொலியும் கிண்டலுமா இருக்கும். பள்ளிப் பிள்ளைங்கன்னா சொல்லவே வேண்டாம். வீட்டுக்கு வந்ததும் கண்ணைக் கசக்கிட்டு உட்கார்ந்துடும். 'அவன்க தொல்லை தாங்கலை'ன்னு அழுகை. உள்ளூர் போலீஸ்ல சொல்லிப் பார்த்தோம். கண்டுக்கலை. டி.ஐ.ஜி.யைப் போய்ப் பார்த்தோம். போலீஸை சப்போர்ட்டுக்கு அனுப்பினார். பிறகுதான் ஒரு துணிச்சலே வந்தது. நாங்க முப்பது பொம்பளைக ஒன்ணாச் சேர்ந்து படையெடுத்தோம் பாருங்க. கள்ளச் சாராயக்காரன்க ஓடினாங்க பாருங்க... அவன்க வச்சிருந்த சாராயக் கேனையெல்லாம் உடைச்சு தூளாக்கி, சிலதை நாங்களே தூக்கிட்டும் வந்துட்டோம். இது மாதிரி நாலஞ்சு எடத்துல செஞ்சோம். ஊர்ல இப்போது துளி 'வாடை' கூட இல்ல!" – என்றார் பசுபதி கோயில் கிராமத்துப் பெண்மணி ராஜேஸ்வரி. அவர்தான் இந்த 'வேலையை' முன்னின்று நடத்தியிருக்கிறார்.

எப்படி வந்தது இப்படியொரு அபரிமிதத் துணிச்சல் இவர்களுக்கு? என்று கேட்டால் சட்டென்று பதில் வருகிறது 'பச்சை சேலை கொடுத்த மகிமை' என்று.

பச்சை சேலைக்கு அவ்வளவு மகத்துவமா? என்று கேட்டால் 'இல்லையில்லை. வயல்வெளிப் பள்ளிக்குத்தான் அவ்வளவு மகத்துவம்' என்கிறார்கள்!

'பச்சை சேலை, வயல்வெளிப்பள்ளி' என்று ரொம்பவும் குழம்பிப் போகுமுன் அவர்களே விவரிக்க முன்வந்தார்கள். 'வயல் வெளிப் பள்ளிகள்' என்பது தமிழ்நாடு முழுக்க கிராமப் பகுதி மக்களுக்கென அரசு விவசாயத் துறையினால் உருவாக்கப்பட்டது. என்றாலும் தஞ்சாவூர் கிராமங்களில் அது பிரசித்தம்.

காலை ஏழு மணிக்கு முன்னரே, 'திடுதிப்' பென சிலர் சில வயல்வெளிகளில இறங்குவார்கள். அப்பகுதி விவசாயிகளுக்கு அவ்வயலில் உள்ள பூச்சிகளைப் பிடித்துப் பாடம் நடத்துவார்கள். "இது நன்மை தரும் பூச்சி. பயிரை அழிக்கும் புழுக்களை இதுதான் 'ஸ்வாகா' செய்கிறது. நாம் பூச்சிக்கொல்லி மருந்துகளைப் பயன்படுத்துவதால் நம் நட்புப் பூச்சியும் அழிந்து பயிரும் பாழாகிறது. மண்ணில் உள்ள நல்ல நுண்கிருமிகளும் அழிகின்றன. அதற்கு மாற்று இது.



• வயல்வெளியில் நடக்கும் கிளாஸ்...

அதனால் பூச்சிக்கொல்லி உபயோகிக்காதீர்கள்!" என்று பெரிய 'லெக்சரே' நடக்குமாம்.

சரி. இந்த 'லெக்சர்' எல்லாம் விவசாயிக்குக் கடுப்பைத்தானே ஏற்படுத்தும்! எனவே நாலைந்து நாட்கள் – சில வாரங்கள் கூட



• விவசாய அலுவலர்கள் ராஜசேகரன், முரளி, சந்தான கோபாலகிருஷ்ணன்

அங்கேயே இருந்து நட்புடன் பழகி செய்முறை விளக்கம் காண்பித்து நம்பிக்கையூட்டிய பின்னரே நகர்வர். அப் பகுதியில் இவர்களின் கருத்திலும், செயலிலும் ஆழ்ந்து போனவர்களுக்கு அடுத்த முறை வாத்தியார் 'போஸ்ட்'. அதற்கடுத்த முறை அவரும் (ஆணானாலும், பெண்ணாக

# விரட்டியடித்த பெண்கள்!

இருந்தாலும்) களத்தில் இறங்கி வாத்தியார் வேலை பார்க்க வேண்டும். இவர்கள் ஒரு குழுவுக்கு முப்பது பேர். ஐந்து அணியாகப் பிரித்து (அணிக்கு ஆறு பேர்) ஐந்து வயல்களில் இறங்க வேண்டும். சுருங்கச் சொன்னால், 'விவசாயிகளிடமிருந்தே விஷயம் எடுத்து, அவர்கள் மூலமாகவே அடுத்த விவசாயிக்கு, 'இரசாயன பூச்சிக் கொல்லியின் ஆபத்தை 'சுட்டிக் காட்டி விழிப்புணர்வு ஊட்டுவதே' இந்த வயல்வெளிப் பள்ளிகளின் நோக்கம்.

பொதுவாக வயல்வெளிப் பள்ளிகளில் ஆண் - பெண் இருபாலருமே இருப்பர். ஆனால் பசுபதி கோயிலிலும் பக்கத்தில் மாத்தூர் கிராமத்திலும் முழுக்க முழுக்கப் பெண்களே அங்கம் வகிப்பது (60 பேர்) தனி ஸ்பெஷாலிட்டி. அதிலும் அரசு சாரா இயக்கத்தில் இயங்கும் பள்ளி என்பதிலும் இதற்கொரு தனித்தன்மை.

நான்கு வருடங்களுக்கு முன் வீட்டை விட்டே வெளியே வந்திராத பெண்களுக்கு தைரியத்தைக் கொடுத்தது - ஒன்றுபட வைத்தது இந்த வயல்வெளிப் பள்ளிகள்தான்!

"ஆம்பிள்ளைகளே வயல்ல விளைச்சல் குறைந்து நம்பிக்கை இழந்து விவசாயத்திலிருந்து நழுவப் பார்த்த காலம். நாங்க கெடைச்ச வாய்ப்பை கெட்டியாப் பிடித்துக் கொண்டோம். இயற்கை விவசாய நிபுணர்கள் சொல்றபடி 'க்ளாஸ்' (வயலில்) நடத்தியதோடு நாங்களே 'பூச்சிக்கொல்லி' இல்லாம பயிர் விளைவிச்ச மத்தவங்களுக்கு நம்பிக்கையூட்டினோம். வெட்டியா ஆத்தோரம் கொட்டும் தென்னை நார்க்கழிவுகளை உரமாக்கி நிலத்துக்குப் போட்டோம். அதுக்கே பயங்கர எதிர்ப்பு. அந்த எதிர்ப்பையெல்லாம் உடைச்சதும்தான் எல்லோரும் எங்களை நம்ப ஆரம்பிச்சாங்க. எங்



• சுற்றுச் சூழல் விழிப்புணர்வு முகாம்...

களுக்கும் சகல விஷயங்களிலும் நம்பிக்கை வந்தது. அப்படி நடந்த ஒன்றுதான் கள்ளச் சாராய வியாபாரிகளை விரட்டியடித்தது!'' என்றார் இந்த வயல்வெளிப் பள்ளியில் துவக்கத்திலிருந்து இருக்கும் திருமதி கலைவாணி.

கள்ளச் சாராயம் பிடிபட்டு, டி.ஐ.ஜி.யிடம் போன போது உள்ளூர் போலீஸ்காரர்களே கள்ளச் சாராயக்காரர் களிடம் இவர்களைப் பற்றிப் 'போட்டுக்' கொடுத்து விட்டனராம். இருந்தாலும் அதை யும் டி.ஐ.ஜி.யிடம் சொல்லி சம்பந்தப்பட் டவர் சிலரை களையெடுக்கவும் செய்திருக் கிறார்கள் இத் துணிச்சல் மிக்க பெண்கள்.

பெண்களுக்குப் பச்சை சேலைதான் யூனிஃபார்ம். இவ் வயல்வெளிப் பள்ளிப் பெண்கள் சமூக நோக்கில் உயிர்ப்போடு புறப்பட்டிருக்கிறார்கள். மாதர் சங்கம் மூலம் ஏழைப் பெண்களுக்கு தையல் மிஷின் பெற்றுத் தருதல், பயிற்றுவித்தல், சமூகப் பிரச்னைகளுக்குத் தீர்வு தேடுதலில் ஈடுபடு தல், சமத்துவம், ஜாதிக் கொடுமை எதிர்ப்பு, பெண்களுக்கான உரிமைகளை முன்னெடுத் தல் என பல கோணங்களில் இவர்களின் பார்வை விரிகிறது.

இவர்களின் இந்த அசாத்திய நம்பிக்கை யும், செயல்பாடும் தங்களுக்கே ஆச்சரிய மூட்டுவதாக நம்மிடம் பேசினர் இவர் களைப் பயிற்றுவித்த விவசாயத் துறை அதி காரிகளான ராஜசேகரன், முரளி, சந்தான கோபாலகிருஷ்ணன் ஆகியோர். ''இவர் களின் அயராத உழைப்பால், கடந்த ஐந்து வருடங்களாக இந்தப் பகுதியில் பூச்சிக் கொல்லி விஷத்தை யாருமே உபயோகப் படுத்துவதில்லை!'' என்றனர் மூவரும்.

எல்லாம் முடிந்து வரும்போது எதிரே தள்ளாடித் தள்ளாடி ஒரு 'குடி'மகன். எக்கச் சக்க சாராய வாடை. ''இந்தப் பொம் பளைங்க சொல்றதை நம்பாதிங்க. இப்பப் பாருங்க. நா பட்டையத்தான் அடிச்சிருக் கேன். வித்தவங்களைத் துரத்தச் சொல்லுங்க பார்ப்போம்!''

– சவால் விட்டபடி 'மனிதர்'! அதற்கும் சளைக்காது பதில் கொடுக்கின்றனர் நம் பச்சை சேலைப் பெண்கள்.

''கள்ளச் சாராய வியாபாரிகளை ஊரை விட்டே துரத்தி விட்டுட்டோம். ஆனாலும் இவங்க எங்கேதான் போய்க் குடிச்சுட்டு வர்றாங்களோனு புரிய மாட்டேங்குது சார்! அதனால ஒருநாள் மறைஞ்சிருந்து இவங்க பின்னாலேயே போய் விற்கறவன்களைப் பிடிச்சு விரட்டியடிக்கத்தான் போறோம்! பாருங்க!''

கட்டுரை, படங்கள் : **கேயெஸ்வி**

---

# வரப் போகும் பிரும்மாண்டம்!



'தாஜ் மஹால்' நாயகி ரியாசென்னுக்கு அடுத்தபடம் அகப்பட்டு விட்டது. அருகில் பிரசாந்த்துடன் அவர் தோன்றுகிற படம் 'குட்லக்'. இசையமைப்பாளர் மனோஜ்(கியான்) இயக்குநராகியிருக்கும் இப்படம், ஒரு பிரும்மாண்டக் கப்பலிலும் (மூழ்காதது) மலேஷிய மாளிகைகளிலும் படமாகிறது. தமிழ் சினிமா இதுவரை காணாத பிரும்மாண்டத்தை இதில் காணலாம் என்கிறார் தயாரிப்பாளர். கப்பலில் படப்பிடிப்பு நடத்த வாடகை மட்டும் 25 லட்சம் கொடுத்தார்களாம்.



பசேலென்ற பச்சைப் பசுங் கடல். காற்றில் சுழித்துச் சிலிர்த்து அலைபாயும் நெல்வயல்கள் கண்ணுக்கெட்டிய வரை. அடிவானத்தின் வெளிர் நீலத்தில் நீலக் கோடுகளாய்த் தென்படும் தொலைதூர மலைகள். விடை தெரியாமல் வகுப்பு நடுவே எழுந்து நிற்கும் மாணவர்கள்போல், பரந்த வயல்வெளிக்கு நடுநடுவே தென்னந்தோப்புகள்.

பச்சைக் கடலின் நடுவே வலப்புறம் செம்மண் பாதை. பளீரென்று முகத்தில் அறைந்த மஞ்சள் போர்டில் கறுப்பு எழுத்துக்கள் திருப்பழனபுரம் என்று உரக்கக் கூவின. தென்னைகளுக்கு இடையே செம்மண் பட்டையும் சுண்ணாம்புப் பட்

# புதிதாய் நாளை விடியும்

ஸுஜாதா விஜயராகவன்



டையும் மங்கிய கோயில் மதில். கோயிலின் முன் சிறு குளம். மரகதப்பச்சைத் தண்ணீரின் ஜொலிப்புடன் படிகள் பாதி உடைந்து கிடந்தன. கோயிலுக்கு எதிரே ஒற்றைத் தெரு. மச்சுவீடு, குச்சு வீடு, பாழ் மனை, பாதி விழுந்த வீடு என்றெல்லாம் வரிசையாக இருபுறமும். ஆள் அரவமே இல்லாத வெறிச்சோடிய தெரு.

ஏ.ஸி. காரிலிருந்து இறங்கிய வரதனுக்கு உடனே வியர்த்தது. கோயில் வாசலை அணுகினான். கரேலென்ற கச்சல் தேகம். தார் பாய்ச்சிய வேட்டி, தலையில் முண்டாசுடன் கிழவன் ஒருவன் தரையில் களைக் கொத்தியால் முட் செடிகளை அகற்றிக் கொண்டிருந்தான்.

அவனைத் தாண்டிச் சென்ற வரதன் சட்டென்று நின்றான். ஏதோ வித்தியாசம். திரும்பினான். கிழவன முதுகில் குறுக்கே ஓடிய பூணூல்!

"கோவில் எப்போ திறக்கும்?"

திரும்பிய கிழவனின் நெற்றியிலும், கைகளிலும், மார்பிலுமாகப் பன்னிரு திருமண் அடையாளங்கள்.

"மணி என்ன ஆச்சு?"

"நாலரை."

"வாங்கோ. தொறக்க வேண்டியதுதான். ஸ்ஸ்.... அப்பனே நாராயணா..." என்று குத்திட்டு அமர்ந்திருந்தவர் மெல்ல எழுந்தார்.

"ஏட்டீ லெட்சுமி.... வாசத் தெளிக்கலே?" எங்கோ பார்த்துக் குரலெடுத்துக் கூவினார்.

சிறகடித்து வரும் பட்சிகள் போல் இரண்டு சிறுமியர் சிரிப்பும், சண்டையுமாகச் செடி மறைவிலிருந்து வெளிப்பட்டனர். பாவாடை சட்டை, ஒற்றைப் பின்னல், செருப்பில்லாத பூம்பாதங்கள். பத்து வயது இருக்கலாம். ஒருத்தி மூக்கில் வளையம். இன்னொருத்தி கழுத்தில் தோல் உரிந்த முத்து மாலை.

"நான்தாஞ்சாமி இன்னிக்கி."

"இல்ல சாமி நான்தான்."

"சண்டை வேண்டாம். ரெண்டு பேருமே பண்ணுங்கோ."

ஒருத்தி சிட்டாய்ப் பறந்து எங்கிருந்தோ துடைப்பத்தை எடுத்து வந்து 'பரட் பரட்'டென்று பெருக்கத் தொடங்கினாள். இன்னொருத்தி குடத்தை எடுத்துப் போய்க் குளத்திலிருந்து நீர் மொண்டு வந்து 'பளிச் பளிச்'சென்று தெளிக்கத் தொடங்கினாள். பெருக்கும் சிறுமி வேண்டுமென்றே

தெளிப்பவள் மேல் புழுதிபட வீசிப் பெருக்க, தெளிப்பவள் கை கையாய் நீரெடுத்து அவள் மேல் வீச...

அந்தக் குதூகலமாகன ரகளையைப் புன்னகையோடு ரசித்தவாறு கோயில் கதவைத் திறந்தார். சின்னப் பூட்டு. பூணூலில் சின்னச் சாவி. கோயிலும் சின்னக் கோயில் தான். பிராகாரம் படுசுத்தம்.

''பிரதட்சிணமா வந்துடுங்கோளேன். நான் முன்னே போய் நடை திறக்கறேன்'' என்றார்.

மதில் ஓரமாகப் பவழமல்லிமரம், நந்தியாவட்டை, துளசிச் செடிகள், மல்லிகைப் புதர்கள், பந்தலில் ஜாதிப் பூ, சங்கு புஷ்பம். பாத்திகள் ஒழுங்காக வெட்டப்பட்டு, ஈர மண்ணில் செடிகள் நல்ல செழிப்பாக நின்றன.

அர்த்த மண்டபத்தின் தூண்களில் சிற்ப வேலைப்பாடுகள் அதிகம் இல்லை. கருங்கல் தளமும் நல்ல சுத்தம். இருண்ட கர்ப்பக் கிரகத்தில் தூண்டா விளக்கின் ஒற்றைச் சுடரில் சயனத் திருக்கோலம் மங்கலாய்ப் புலப்பட்டது.

"அர்ச்சனை பண்ணலாமா?"

"பண்ணுங்கோ."

"பேர், நட்சத்திரம்?"

''ம்ம்....பெருமாள் பேருக்கே பண்ணிடுங்கோ."

தட்டிலிருந்த துளசிதளங்களால் அர்ச்சித்து விட்டுக் கற்பூரத் தட்டை இட வலமாக மெதுவே கொண்டு சென்றார்.

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●



''இந்த வாட்டி நிறைய பேர்கிட்ட தீபாவளி இனாம் கேட்டீங்களா?''

''உங்களுக்கு எப்படி தெரிஞ்சுது?''

''சொறிஞ்சு சொறிஞ்சு முன்பக்கம் தலைபூரா ரணமா இருக்கே!''

– அம்பை தேவா

"பள்ளி கொண்ட பெருமாள். பழன வண்ணப் பெருமாள்னு திருநாமம். தாயார் செங்கமல வல்லி நாச்சியார். க்ஷேத்ரவர்ண நாதர்னு சமஸ்கிருதப் பெயர். தாயார் நாமம் பங்கஜவல்லி. க்ஷேத்ரம்னாலும் பழனம்னாலும் வயலைக் குறிப்பிடும். நம்ம தேகத்தையும் க்ஷேத்ரம்னு சொல்றதுண்டு....''

வரதன் மெள்ளச் சொன்னான், "இந்தப் பெருமாளுக்கும் பச்சைமா வயல் போல் மேனின்னு சொல்லலாமா? இந்த வயல்களோட அழகைப் பாத்தா நமக்கே அதும் மேல படுத்துக்கத் தோணறது. பெருமாள் சயனிச்சுண்டது ஆச்சர்யமில்லே."

அர்ச்சகர் சிரித்தார். "நீங்க சொல்றது புது வியாக்யானமா இருக்கு. ஆனா அதுவும் பொருத்தமாத்தான் இருக்கு... இங்கே தாயாருக்கு தனி சன்னிதி கிடையாது. பூதேவி அம்சம். பெருமாள் நாரதமுனிக்கு ப்ரத்யக்ஷம். திருக்குளம் பங்கஜ தீர்த்தம். செங்கமலப் பொய்கைன்னு சொல்லுவா...''

வரதனுக்குப் பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குள் திரும்ப நுழைந்து விட்ட பிரமிப்பு. வாசஸ்தலமான வட அமெரிக்காவின் நவநாகரிகம் பொய்யாய்ப் புதுக்கதையாய், கனவாய் மெல்ல மறைந்தது. காலம் கடந்து நிற்கும் இந்த நிஜத்தைக் கையில் சிக்கெனப் பிடித்து வைத்துக் கொள்ளும் தவிப்பு.

''உத்சவர் எங்கேன்னு பாக்கறேளா? ஸ்ரீவைகுண்டத்தில ஸேஃபா இருக்கார். ரெண்டு தரம் கள்ளன் வந்துட்டான். வெள்ளிக் கவசம், நகை போனாப் போகட்டும். விக்ரகத்தையே தூக்கிண்டு போகப் பார்த்தான். நான் கூச்சல் போட்டதிலே குடியானவத் தெருவிலேருந்து அத்தனை பேரும் ஓடி வந்து பெருமாளைக் காப்பாத்தினா. திருடன் தப்பிச்சு ஓடிட்டான். போற போக்கிலே எனக்கு ரெண்டு போடு."

நெற்றியிலும், இடது புஜத்திலும் நீள ஓடின தழும்புகள் சாட்சியாய்.

தட்டில் வரதன் போட்ட நூறு ரூபாய் நோட்டு அவரை நிமிர்ந்து பார்க்க வைத்தது.

"ஸ்வாமி வெளிதேசமோ?"

"அமெரிக்கா."

"புரிஞ்சுண்டேன். ஸ்வாமிக்குப் பூர்வீகம் எந்தப் பக்கம்?''

"மதுரை."

"இந்தக் கோவிலைத் தேடிண்டு எப்படி வந்தேள்?"

''என் ஃப்ரெண்டு சீனிவாச கோபாலன்...''

"இருங்கோ... நம்ம கோபுவைச் சொல்றேளா? இந்தூர்ப் பிள்ளை... பாஸ்டன்லே இருக்கானே..."

"அவனேதான்."

"அடாடாடா! அதை முந்தியே சொல்லியிருக்கப்படாதோ?" அர்ச்சகர் முகமெல்லாம் பூரிப்பு.

"எப்பிடி இருக்கான் கோபு? வரானா சமீபத்தில? ஏதாவது சேதி சொல்லி அனுப்பிச்சானா?"

வரதனுக்கு நிம்மதி. வந்த விஷயத்தைத் தொடங்க வழி கிடைத்து விட்டது.

"அங்கே பாஸ்டன் பக்கத்திலே பெருமாள் கோவில் ஒண்ணு கட்டிண்டிருக்கோம். நீங்க அங்கே வந்து கோவில் அர்ச்சனைப் பொறுப்பை ஏத்துக்கணும். உங்களுக்குப் பாஸ்போர்ட் வாங்கித் தந்து மத்த ஏற்பாடுகளைப் பண்ணத்தான் கோபு என்னை அனுப்பிச்சிருக்கான்."

விளக்கில் எண்ணெய் ஊற்றிக் கொண்டிருந்த கை நின்றது. அர்ச்சகர் திரும்பிப் பார்த்தார். சிரித்தார்.

"கோபுவுக்கு என் பேர்ல ரொம்ப அபிமானம். அதுதான் அவனுக்கு இப்படி ஒரு யோசனை கிளம்பியிருக்கு."

அவர் ஒப்புக் கொள்கிறாரா மறுக்கிறாரா என்று வரதனுக்குப் புரியவில்லை.

"நீங்க ரெண்டு நாள் பொறுத்துக் கூட உங்க தீர்மானத்தைச் சொல்லலாம். நான் மறுபடி வரேன்" என்றான்.

"சாமீ, பூஞ்சோலை வந்திருக்கேன்."

பெயருக்குச் சற்றும் பொருத்தமில்லாத முகமும், உடல்வாகும் கொண்ட பெண்மணி ஒருத்தி பூக்குடலையை நீட்டினாள்.

"பாத்தியெல்லாம் ஒழுங்கு பண்ணிட்டேன் பூஞ்சோலை. நாளைக்காவது ஒம் புருஷனை வந்து செடிக்கெல்லாம் வேப்பம்புண்ணாக்கு வெச்சுடச் சொல்லு" என்றவாறு குடலையை வாங்கினார். அவளுக்குத் தீர்த்தம், துளசி, சடாரி தந்த பிறகு வாடிய பூக்களைக் களைந்து ஜாதிப் பூச் சரங்களையும், நூலில் கோத்த பவழமல்லிச் சரத்தையும், திருத்துழாய் மாலையையும் மூலவருக்குச் சாத்தத் தொடங்கினார்.

"நம்ம மனுஷா அமெரிக்காவுக்குப் போனாலும் கோவிலையும் பெருமாளையும் மறந்துடலேன்னு கேக்க சந்தோஷமா இருக்கு," என்றார்.

"அங்கே இருக்கற பக்திசிரத்தையை நீங்க இங்க பாக்க முடியுமாங்கறது சந்தேகம்," வரதனுக்கு உற்சாகம் பிறந்தது.

"அவாளவாளும் பொழப்பு தேடிப் போன எடத்திலே புதுப்புதுக் கோவில் கட்டிக்கறா. இங்க பாருங்கோ, அக்ரஹாரத்துலே அத்தனை வீடும் காலி. பாதி வீடு சிதிலமாயி விழுலாச்சு. உத்சவம்னு கடுதாசி போட்டா அம்பது, நூறு பணம் வருதே தவிர மனுஷா வரக் காணுமே" அர்ச்சகர் அங்கலாய்த்தார்.

"இங்கே நீங்க யாரையாவது ஏற்பாடு பண்ணி வெச்சுட்டு அங்கே வரணும்னு கோபு ரொம்பக் கேட்டுண்டான்," வரதன் மீண்டும் விஷயத்துக்குத் தாவினான்.

"இந்த அத்வானத்துக்கு யார் வருவா? என் பொண்டாட்டி பிள்ளைகளே இங்கே தனியா இருக்க முடியலேன்னு வண்ணாரப் பேட்டைக்குப் போய்ட்டா. முன்னூறு ரூபா சம்பளத்துக்கு எவன் வருவான் இங்கே?"

"முன்னூறா?" அதிர்ந்தான் வரதன். "என்ன ஸ்வாமி இது? ஒருத்தருக்கு ஒருவேளைச் சாப்பாட்டுக்குக் கூடக் காணாதே!"

"இங்கே நெலவரம் அப்பிடித்தான். என் பெரிய பிள்ளை பாங்க் வேலைக்குப் போய்ட்டான். சின்னவன் பஸ் கண்டக்டர். பெரிய பொண் வேற ஜாதியில கல்யாணம் பண்ணிண்டு போயிடுத்து. எதுக்குச் சொல்றேன்னா, என் குடும்பத்திலேயே யாரும்

## அதிலே இவரும் இருக்கிறார்!



**விக்கிரமனின் 'வானத்தைப் போல'வில் விஜயகாந்த் நடிக்கிறார் என்பது தெரிந்த விஷயம்.**

**தெரியாத விஷயங்கள் இரண்டு.**

**விஜயகாந்த் இரட்டை வேடங்களில் நடிக்கிறார் என்பது ஒன்று.**

**படத்தில் பிரபுதேவாவும் 'இருக்கிறார்' என்பது மற்றொன்று.**



## கடிதம் எழுதும் ஜோடி!

**பூவேலிக்குப் பிறகு நல்ல டைரக்டர் என்று பேர் வாங்கியிருக்கும் செல்வாவின் அடுத்தப்படம் 'ஆசையில் ஓர் கடிதம்'.**

**சாந்தினி என்கிற புதுமுகத்தை சமீபத்திய வெற்றிக் குதிரையான பிரசாந்தின் கைகளில் கட்டி, இப்படி முட்டுக்காடு ஏரியாவில் உலா விட்டிருக்கும் இயக்குநரிடம் கதை என்ன என்று கேட்டால், ''வேறென்ன? காதல்'' என்கிறார்.**

**'காதலே, காதலே, இன்னும் என்ன செய்யப் போகிறாய்' என்று வைரமுத்து அன்று கேட்டது இதையெல்லாம் எண்ணித்தான் போலும்.**

இந்தக் கோவில் வேலையை ஏத்துக்கத் தயாராயில்லே.''

''இந்த மாதிரி பிரச்னைக்கெல்லாம் இடமே இருக்காது. அங்கே உங்களுக்கு சம்பளம் மாசம் அம்பது அறுபதாயிரத்துக்கு மேலே வரும். அதில ஒரு பகுதியை உங்க குடும்பத்துக்கு ரூபாயாக் குடுக்கலாம். உங்களுக்கு வீடு, கார் எல்லாம் குடுப்பா. மேல் வரும்படி கல்யாணம், சீமந்தம், புண்யாவாசனம்னு அதுவும் வரும்.''

திடீரென்று கொஞ்சம் கூச்சம் தோன்றியது வரதனுக்கு. தான் டம்பம் அடித்துக் கொள்வதாக ஒலித்தது. அசிங்கமாக, அவமானமாக உணர்ந்தான்.

விளக்கில் எண்ணெய் ஊற்றித் திரிகளை நிமிண்டியவாறு அவனை மறுபடி திரும்பிப் பார்த்துப் புன்னகை செய்தார்.

''கேள்விப்பட்டிருக்கேன். அதுதான் குபேரபுரியாச்சே.''

''பூலோக ஸ்வர்கம் ஸ்வாமி. உங்களுக்கே அங்கே வந்தாப் பிடிச்சுப் போயிடும். திரும்பி வர மனசு வராது.''

''அதுவும் தெரியும். உங்களையெல்லாம் பாக்கறேனே!'' புன்னகை மாறவில்லை. அவர் சொன்னதைக் குத்தலாக எடுத்துக் கொள்வதா என்று வரதன் யோசிக்குமுன் தீர்மானமான குரலில் சொன்னார்,

''இது என்னைப் பொறுத்தவரை பூலோக வைகுண்டம். இதுக்கு மேலே எனக்கு வேற எதுவும் தேவையில்லை.''

வரதன் முகத்தில் என்ன பார்த்தாரோ தெரியவில்லை. தொடர்ந்தார்.

''நான் சொல்றது என் பொண்டாட்டி குழந்தைகளுக்கே புரியலே. நீங்க பாவம் பூலோக ஸ்வ'ர்கத்தைப் பாத்துட்டு வந்திருக்கேள். ஒங்களுக்கு எப்படிப் புரியும்?''

கர்ப்பகிரகத்தின் நிலையில் சாய்ந்து கொண்டு புன்னகையோடு தொடர்ந்தார்.

''இந்தக் கிராமம் ஒரே ஒரு தம்பதியோட சந்ததிகள் குடியிருந்த எடம். ஆக கிராமம் மொத்தமே தாயாதி பங்காளிகள். அதில் இந்தக் கோவில் கைங்கரியத்துக்கு வந்த எங்க மூதாதைகள்தான் வெளி மனுஷா. எத்தனை தலைமுறையாச்சோ தெரியாது. என் கொள்ளுப்பாட்டனார் உபயவேதாந்தி. அதாவது சமஸ்கிருதம், தமிழ் ரெண்டுலயும் பண்டிதர். வேதாத்யயனம், பிரபந்தபாடம் எல்லாம் கரைகண்டவர். அடியேனுக்கு அந்த அளவு படிப்பு கிடையாது. இருந்தாலும் இந்தப் பழனவண்ணப் பெருமாளுக்கே கைங்கரியம் செய்ய ஆட்பட்டவன். அந்தத் திருமேனியைப் பார்க்காம ஒருநாள் கூட என்னால இருக்க முடியாது.''

''கோபு ரொம்பக் கேட்டுண்டான். நீங்க வந்து ஒரு வருஷமாவது இருக்கணும்...''

வரதன் வேண்டுகோள் தீனமாக ஒலித்திருக்க வேண்டும்.

"வாங்கோ இப்பிடி மண்டபத்தில உக்காந்து பேசுவோம்'' என்று அழைத்துச் சென்றார்.

"கிக்கிக்கி'' என்று கிளி ஒன்று பறந்து வந்து மதில் மேல் அமர்ந்து பவழ மூக்கால் கொத்தியது.

"ஒரு பிள்ளையாண்டான் இருக்கான். பிரம்மச்சாரி. அம்மா ஒருத்திதான் உறவு சொல்லிக்க. அவனை வேணாக் கேட்டுப் பாக்கலாம். ப்ளஸ் டூ படிச்சவன். இங்கிலீஷ் கூடப் பேசுவான். யாத்ரிகாள்கிட்ட ஹிந்தி பேசவும் தெரியும். அத்யயனம் ரொம்ப நன்னாப் பண்ணினவன். ஆனா அவனை நம்பி மூணு கோவில் பெருமான் இருக்கா. மோட்டார் சைக்கிள்ல போய் மூணு வேளையும் கைங்கர்யம் பண்ணிண்டு வரான். ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ரர்னு கேள்விப்பட்டிருக்கேளோ? நிகமாந்த மஹாதேசிகன் ஸ்வாமிக்கு அப்படியொரு பட்டம். அவருக்குக் கைவராத வித்தையே கெடையாது. பல பாஷைகள்ல பண்டிதர். மகாகவி. அதோட தன் கையால கிணறு வெட்டியிருக்கார், விக்ரகம் வார்த்திருக்கார். அவரோட திருநாமம்தான் இந்தப் பிள்ளைக்கு. இவனும் என்னெல்லாமோ தெரிஞ்சு வெச்சிண்டிருக்கான். கம்ப்யூட்டர் படிப்பு கூடப் படிக்கறானாம். உழைப்பாளி. உபகாரி. வாரம் ரெண்டு தரம் இந்தப் பக்கம் வருவான். கோவிலுக்கு வேண்டிய சாமான்களை வாங்கிண்டு வருவான். ஏண்டா சோணை, தேசி இன்னிக்கா வரேன்னு சொன்னான்?'' என்று அங்கு கிணற்றிலிருந்து நீர் இறைத்துச் செடிகளுக்கு ஊற்றிக் கொண்டிருந்த விடலை ஒருவனைக் கேட்டார்.

"வர்ற நேரஞ்சாமி. எனக்கு நோட்டுபுத்தகம் கூடக் கொண்டு வருவாரு'' என்றது அந்தப் பிள்ளை.

"சித்த தாமசிக்கலாமோன்னோ? சாத்துமுறை முடிஞ்சு பிரசாதம் வாங்கிண்டு போகணும்'' என்று வரதனைப் பார்த்து விண்ணப்பித்தார்.

"பிரசாதமா?'' சற்றே தயங்கினான் வரதன்.

"ஆமாம். பெருமான் கோவில் சேவிக்க வந்தவா வயிறு காயத் திரும்பிப் போகப்படுமோ? அதிலயும் பழனவண்ணப் பெருமான் இல்லியோ? எத்தனையோ ஏக்கர் நெலம் கோவிலுக்கு. ராஜாக்கள் மான்யம் விட்டிருக்கா. கல்வெட்டுல இருக்கு. அந்த நிலத்தையெல்லாம் கபளீகரம் பண்ணியாச்சு. பெருமாளுக்கு மணி அரிசி வரதில்லை. நாலஞ்சு வருஷத்துக்கு முன்னால ஒரு சமயம் நித்தியப்படி ஒரு வேளை தளிகைக்குக்கூட வழியில்லாத போச்சு. ஆளில்லா அக்ரஹாரத்தில யார் வீட்டுக் கதவைத் தட்ட முடியும்? அன்னிக்கு என்னவோ தோணித்து. இங்கே உள்ள குடியானவ ஆட்கள் நாலு பேரைக் கூப்பிட்டுச் சொன்னேன். உங்களுக்குப் படியளக்கற பழனவண்ணப் பெருமாளுக்குப் படியளந்தா உங்க நிலம், நீச்சு, வீடு, வாசல், குடும்பம்,



"நம்ம பையனை 'எருமை மாடு மாதிரி ஊர் சுத்திட்டு வரியே'ன்னு திட்டினீங்களா?''

"ஆமா... எதுக்குக் கேக்கறே?''

"மதியம் என்ன சமையல் பண்ணட்டும்னு கேட்டதுக்கு, பருத்திக்கொட்டை பொறியல், புண்ணாக்கு பச்சடி, தவிட்டுத் துவையல் போதுங்கறான்!''

– புளியறை கணேசன்

கொழந்தை குட்டியெல்லாம் நன்னா இருக்குண்டாப்பான்னு. அடுத்த நாளே அரைப்படியும் கால்படியுமா நெல்லைக் கொண்டு கோவில் களஞ்சியத்திலே சேர்ப்பிச்சுட்டா அத்தனை பேரும். செக்காட்டறவன் விளக்குக்கு எண்ணெய் குடுக்கறான். சுண்டலுக்குக் கொண்டைக் கடலை, பயறு, காராமணி எல்லாம் ஒண்ணு கொறவில்லாம வருது. வாங்கோ, திருமடைப் பள்ளியை வந்து பாருங்கோ.''

துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டவர் பின்னே காலடி வைத்தான் வரதன்.

"பார்த்து வாங்கோ. உள்ளே கொஞ்சம் இருட்டு. பல்பு ஃப்யூஸாயிடுத்து. அது கூட தேசிதான் வாங்கிண்டு வரான்.''



## அதிரடி நாயகியின் அடுத்த படம்!

**'மா துஜே சலாம்— வந்தே மாதரம்'— இதைக் கேட்டதும் ரகுமான் குரல் உடனே ஞாபகத்துக்கு வரும். இனி, விஜயசாந்தியின் உதைகளும். விஷயமென்னவென்றால் அதிரடி சாந்தியின் அடுத்த படத்துக்கு இதுவே டைட்டில். ஐந்து மொழிகளில் தயாராகும் இப்படத்தில் விஜயசாந்தி தவிர, ஐம்பது போலீஸ் நாய்களும் சாய்குமார், சரண்ராஜ் உள்ளிட்ட பலரும் நடிக்கிறார்கள். அல்லது அடிக்கிறார்கள். இளைஞர்கள், சமூக விரோதிகளால் கெடுக்கப்படுவதை போலீஸ் அதிகாரியான விஜயசாந்தி தடுத்து முறியடிக்கிற கதை என்கிறார் இயக்குநர் ஓம்பிரகாஷ். சாந்திமா! துஜே சலாம்!**

உள்ளே சுத்தமாகத்தான் இருந்தது. மூலையில் விறகடுப்பு. இன்னொருபுறம் சில தகர டின்களில் சாமான்கள். கொடியில் வேட்டியும் துண்டும்.

"என்ன பாக்கறேள்? அடியேனுக்கும் இதுதான் வாசஸ்தலம். பெருமாளுக்கு நான் தொணை. எனக்கு அவர்," என்று சிரித்தார்.

"கோபு வீட்டை நீங்க தங்கக் குடுத்திருக்கான் இல்லியோ?" வரதன் கேட்டான்.

"ஆமாம். நாலு வருஷம் முந்தி கூரை விழுந்துடுத்து. அதை ரிப்பேர் பண்ணப் பணமும் அனுப்பிச்சான் கோபு. அதே சமயம் கர்ப்பகிரக கூரை ஒழுகத் தொடங்கிடுத்து. பணத்தை அதுக்குச் செலவழிச்சுட்டேன். அந்த மழையிலே பாருங்கோ மதில் கூட ஒரு பக்கம் விழுந்திருக்கு. முள் செடியை வெச்சு அடைச்சு வெச்சிருக்கேன்."

இருப்புச் சட்டியில் இருந்த சுண்டலை ஒரு பித்தளை அடுக்கில் மாற்றி ஒரு துணியால் மூடித் தோளில் வைத்துக் கொண்டு சன்னிதியை நோக்கி நடந்தார். எங்கிருந்தோ ஒரு பொடியன் ஓடி வந்து மணியின் கயிறை இழுத்து இழுத்து அடிக்கத் தொடங்கினான். இதற்கென்றே காத்திருந்தாற்போல் சிரிப்பும், கூச்சலுமாக சிறுவர், சிறுமியர் பட்டாளம் முண்டியடித்துக் கொண்டு ஓடி வந்தது.

"சுண்டல் இத்தனை பேருக்குக் காணுமா ஸ்வாமி?" என்று சந்தேகப்பட்டான் வரதன்.

''சின்னக் கைகள்தானே?'' என்று சிரித்தார். "பாருங்கோ இவா என்ன பண்ணறான்னு," மர்மமாய்ப் புன்னகை செய்தார்.

"என்ன பண்ணப் போறா?"

''சாத்துமுறைக்கு கோஷ்டி தயார் பண்ணியிருக்கேன்."

"இவாளையா?" வரதன் அதிர்ந்தான்.

"ஆமாம். குடியானவத் தெரு, இடைச்சேரி பசங்கள்தான். திருக்குலத்தார்னு உடையவர் ராமானுஜரே இவாளை அங்கீகரிச்சு அரவணைச்சுக்கலியோ? நாளைக்கு இந்தக் கோவிலையும் பெருமாளையும் இவாதானே பாத்துக்கப் போறா. இன்னொண்ணும் யோசனை பண்ணினேன். தேசிகிட்ட உங்க விஷயத்தை நான் எடுத்துச் சொல்றேன். ஆனா அவன் ஒத்துப்பானாங்கறது சந்தேகம்தான். பார்ப்போம்."

கர்ப்பகிரகத்துக்குள் சென்று திரையை இழுத்து மூடிக் கொண்டார். உள்ளே நைவேத்தியம் ஆகும் மணிச் சப்தம் தொடங்கியது.

எதிரும் புதிருமாக வரிசையாக அமர்ந்திருந்த சிறுவர் உரத்த குரலில் முறை வைத்து ஓதத் தொடங்கினர்.

"பல்லாண்டு பல்லாண்டு
பல்லாயிரத்தாண்டு
பல கோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா
உன்
சேவடி செவ்வி திருக்காப்பு"

மோட்டார் சைக்கிள் ஒன்று படபடத்துக் கொண்டே வந்து கோயில் வாசலில் நின்றது. ○

# ADMISSION NOTICE

## THE ACADEMY FOR SKILL AND KNOWLEDGE

**Offers the following Diploma and Short Term Courses**

- DIPLOMA IN CUSTOMS AND CENTRAL EXCISE (Rules & Procedures)
- ADVANCED DIPLOMA IN SALES & MARKETING (For Managers)
- BUSINESS MANAGEMENT
- RETAIL MANAGEMENT
- FRONT OFFICE MANAGEMENT
- HUMAN RESOURCE DEVELOPMENT
- EXPORT & IMPORT MANAGEMENT
- EDUCATIONAL MANAGEMENT



The above courses are offered both by Correspondence and also by Part-Time, Daily and Week-End classes conveninet to employed persons.

For details such as eligibility, course contents and application kindly contact us at the below given address. Send M.O for Rs. 20/ - only for Prospectus and Application forms.

Enquiries from Business Partners / Franchisee with suitable infrastructure are welcome

# ACADEMY FOR SKILL AND KNOWLEDGE


**CONTACT ADDRESS**

No.30, Anjugam Nagar Ist Street,
Jafferkhanpet,
Chennai- 600 083.
Ph: 371 1459, Fax:489 2743


saraas- com/ask/99

# புத்தி

புதபகவான் அறிவுத் தெய்வம். கையில் புத்தகம் வைத்திருப்பார். புதனைப் பூஜித்தால் கவிபாட வரும் என்று சொல்கிறார்கள். முக்கியமாக மற்ற கிரகங்களின் நடமாட்டம் சரியில்லாத சமயத்தில் கூட, புதபகவான் அதைச் சமன் செய்யக்கூடியவர். இது அவருடைய தனிச் சிறப்பு.

மாதுலகாரகன், வித்யாகாரகன் என்றெல்லாம் புகழ்வாய்ந்த புதபகவான் எப்போதும் நன்மை செய்பவர். 'பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது' என்று கேள்விப்பட்டிருக்கிறோமே!



• திருவெண்காடு



திருவெண்காட்டில் தனிக் கோவிலில் வீற்றிருக்கும் புதபகவானுக்கு புத்திமதாம் சிரேஷ்டன், புத்தி தாதா, புத்தி விவர்த்தனன், மனோஹரன், விஷ்ணுரூபி, கணக்கன், பண்புதன் என்றெல்லாம் பெயர்கள் உண்டு. புத்திக்கும் புதனுக்கும் நிரம்பத் தொடர்பு இருப்பதாகக் காண்கிறது.

திருவெண்காட்டில் உறையும் அம்பிகையின் திருநாமம் பிரும்மவித்யாம்பிகை. பெரியநாயகி என்றும் மாதங்கி என்றும் கூட அம்பிகையை அழைக்கிறார்கள். பிரும்மனுக்கே வித்தைகளைக் கற்பித்த அம்பிகைக்கு அருகே புத்தி அருளும் புதன் வாழ விரும்புவது இயல்புதானே!



• புத பகவான்

அழகான கோவில். விஸ்தாரமான பிராகாரம். திருக்குளமும் படித்துறையும் குளுகுளுவென்ற காற்றும் அங்கேயே இருந்து விடலாம் போல் இருக்கிறது.

காசிக்கும், சிதம்பரத்துக்கும் சமமான தலம் ஒன்று உண்டென்றால் அது திருவெண்காடுதான். சீர்காழியிலிருந்து தரங்கம்பாடி செல்லும் சாலையில் சுமார் 10 - 12 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது திருவெண்காடு. இது சக்தி பீடமும் கூட என்று அறிகிறோம். வெண்காட்டில் உறையும் சிவபெருமான் காலஸம்ஹார மூர்த்தியாகவும் இருக்கிறார். மணிகர்ணிகா ஆறு சமீபத்தில் பாய்கிறது.

**ஆனந்தி**

திருவெண்காட்டுக்கு ஆதிசிதம்பரம் என்ற பெயர் உண்டு. சிதம்பரத்தில் நடம் புரிவதற்கு முன்னால் இங்கே நடராஜர் தாண்டவமாடியதாகவும் ஆனந்தத் தாண்டவம் முதலிய ஒன்பது தாண்டவங்களை ஆடினார் என்றும் கூறுகிறது தலபுராணம். சிதம்பர ரகசியம் போல் திருவெண்காட்டு ரகசியமும் உண்டு!

உடுக்கையும் தீயும் ஏந்திய ஆடல் வல்லான். திருவெண்காட்டில் ஆடும் போது ஸகுணத்துடன் நடனம் செய்தாராம். ஆதலால் இம்மையிலும் நமக்கு அருள்வார். மறுமையிலும் அருள்வார்.

முதலில் விலங்கு தரித்த விநாயகரைத்

தரிசித்து விட்டுக் கோவிலை வலம்வரலாம்.

இங்கே எல்லாம் மூன்று மூன்றாக இருப்பதைப் பார்க்கிறோம். மூன்று தீர்த்தங்கள். அக்கினி தீர்த்தம், சூரிய தீர்த்தம், சந்திர தீர்த்தம். சிவபெருமான் நடனமாடிய போது அவர் கண்களில் பெருகிய ஆனந்தக் கண்ணீர் இந்த மூன்று தீர்த்தங்கள் ஆயிற்றாம்!

ஆலமரம், கொன்றை மரம், வில்வமரம்

• சூரிய தீர்த்தம்



# தரும் புதன்

மூன்றும் இங்கே தல விருக்ஷங்கள். நந்தவனமும் தீர்த்தங்களுமாக மிக விஸ்தாரமான கோவில். மூன்று குளங்களும் கோவிலுக்குள்ளேயே இருக்கின்றன. நடந்து நடந்து அசந்து விடும்.

ஆலமரத்தின் அருகே, "ருத்ர பாதம்" இருக்கிறது– கயாவில் விஷ்ணு பாதம் இருப்பது போல. இங்கே பித்ரு காரியங்கள் செய்வது மிகவும் அதிகமான பலன் தருமாம்.

**சு**வேதாரண்யேச்வரர் என்ற திருவெண்காடரை அடுத்து பார்க்கிறோம்.

*"கண் காட்டும் நுதலானும் கனல்*
*காட்டும் கையானும்*
*பெண் காட்டும் உருவானும்*
*பிறைகாட்டும் சடையானும்*
*பண்காட்டும் இசையானும்*
*பயிர்காட்டும் – புனல் நின்ற*



• அருள்மிகு அகோரமூர்த்தி



• பிரும்மவித்யாம்பிகை
சுக்ரவார அம்மன்

*வெண்காட்டில் உறைவானும்*
*மெய்காட்டி அருள்வானே"*

என்ற ஞானசம்பந்தரின் பாடல் நினைவுக்கு வருகிறது. இந்தப் பாடலை மடக்கி மடக்கிப் பாடி அதன் அழகையும் பொருளையும் எனக்கு உணர்த்திய டி.கே.சி. அவர்களும் நினைவில் நிற்கிறார். இசைக்குள்ளே எப்படி ராகம் ஊடுருவி நிற்கிறதோ அதுபோல எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி நிற்கிறார் சிவபெருமான் என்று அவர் சொன்னது ஞாபகம் வந்து, அந்தத் தத்துவம் புரிபடுகிறது.

**பு**தபகவானின் சந்நிதியில் ஏகக் கூட்டம். பெண்கள், இளம்பெண்கள்

அதிகமாகக் காணப்படுகிறார்கள். புதபக வானை வழிபட்டுப் பிரார்த்தித்தால் புத்ர தோஷம் நீங்கி குழந்தை பிறக்கும் என்று நம்பிக்கை. வேண்டாம் வேண்டாம் என்று விளம்பரங்கள் செய்கிற இந்தக் காலத்திலும் குழந்தை வேண்டும் வேண்டும் என்று வேண்டுவோர்! பெயர் சொல்ல ஒரு பிள்ளை வேண்டும் என விழைவோர். பூவுலகில் குழந்தை, பேரக் குழந்தை மூலம் அமர வாழ்வு வாழ ஆசைப்படும் மனிதர்கள். புதபகவானை நன்றாகத் தரிசனம் செய்ய முடியவில்லை. அத்தனை நெருக்கடி! நூற்றுக்கணக்கான விளக்குகளை ஏற்றி வைத்திருக்கிறார்கள். எட்டி எட்டிப் பார்த்து தரிசனம் செய்கிறோம். திவ்யாலங்கார மூர்த்தியாய் கம்பீரமாக, ''ஸௌம்யம் ஸௌம்யகுணோ பேதம்'' என்று புகழப்படும் இனியவராகப் புதன் காட்சியளிக்கிறார்.

புத பகவானுக்கு சிம்மம் வாகனம் என்றும், குதிரை வாகனம் என்றும் சொல்கிறார்கள். பச்சை நிறம் புதனுக்குப் பிடித்த நிறம். அதனால் பச்சைப் பயறு இவருக்கு உகந்த தானியம். இவருக்குப் பிடித்த மணி மரகதம். பூமியில் பயிர்களுக்குப் பச்சை நிறத்தை அவர் வழங்குகிறாராம். பாசிப் பருப்பை வறுத்துப் பருப்புப் பொடி போல செய்து சாதத்தில் கலந்து நைவேத்யம் செய்தால் மகிழ்வார். நல்லனவெல்லாம் தருவார். புதபகவான் வியாபாரத்திலும் வெற்றி தருவார். தர்க்க சாஸ்திரத்தில் வல்லவர்.

'சந்திரதாரா ஸுதம்'' என்று தீக்ஷிதர் பாடியிருக்கிறார் புதனை. சந்திரனுக்கும் தாரைக்கும் பிறந்தவன்.

புதன் கோவிலுக்குப் பின்னால் பிரும்ம சமாதி என்ற இடம் இருக்கிறது. அருகில் வில்வமரம் இருக்கிறது. நந்தவனமும் இருக்கிறது. எல்லாவற்றையும் பார்த்து விட்டுத் திரும்பி வந்தும் கூட புதபகவானை சற்று நின்று தரிசனம் செய்ய முடியவில்லை. சரி! பிரும்மவித்யாம்பிகையைத் தரிசிக்கலாம் என்று போகிறோம். அங்கே கூட்டமில்லை. செல்வத்துக்கு அடையாளமாகத் தாமரையும், அறிவுக்கு அடையாளமாக ருத்ராக்ஷ மாலையும் தாங்கி, ''பயம் வேண்டாம்! வேண்டிய வரம் தருகிறேன்'' என்று சொல்லாமல் சொல்லி விளங்க வைக்கிறாள் அன்னை பராசக்தி. பிரும்மனுக்கே வித்தை அளித்தவள். இன்று நமக்கு யோகம்தான். வித்யா நாயகியைத் தரிசிக்கிறோமே. பிராகாரத்தில் ஒரு சந்நிதியில் பிள்ளை யிடுக்கியம்மன் என்ற அம்மனின் முந்நிலையில் சில பெண்கள் வழிபடுகிறார்கள். இந்த அம்மனின் இடுப்பில் ஒரு குழந்தை! தல வரலாறு இதுதான்:

பாலறாவாயனான ஆளுடைய பிள்ளை திருவெண்காட்டு எல்லையில் வந்து நின்ற போது ஊரில் கிடக்கும் கற்களும் மணலும் கூட சிவலிங்க வடிவமாகவே அவர் கண்களுக்குத் தெரிந்ததாம். அதனால் தெருவில் காலெடுத்து வைக்கவே கூசினாராம். ''எப்படி ஈசனைத் தரிசிப்பது? அம்மா!'' என்று தனக்கு ஞானப் பாலூட்டிய அன்னையை நினைத்துக் கொண்டு கேட்டாராம். குழந்தையின் உள்ளத்தில் உள்ள பக்தியைக் கண்டு உருகிப் போய் விட்டாள் அம்பிகை. உடனே போய்க் குழந்தையை இடுப்பில் தூக்கிக் கொண்டு வந்தாள். சம்பந்தர் அன்னையை அழைத்த இடத்தில் உள்ள குளத்துக்குக் கூப்பிட்டான்குளம் என்று பெயர். அருகிலுள்ள விநாயகருக்கு ஞானசம்பந்த விநாயகர் என்று பெயர்.

ஞானசம்பந்தர் மட்டுமின்றி மற்ற மூவரும் கூட பாடியுள்ள அற்புதமான தலம் இது.

சிவன் கோவிலில் உள்ள அகோர மூர்த்தியைத் தரிசனம் செய்து விடுங்கள். எட்டுக் கரங்களுடன் தலைமுடி சிலிர்த்து மேலெழுந்து ஜ்வாலை மாதிரி ஜொலிக்கக் கையில் சூலம் ஏந்தி, உடுக்கை, வாள், கேடயம் முதலான ஆயுதங்களுடன், "எங்கே அந்தக் காலன்? என் பக்தன் உயிரைப் பறிக்க வந்தவன்?'' என்று கோபத்துடன் வீரத்தின் சின்னமாய் நிற்கிறார். திருவெண்காடு ஒரு காலத்தில் உலோக சிற்ப வடிவங்கள் செய்வதில் புகழ்பெற்றிருந்தது. அகோர



மூர்த்தியைத் தரிசிக்கும் போது அது உண்மையாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொள்கிறோம். வீரமும் பலமும் ரௌத்ரமும் சிலையில் காண முடிகிறதே!

மார்க்கண்டேயன் கதை போன்ற கதை இங்கும் உண்டு. சுவேதகேது, உத்தாலகரின் மகன். தனக்கு எட்டாவது வயதில் வாழ்வு முடியும் என்று தெரிந்து கொண்ட குழந்தை இங்கே சிவபெருமானைச் சரணடைந்தான். யமபாசம் கட்டி இழுத்த போது இறைவனை அழைத்தான். பூஜை தடைப்பட்டதைப் பொறுக்காத சிவபெருமான் அகோர மூர்த்தியாக உருக்கொண்டு, யமனை அடித்து வீழ்த்தினார். அதனால் திருவெண்காடு திருக்கடவூருக்குச் சமமாகவும் இருக்கிறது.

திருவெண்காடு, மகான்களுடன் தொடர்புடையது. தலங்களுக்கு அடியார்களாலும் சிறப்பு ஏற்படுகிறதல்லவா?

அச்சுதக் களப்பாளருக்குப் பிள்ளை இல்லை. அவருடைய குலகுரு அருள்நந்தி சிவாச்சாரியார். அவர், "உனக்குப் புத்திர பாக்கியம் கிடையாது" என்று சொல்லி விட்டார்.

தேவாரத்தில் கயிறு சார்த்தி ஈசன் முன்னிலையில் எடுத்துப் பார்த்தபோது,

"பிள்ளையினோடு உள்ள நினைவயினவே வரம் பெறுவர் ஐயுற வேண்டா" என்ற வரியுள்ள சம்பந்தர் தேவாரம் கையில் கிடைத்தது. அது திருவெண்காட்டுப் பதிகம். உடனே பத்தினியுடன் திருவெண்காட்டுக்கு வந்து நாற்பத்தைந்து நாட்கள் கடுமையான விரதம் இருந்து வெண்காடரையும், பெரிய நாயகியம்மையையும் தொழுது வந்தார்.

அவர்களுக்கு ஒரு அதிசயக் குழந்தை பிறந்தது; இளம்வயதிலேயே ஜீவன் முக்தியடைந்து சிவானந்தத்தில் திளைத்திருந்த **மெய்கண்டார்**! மெய்கண்டார் எழுதியது சிவஞானபோதம் என்ற நூல். இது சைவ சித்தாந்த நூல்களிலேயே சிறந்தது எனக் கருதப்படுகிறது.

கபிலதேவநாயனார் சிவபெருமானைப் பற்றி இரட்டை மணி மாலை பாடியிருக்கிறார். சிதம்பர முனிவரும் கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகளும், இன்னும் பலரும் தாங்கள் எழுதிய நூல்களில் திருவெண்காட்டைக் குறிப்பிட்டுப் பாடியிருக்கிறார்கள்.



"நானும் ரெண்டு பிள்ளையைப் பெத்து மூணு மருமகளோடு வாழ்ந்து இருக்கிறேன்."

"அதெப்படி மூணு மருமகள்?"

"ஒருத்தி ரெண்டு பேருக்குச் சமம்!"

— பர்வதவர்த்தினி

---

சேக்கிழார் சுவாமிகளோ,

செப்பரும் பதிக மாலை கண்காட்டு
நுதல்முன் சேர்த்தி
முப்புரஞ்செற்றார் பாதம் சேருமுக்
குளமும் பாடி

ஒப்பரு ஞான முடையவரான சம்பந்தர் எப்படி மகிழ்ந்தார் என்று பாடியிருக்கிறார்.

பல கல்வெட்டுக்கள் அதிர்ஷ்டவசமாகப் படி எடுக்கப்பட்டுள்ளதால் திருவெண்காடருக்கும், பிரமவித்யாம்பிகைக்கும் நிவந்தங்கள் ஏற்படுத்திய பல அரசர்கள் அரசிகளின் பெயர்கள் தெரிய வருகின்றன. எந்தெந்த தெய்வங்களின் உருவங்கள் புதிதாகச் செய்து வைக்கப்பட்டன என்ற விவரங்கள் தெரிய வருகிறது. இராஜராஜசோழரும், இராஜேந்திர சோழரும் கோவிலுக்கு நிவந்தங்கள் அளித்துள்ளதோடு செம்பியன் மாதேவி முதல் பல அரசியர்களும் நிவந்தங்கள் அளித்துள்ளனர்.

வெண்காட்டீசர் சந்நிதியில் உள்ள விக்கிரமசோழன் மண்டபத்தை நிர்மாணித்து அதில் வந்திருந்து வழிபாடு செய்தார் விக்ரம சோழர்.

புத் என்ற வடமொழி வேர்ச் சொல்லுக்கு அறிதல் என்று பொருள். புதன் வழிபட்டு கிரஹ பதவி அடைந்த ஊரான திருவெண்காட்டில் அறிவிற் சிறந்தவர்கள், எத்தனையோ கவிஞர்கள், புலவர்கள் வந்து தொழுது பாடல் பாடி அகோர மூர்த்தியையும் திருவெண்காடரையும் தொழுதிருப்பார்கள். புதனுடைய அருள் இருந்தால் புத்தி வளரக் கேட்பானேன்.

படங்கள் : **வெங்கடேஷ்**

# பல்முனை மருத்துவத் திட்டம் பலனளிக்குமா?



• அரசியல் மறந்தவர்!

● அ. கருமார், காட்டுக்கானூர்.

*? பாலகிருஷ்ணன் பிள்ளைக்கு விதிக்கப்பட்ட ஊழல் தண்டனை அரசியல்வாதிகளுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்துமா?*

! ஏற்படுத்த வேண்டும். ஆட்சியில், பதவியில் இருப்பவர்கள் லஞ்ச – ஊழலில் ஈடுபட்டால் தண்டனை கிடைக்கும் என்ற நம்பிக்கையை மக்களிடம் ஏற்படுத்தியுள்ளது இந்தத் தீர்ப்பு. ஆனால் ஒன்று, தண்டனையோ – விடுதலையோ இதுபோன்ற வழக்குகளில் பத்து வருஷம் இழுத்தடிக்காமல் துரிதமாகக் கிடைக்க வேண்டும். அப்போதுதான் நற்பலன் விளையும். அதற்கு என்ன ஏற்பாடு...?



• தென்னாப்பிரிக்க வீரர்!

● வாசுதேவன், ஸ்ரீராம்பூர்.

*? பிரதமரின் டர்பன் விஜயம்?*

! பாகிஸ்தானுக்கு எதிரான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டதால் டிப்ளோமாடிக் வெற்றி.

● செ. சல்மான், பாம்பன்.

*? இந்தியாவில் பிறந்த முஷரஃப் இன்று பாகிஸ்தானை ஆட்டிப் படைப்பது நமக்குப் பெருமையில்லையா?*

! பலே! அடுத்தாற்போல் பெரும் பெரும் ஊழல் அரசியல்வாதிகளெல்லாம் இந்தியாவிலும் தமிழகத்திலும் இருக்கிறார்கள் என்பதற்காகப் பெருமைப்பட வேண்டும் என்பீர்கள் போலிருக்கே!

● பி.எம். வள்ளி, அரசரடி.

*? இன்றைய சமுதாய ஒழுக்கக் கேடுகளுக்கு டெலிவிஷன் நிகழ்ச்சிகள்தான் காரணம் என சபாநாயகர் பி.டி.ஆர். பழனிவேல்ராஜன் கூறியிருப்பது பற்றி...?*



• 'பாரதப் புதல்வர்!'

! அரசியல்வாதிகளின் தவறான முன்னுதாரணங்கள், மோசமான வழிகாட்டல்கள், தரங்கெட்ட – கொள்கையற்ற நடத்தை – இவையெல்லாமும் காரணம்தான். இவையெல்லாம் டெலிவிஷனிலும் வருகின்றன. எனவே டபுள் காரணம் அரசியல்தான்!

● ப. இராம் முருகன், சிவகங்கை.

*? தமிழக சான்றோர் பேரவை விழாவில், 'இனி LTTE என்பவைதான் ஆங்கிலத்தில் ஆயுத எழுத்துக்கள்' என கபிலன் என்பவர் பேசியுள்ளாரே?*

! அந்தக் கூட்டத்தில் பலருடைய பேச்சுக்களைப் படிக்கும் போது அது சான்றோர் அடங்கிய பேரவைதானா என்ற கேள்வி பிறக்கிறது. பேச்சுக்கள் எல்லை மீறி இருக்கும் போது நடவடிக்கை ஏதும் எடுக்காத தமிழக அரசு கண்டனத்துக்குரியதாகிறது.

● முகவை முத்துசாமி, தொண்டி.

*? வானொலி, தொலைக்காட்சி, பத்திரிகை – எதில் வரும் செய்திகள் மக்களைச் சிந்திக்க வைக்கின்றன?*

! சந்தேகமில்லாமல் பத்திரிகைகள்தான். இதனால் பத்திரிகைகளுக்குப் பொறுப்புணர்வு மிகுதியாக இருக்க வேண்டும்.



• அனுபவ அடிப்படை!

● கே.வி. ராமன், சென்னை – 73.

*? தமிழ்நாட்டில் முன்னாள் தலைமைச் செயலராகப் பணியாற்றிய எம்.எம். ராஜேந்திரனுக்கு ஒரிசா ஆளுனர் பதவி வழங்கப்பட்டுள்ளதே?*

! மிகக் கடுமையான பணி அவர் முன்னே காத்திருக்கிறது. முன் அனுபவத்தின் அடிப்படையில் அதை நிறைவேற்றக்கூடியவரைத்தான் தேர்ந்தெடுத்து அனுப்பியுள்ளார்கள். ஆனால் அவரது முன் அனுபவம் இன்றைய பிரச்னையுடன் ஒப்பிட, யானைக்கு முன் கொசு!

● ஆ. அழகேஷ், பூதப்பாண்டி.

? தனிமையில் திரைப்படம் பார்ப்பது என்பது, பொழுதுபோக்கு என்கிற அம்சத்தைத் தாண்டி அமைதியாகச் சிறிது நேரம் சிந்திக்க உதவுமா?

! நமது சினிமாவுக்கும் சிந்தனைக்கும் என்ன சம்பந்தம்? எல்லாம் மேஜிக் விவகாரம்தான்!

● பி. ஜெயபிரகாஷ், சர்க்கார்பதி. ❑


• வழக்குரைஞர் வாழிக்!

? 'சர்க்காரியா கமிஷனில் கட்டணம் வாங்காமல் கருணாநிதிக்காக ஆஜரானேன். நன்றி மறந்து இந்த வழக்கில் (பிளசன்ட் ஸ்டே) கருணாநிதி என்னைச் சேர்த்துள்ளார்' என்று வழக்கறிஞர் பாளை சண்முகம் குற்றம்சாட்டியுள்ளாரே?

! நண்பர் என்பதற்காக சட்டரீதியான நடவடிக்கையிலிருந்து விலக்குக் கேட்பது என்ன நியாயம்? அதுவும் ஒரு வழக்குரைஞரா இப்படிப் பேசுவது!

● கே. ஆர். வேலுச்சாமி, அன்னூர்.

? தாமரைக்கனி- கவுண்டமணி - ஒப்பிடவும்.

! இருவருமே உதைப்பவர்கள். அவ்வப்போது ஓரங்கட்டப்பட்டாலும் எப்போதும் செய்தியிலிருக்கும் வித்தை தெரிந்தவர்கள். இருவருக்கும் சிக்கல் வருவதெல்லாம் எப்போதும் தாய்க்குலத்தால்தான்!


• வித்தை...

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? பாரதிராஜாவின் தாஜ்மஹால் எப்படி?

! பொம்மை தாஜ்மஹால்!


• ...தெரிந்தவர்கள்!

● வி. சிவா, மதுரை - 16.

? தீபாவளிக்கு மறுநாள் டெண்டுல்கரும் டிராவிடும் நடத்திக் காட்டிய வாணவேடிக்கை எப்படி?

! அது பழங்கதை சாரே! அதுக்கப்புறம் டெண்டுல்கர் டாஸ் ஜெயித்தும் பிட்சின் ஈரப்பதம் கவனியாமல் பாட்டிங் தேர்ந்தெடுத்து, எல்லோரும் சரிய, ராபினும் கங்கூலியும் முறையே 45, 153 ரன் விளாசி மானத்தைக் காப்பாத்தினாங்க. ஆக, மூன்றாவது மேட்ச் வெற்றி. நாலாவது 'ஒருநாள்' ஊத்திக்கிச்சி... ஃபைனலில் டிராவிட் அசத்தி ஜெயிச்சாலும் டெண்டுல்கர் 'ஹீரோ'வானாரே!

• கொள்கை வீரர்


● அ. ராஜா ரஹ்மான், கம்பம்.

? தியாகி செங்கல்வராயன் மறைவு குறித்து...?

! கொண்ட கொள்கை விஷயத்தில் அவர் கருங்கல்வராயன். ஒரு நல்ல காந்தியப் பழத்தைக் காலம் சாப்பிட்டு விட்டது.

● எம். மகேந்திர முருகன், எடுத்தனூர்.

? கலைஞரின் பல்முனை மருத்துவத் திட்டம் பலனளிக்குமா?

! திட்டத்தின் வெற்றி அதை அறிவிப்பதிலே இல்லை. செயல்படுத்துவதில்தான் உள்ளது. வெற்றிகரமாகச் செயல்படுத்த முடியும் என்பதற்கு உத்தரவாதம் இருந்தாலொழிய, திட்டத்தை அறிவிக்காமலிருப்பதே நல்லது.


• நல்ல பழிவாங்கல்!

● கே. ஆர். வெங்கடேஷ், சீர்காழி.

? முரசொலி பொன் விழா மலருக்குக் கட்டுரை எழுதித் தர அவகாசமில்லை என்று கல்கி ராஜேந்திரன் தமக்குக் கடிதம் எழுதியதாகக் குறிப்பிட்டு, அவரைப் பழிவாங்குவதற்காகவே(!) கல்கி நூற்றாண்டுக்காக எந்த விழா நடைபெற்றாலும் தாம் கலந்துகொள்வதாக முதல்வர் கருணாநிதி பேசியுள்ளாரே?

! நல்ல காலம்! கி.ரா. எழுதித் தராது போனார். அதனால்தானே முதல்வருக்குப் பழிவாங்கும் உணர்வு ஏற்பட்டது!

● சூர்யநிலா, சேலம் - 9.

? வணிக இதழ்களுக்கும் சிற்றிதழ்களுக்கு மிடையே உள்ள இடைவெளி குறைந்து விட்டது போல் தெரிகிறதே?

! 'இந்தியா டுடே'வில் சுந்தர ராமசாமியின் கட்டுரை படித்தீர்களா? மாறுதல் இருதரப்பிலும் ஏற்பட்டிருப்பது ஆரோக்கியமான விஷயம்.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் : பி. ஜெயப்பிரகாஷ், TNEB குடியிருப்பு, சர்க்கார்பதி - 642133.

# நீங்கள் கேட்டவை - தராசு

# வழக்கு:

மாதுரி

"பிரபல நடிகை மிஸ். மல்லியோட சம்பளம் வெறும் ஆயிரத்து ஒரு ரூபாயா?" நீதிபதி-பசுபதியின் கண்கள் அகல விரிந்தன. "நம்ப முடியலை!"

"யெஸ் யுவர் ஹானர். சில படங்கள்ல 1011 (ஆயிரத்து பதினொன்று), சிலதுல 1001. ரொம்ப பாவமான ப்ரொடியூசர்னா 111 ரூபாய்க்குக் கூட நடிச்சிருக்காக! இதோ பாருங்க காண்ட்ராக்ட்ஸ்." அவரிடம் கொடுத்தார் மல்லியின் வக்கீல்.

சூப்பர் ஹீரோயின் மல்லி இவ்வளவு சல்லிசுனு தெரியாம என்ன வேலை பாக்கிறே நீ? என்று ஒருகணம் தன்னைத் தானே கடிந்து கொண்டார் பசுபதி.

அதற்குள், "அல்லாம் பொய் சொல்லுது! பொய்! சப் ஜூட் ஹை! எந்த ஹீரோயினாவது ஆயிரம் ரூபாக்கு நடிக்குமா? அதுவும் மல்லி, நம்பர் ஒன்..."கதறினார் கேஸ் போட்ட பைனான்சியர் லக்கோட்டியா.

"சைலன்ஸ்!"

"மிஸ்டர் லக்கோட்! நான் எல்லா பட ஒப்பந்தங்களையும் நீதிபதிகிட்ட கொடுத்திருக்கேன். அவர் பார்த்துச் சொல்லட்டும்."

"யுவர் ஹானர், காண்ட்ராக்ட்ல ஒரு படத்தோட சம்பளம் ஆயிரமிருக்கும். பாக்கி இருபது லட்சம் ப்ளாக்ல வாங்கிடும்! இதுல வராது! ஆயிரம் ஒயிட்! லட்ச மெல்லாம் ப்ளாக்! இன்னா அநியாயம் பாருங்கோ!"

"சாரி மிஸ்டர் லக்கோட்டியா. இந்த நீதி மன்றம் காண்ட்ராக்ட்படிதான் போக முடியும். ப்ளாக், ஒயிட் பற்றி இந்த கோர்ட்டுக்கு எதுவும் தெரியாது!" என்றார் நீதிபதி.

"சார், சார் சார்! நீங்க பெரிய மனுஷர். அப்படி சொல்லக் கூடாது. இங்க எல்லாரும் போட்டிருக்கிற ட்ரெஸ்ஸே ப்ளாக் அன்ட் ஒயிட்! மல்லி மொத்த சம்பளம் ப்ளாக்ல வாங்குது. சோ, எப்படியாச்சும் என் இருபது லட்சம் வாங்கிக் குடுங்கோ சார்... ப்ளீஸ்... ப்ளாக்ல குடுத்தாலும் பரவாயில்லே." கடன் கொடுத்த லக்கோட்டியா மன்றாடினார்.

லக்கோட்டியா ராஜஸ்தானில் லட்சணமாக "காக்ரா சோளி"களுக்கு பைனான்ஸ் செய்து ஒழுங்காக ஒண்ணரை வட்டி சம்பாதித்துக் கொண்டிருந்தார். தமிழ் சினிமாக்காரர்கள் பாட்டு, ஃபைட் எடுக்க அடிக்கடி அந்த பாலைவனத்திற்குப் போக, அவர்களுக்கான ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தார். அப்படியே மெதுவாகப் பிடித்துக்கொண்டது சினிமா. விளைவு, ராஜஸ்தான் சென்னை வந்தடைந்தது. பண்பாடு குறையாமல் புதிய பைனான்சியரை ஆயிரம் கரம் நீட்டி வரவேற்று முதுகில் ஏற்றுக் கொண்டது தமிழ் சினிமா.

லாப நஷ்டங்கள் அவரை பாதித்ததில்லை. தமிழர்கள் நல்லவர்கள். ஆனால் இந்த நடிகை மல்லிக்கு இருபது லட்சம் கடன் கொடுத்துவிட்டு, கொடுத்தது உண்மை என்று நிரூபிக்கவே கீழ் கோர்ட். மேல் கோர்ட், பெஞ்ச், சேர் இப்படி அலைந்து நா வறண்டு போனது. பாலைவனக்காரரே தண்ணி குடித்து விட்டார்.

போதாக்குறைக்கு 'என் பிஸினஸ்தான் எனக்கு மட்டுந்தான், புரியுந்தான்!' என்று வக்கில் அமர்த்தாமல் தாமே வாதாடினார். இப்படித்தான் கீழ் கோர்ட்டில், "யுவர் ஹானர், மல்லிக்கு பணம் வேணும் சொல்லி, அது அண்ணா ராஜாதான் இருபது லட்சம் கடன் வாங்கிச்சு."

"அப்ஜெக்ஷன் யுவர் ஹானர்! என் கட்சிக்காரர் மாண்புமிகு மல்லிக்கு சகோதரனே கிடையாது! சினிமா உலகில் எல்லோரும் அண்ணே. அது உறவுமுறை அல்ல. அந்த உறவிற்கு விடுமுறை."

"நோ நோ சார்... ராஜா மூணு வருசமா மல்லி வூட்லே இருக்குது, சாப்டுது, படுக்குது... அது மல்லி பிரதர்தான்... ஷ்யூர்!"

"மிஸ்டர் லக்கோட் பிடிவாதம் பிடித்தால் நாங்க DNA பரிசோதனை செய்து ராஜா மல்லியின் சகோதரன் இல்லை

யென்று நிரூபிக்கத் தயார் - அவர் செலவில்!"

பார்த்தார் நீதிபதி. ராஜா அண்ணனா தம்பியா என்பது பிரச்சனையல்ல. மல்லி கடன் பத்திரத்தில் உத்திரவாத கையெழுத்துப் போட்டிருக்கிறாள். கடனை அவளிடம் கேட்பது தப்பில்லையென்றார். லக்கோட்டியா முகம் மலர்ந்தது.

"சாரி யுவர் ஹானர். மல்லி அந்த பத்திரத்தில் கையெழுத்துப் போட்டிருந்தாலும் அது கடன் பத்திரமா, கல்யாணப் பத்திரமா, சொத்துப் பத்திரமா என்று அவங்களுக்குத் தெரியாது. அதில எழுதியிருக்கிறதும் புரியாது. பிகாஸ் மல்லிக்கு தமிழ் தெரியாது! பாருங்க படத்திலேகூட டப்பிங் வாய்ஸ்!"

"சார் இது குழப்புது!"

"ராஜாங்கிற வழிகாட்டிக்கு பட்ட நன்றிக் கடனுக்காக, மல்லி, ராஜா எதை நீட்டினாலும் கையெழுத்துப் போடு வாங்க..."

"அது இன்னா... நன்றிக் கடன்? மொதல்ல என் கடன் திருப்பிக் குடு!" இப்படி தொடர்ந்தது வாதம், பிரதிவாதம், விதண்டாவாதம்.

முதல் மட்டுமாவது லக்கோட்டியா பெற வேண்டுமென்று நினைத்தார் நீதிபதி. மல்லியின் சொத்துக்களை ஜப்தி செய்ய ஆணையிட்டால் பணம் கிடைக்கலாமென்று எண்ணி சொல்லிப் பார்த்தார்.

மல்லி தரப்பில் யாரும் கிடைக்கவில்லை. அவள் பெயரில் எந்த ஒரு சொத்தும் இல்லை. பங்களா வாடகை, கார்கள் ஹையர், தோட்டம் கெஸ்ட் ஹவுஸ் குத்தகை, நகைகள் நட்புக்காக... அதிர்ந்து போனார் நீதிபதி.

"அசையா சொத்து சரி. அசையும் சொத்து...?"

"மல்லிதான் அசையும் சொத்து. யுவர் ஹானர்! அவங்க அசைவுகள்லே சம்பாதிச்சது கோடானு கோடி ரசிகர்கள்."

முடிவு காணாமல் கேஸ். மேல்

# மல்லி



கோர்ட் நீதிபதி பகபதிக்கு தலைவலியாய் போய்ச் சேர்ந்தது.

புத்திசாலித்தனமாக மல்லியின் வருமானத்தை 'அட்டாச்' (attach) செய்தால், ப்ளாக் அண்ட் ஒயிட் பிரச்னை கிளம்பி, கலெக்‌ஷன் படத்துக்கு ஆயிரத்தைத் தாண்டவே ததிங்கிணதோம் போடும் போலிருந்தது. இருப்பினும் மல்லி நடித்துக் கொண்டிருக்கும் ஆறு படங்களின் ப்ரொடியூசர்களும் அவள் சம்பளத்தை ஆயிரமோ நூறோ கோர்ட்டில் கட்ட வேண்டுமென்று ஆணையிட்டார். அந்த அறுவருக்கு ஏகக் குஷி! பத்துத் தவணையில் கட்டுவதாக ஒப்புக்கொண்டனர். மல்லி இனி பணம் கேட்டு தொந்தரவு செய்ய மாட்டாள். கேட்டால் கோர்ட் என்று மிரட்டலாம். ஷூட்டிங் ஒழுங்காக நடக்குமென்று தப்புக் கணக்குப் போட்டார்கள்.



"உங்கம்மா ஊருக்குப் போறப்ப என்னையும் கூப்பிடறாங்களே?"

"உங்க சமையல் அவங்களுக்கு ரொம்பப் பிடிச்சுப் போச்சாம்!"

— சி.பி. செந்தில்குமார்

"ஏமண்டீ! ஒயிட் பேமண்ட்டுக்கு கோர்ட்ல இன்ஸ்டால்மென்டு வாங்கிக் கொடுத்தாச்சி இல்ல? ப்ளாக் அமவுண்ட் ஃபுல்லா மொதல்ல ஈயண்டீ! அப்பறமே ஷூட்டிங்கு!" என்று கூப்பிட்டு அனுப்பிக் கலக்கினாள்.

இந்தச் சிக்கலிலிருந்து விடுபட நீதிபதி பகபதிக்கு சரியான வழி புலப்படவில்லை. நாளுக்கு நாள் இதுவோ வரலாற்றுப் புகழ் மிக்க வழக்காகிக் கொண்டிருந்தது. மல்லி நடித்து, வரவிருக்கும் படங்களைத் தடை செய்தால் ஏதாவது பணம் கிடைக்குமா என்று உரக்க யோசித்தார். ஓடி வந்தார்கள் தயாரிப்பாளர்கள். ஒரு சேர, "நீதிபதி சார், தாராளமா தடை செய்யுங்க! ஆனா செய்தி மட்டும் கோர்ட் தடை செய்ததா இருக்கக் கூடாது!"

"பின்ன?"

"மல்லி படத்திற்கு சென்சார் தடை'னு அறிவிச்சிடுங்க! அதையே நாங்க விளம்பரமாக்கி, பரபரப்பு ஏற்படுத்தி... படம் ரிலீஸ் ஆகும்போது ப்ளாக்ல பிச்சிக்கும்!"

"அய்யோ இங்கயும் ப்ளாக்கா?"

எந்த வழக்கும் நீதிபதி பகபதியை இப்படி கொடுமைப் படுத்தியதில்லை. நல்ல தீர்ப்பு வழங்க வேண்டுமென்று தோன்றியது. ஆனால் என்ன தீர்ப்பு வழங்குவது என புரியாமல் தத்தளித்தார்.

படத்திற்கு ஆயிரம் ரூபாய் வீதம் என்றால், இருபது லட்சம் லக்கோட்டியாவின் கொள்ளு பேரனுக்குத்தான் போய்ச் சேரும்? தினம் சாப்பாட்டிலிருந்து, ட்ரெஸ், லிப்ஸ்டிக், நெயில் பாலிஷ் உட்பட அனைத்தும் படத் தயாரிப்பாளர்கள் இலவசமாக அனுப்பி வைப்பது என்று சத்தியம் செய்கிறாள். அது உண்மை என்று எடுத்துக் கொண்டு, இனி அவை மல்லிக்கு அனுப்பப்படாமல் சந்தை போட்டு விற்கப்பட வேண்டும். பணம் கடனுக்குப் போய்ச் சேர வேண்டும் என்று தீர்ப்புச் சொல்லலாமா' இல்லை, மர்லின் மன்ரோ ட்ரெஸ் போல மல்லி முதல் படத்தில் அணிந்த கவர்ச்சி உடையை ஏலம் விட்டு கடனை அடைக்கச் சொல்லலாமா? நல்ல ஐடியா! ஆனால் யார் ஒரு ஜென்ட்ஸ் கைகுட்டையையும், லேடீஸ் கை குட்டையையும் இருபது லட்சம் கொடுத்து வாங்கப் போகிறார்கள்?

நினைக்க நினைக்கச் சுழன்றது தலை. அந்தச் சுழற்சியின் கடைசியாக அவர் கண் முன் தோன்றியவர் அமெரிக்க ஜனாதிபதி கிளிண்டன். கூடவே தீர்ப்பும் கிட்டியது. கிளிண்டனே மோனிகா வழக்கில் வழக்கறிஞர் ஃபீசிற்காக நன்கொடை வாங்கியபோது மல்லி ஏன் உண்டியல் வைக்கக் கூடாது?

மல்லி சம்பாதித்த அசையும் சொத்து ரசிகர்கள். மல்லி படம் ஓடும் தியேட்டர்களில் "மல்லி வழக்கு திருப்பணி" என்று அவள் கவர்ச்சி போட்டோக்கள் சுற்றிய கலர்க் கலர் உண்டியல் வைக்கப்பட்டது. ரசிகர்களை கட்டாயப்படுத்தாமல், "குறைந்தது ஒரு ரூபாய் போடவும்' என்ற வேண்டுகோள் மட்டும் பளிச்சிட்டது.

பகபதி நிம்மதிப் பெருமூச்சு விட்டார். இனி பணம் நிச்சயம் வசூலாகி விடும். என்ன இந்த உண்டியல்களுக்குத்தான் பாதுகாப்புத் தேவை. அது அடுத்த கட்டம்!

## மந்திரப் புன்னகை - 16

# கடவுள் நடத்திய மேஜிக்!

ஜப்பானில் மேஜிக் ஷோ நடத்த அழைப்பு விடுத்த ஸ்பான்ஸர், ஜூனியரின் திறமை பற்றிச் சொல்லி, அவரை அனுப்புவதாக நான் சொன்னபோது, அதை ஏற்காமல், நான்தான் வர வேண்டும் அல்லது இரண்டு பேரும் வரலாம் என்று சொல்லி விட்டார். நான் "நாங்கள் இரண்டு பேருமே வருகிறோம். ஆனால் முதல் சில நாட்கள் ஜூனியர் தனியாகவே மேஜிக் செய்து காட்டட்டும். அதற்கு நல்ல வரவேற்பு என்றால், அவரே தொடரட்டும்; இல்லையெனில் நான் தொடருகிறேன்' என்றதும் சம்மதம் தெரிவித்தார். நாங்கள் ஜப்பான் போய் இறங்கினோம்.



முதல் ஐந்தாறு நாட்களுக்கு, நடந்த ஜூனியரின் ஷோவுக்கு ஏக வரவேற்பு. "நான்தான் ஜூனியரின் திறமை பற்றி தப்புக்கணக்குப் போட்டு விட்டேன்! வெரி சாரி! நீங்கள் எப்போது ஊருக்குப் புறப்பட வேண்டும் என்று சொன்னால், டிக்கெட் ஏற்பாடு செய்கிறேன்" என்றார் ஸ்பான்சர்.

அடுத்து நான்கைந்து வருடங்களுக்கு, ஜூனியர் மட்டுமே, ஜப்பான் போய் நிகழ்ச்சியை நடத்தி, மக்களை மகிழ்வித்துவிட்டு, பெரும் புகழுடன் திரும்பி வந்தார். சமயத்தில், ஏக டிமாண்டு காரணமாக ஒரே நாளில் மூன்று ஷோக்கள் நடத்திய அனுபவம் உண்டு. ஒரு ஷோவை முடித்துவிட்டு, முண்டியடித்துக் கொண்டு காத்திருக்கும், ரசிகர்களுக்கு ஆட்டோகிராப் போட்டுக் கொடுத்து விட்டு, ஒரு மணி நேரம் ரெஸ்ட் எடுத்துக்கொண்டு அடுத்த ஷோ. மறுபடி ஆட்டோகிராப். ஒரு மணி நேர ரெஸ்ட். மூன்றாவது ஷோ. அந்த அளவுக்கு வரவேற்பு.

ஜப்பானிய ரசிகர்கள் மிகவும் கிரேஸியானவர்கள் என்றால் மிகையில்லை. ஆட்டோகிராப் புத்தகங்கள், பேப்பரில் மட்டுமின்றி அவர்களின் கை, முகம், கழுத்து, முதுகில்கூட ஆட்டோகிராப் போட்டுக் கொடுத்திருக்கிறார் ஜூனியர்.

ஜப்பான் என்றவுடன் எனக்கு இன்னொரு மறக்க முடியாத சம்பவமும்

**மேஜிக் நிபுணர் கே. லால்**

நினைவுக்கு வருகிறது. ஒருதடவை மாகு மாடோ என்ற இடத்தில் நிகழ்ச்சிக்காகப் போயிருந்தோம். மாகுமாடோ நகரத்துக்கு, சொகுசு பஸ் ஒன்றில் பயணம் செய்து கொண்டிருந்தபோதே எனக்கு வயிற்றில் வலி ஏற்பட்டது. நேரம் ஆக, ஆக வலி அதிகரித்துக்கொண்டே போனது. மாகுமாடோ நகரை அடைந்தவுடன் நேராக ஒரு மருத்துவமனைக்கு நான் கொண்டு செல்லப்பட்டேன். என்னைப் பரிசோதனை செய்து பார்த்த டாக்டர்கள், உடனே அப்பெண்டிசைடிஸ் ஆபரேஷன் செய்ய வேண்டும் என்றனர்.

இதைக் கேட்டதும் எனக்கு அதிர்ச்சியாகி விட்டது. ஆபரேஷன் என்றால் அதன்பின் ரெஸ்ட் என்று சொல்லி விடுவார்கள் டாக்டர்கள். அப்புறம் குறைந்த பட்சம் ஆறேழு நாட்களுக்கு நிகழ்ச்சியை ரத்து செய்ய வேண்டியிருக்கும். அதற்கு என் மனம் ஒப்பவில்லை. என் ஸ்பான்சருக்கும் இது எதிர்பாராத அதிர்ச்சிதான். நிகழ்ச்சியை ரத்து செய்வதால் ஏற்படும் பண நஷ்டம், பெயர் கெடுவது போன்றவை அவரைக் கலங்க வைத்து விட்டன. ஆனாலும் வேறு வழியில்லை. டாக்டர்கள் சொல்லி விட்டார்கள் என்பதற்காக நிகழ்ச்சிகளை ஒரு வாரத்துக்கு ரத்து செய்வதாகக் கூறினார். என்னை ஆபரேஷன் செய்து கொள்ளச் சொன்னார். ஆனால் நான் டாக்டர்களிடம், “நான் ரசிகர்களை ஏமாற்ற விரும்பவில்லை; ஏதாவது பவர்ஃபுல் ஊசி, மருந்து, மாத்திரை கொடுத்து, வயிற்று வலியின் தீவிரத்தைக் குறையுங்கள்; நான் ரொம்ப சிரமம் எடுத்துக் கொள்ளாமல், நிகழ்ச்சிகளை நடத்தி விடுகிறேன். இங்கே முடித்து விட்டு, அடுத்த ஊருக்குப் போவதற்கிடையில் உள்ள நாட்களில் ஆபரேஷனை வைத்துக் கொள்ளலாம்” என்று டாக்டர்களிடம் சொன்னேன். டாக்டர்கள், உடனடியாக ஆபரேஷன் செய்துகொள்ள வற்புறுத்தினாலும், நான் மறுத்து விட்டேன். அறிவித்தபடி நிகழ்ச்சி நடக்கும் என்று விளம்பரம் செய்யப்பட்டது.

எனக்கு ஏதாவது ஆகிவிட்டால், என்ன செய்வது என்று ரொம்பவே பயந்து விட்டார் என் ஸ்பான்சர். முக்கியமான டாக்டர்களுடன் கலந்து ஆலோசித்தார். உடனடியாக அந்த ஊரின் பெரிய ஆஸ்பத்திரியில் சொல்லி, நடமாடும் ஆபரேஷன் தியேட்டர் ஒன்றை மேஜிக் ஷோ நடந்த அரங்க வளாகத்தில் தயார் நிலையில் கொண்டு வந்து நிறுத்தி விட்டார்.

நிகழ்ச்சி நேரம் நெருங்க ஸ்பான்சருடைய இதயத்துடிப்பு அதிகரித்தது. ஒரு டாக்டர் குழு, மொபைல் ஆபரேஷன் தியேட்டரில் தயாராகக் காத்திருக்க, மேடையின் ஒரு பகுதியில், இன்னொரு டாக்டர் குழு ரெடியாக இருந்தது. திரை விலகியது.

ஆண்டவனை மனமுருக வேண்டிக் கொண்டு மேடையில் தோன்றி மளமளவென்று வழக்கமான பாணியில் ஆரம்பித்தேன். இடைவேளையின்போது என்னைப் பரிசோதித்த டாக்டர்கள், பயப்படும்படியாக ஏதுமில்லை என்று சொல்லி விட்டார்கள். எனக்கும் பெருமளவு வலி குறைந்து விட்டது போல இருந்தது. ஆண்டவனுக்கு நன்றி கூறி, நிகழ்ச்சியைத் தொடர்ந்தேன். வெற்றிகரமாக நிகழ்ச்சி முடிந்தது. என்னை முழுமையாகப் பரிசோதித்துப் பார்த்த டாக்டர்கள் குழு வியப்பூட்டும் தகவல் ஒன்றைச் சொன்னார்கள். “நீங்கள் அப்பெண்டிசைடிஸ் பிரச்னையிலிருந்து முழுமையாக விடுதலை பெற்று விட்டீர்கள். அந்தப் பிரச்னை இருந்ததற்கான அறிகுறிகூட இப்போது இல்லை.”

எனக்கு நம்ப முடியவில்லை. என் அவநம்பிக்கையைத் தெரிவித்தபோது, “இது மருத்துவ அதிசயம் என்றே நாங்கள் நம்புகிறோம்” என்றார்கள் டாக்டர்கள். இதில் முக்கியமாகச் சொல்ல வேண்டியது என்னவென்றால், இந்த நிகழ்ச்சிக்குப் பின், எப்போதும் எனக்கு அப்பெண்டிசைடிஸ் வரவும் இல்லை; ஆபரேஷன் அவசியமும் ஏற்படவில்லை. கடவுளின் பூரண அனுகிரகம் அல்லது மேஜிக் என்பதைத் தவிர நான் வேறு என்ன சொல்ல!



“ஏதாவது ஒரு விருது வாங்காமல் நான் ஜோக்ஸ் எழுதறதை நிறுத்தறதில்லைனு உறுதியா இருக்கேன்.”

“இதை முதல்லயே சொல்லித் தொலைச்சிருந்தா எப்பவோ விருது கிடைச்சிருக்குமே சார்!”

— சீர்காழி ரேவதி

இது போன்ற சம்பவங்கள் வாழ்க்கையில் உணர்த்தும் செய்தி ஒன்று உண்டு. நமக்கு ஒரு கஷ்டம் என்றால், ஆண்டவனிடம் நம்மை அதிலிருந்து காப்பாற்றச் சொல்லி வேண்டிக் கொள்வது நியாயம் இல்லை. எப்போதுமே, நமக்கு கஷ்டம் ஏதுமில்லாத, சந்தோஷமான சமயங்களில்கூட ஆண்டவனை நாம் மறக்கவே கூடாது. இது என் தாயார் எனக்கு இளம் வயதிலேயே சொல்லிக் கொடுத்த பண்பாடு. கல்கத்தாவில் எங்கள் வீட்டுக்கு மகான்கள் பலர் வருகை புரிந்திருக்கிறார்கள். அவர்களை நமஸ்கரிக்கிறபோது, 'நல்ல குணம் படைத்தவராய் விளங்குவதுதான் வாழ்க்கையில் மிகவும் முக்கியமானது. பணம் எப்போது வேண்டுமானாலும் வரும். எப்போது வேண்டுமானாலும் போகும். நிரந்தரமானது குணம்தான்' என்று அறிவுரை கூறுவார்கள். அது என் மனத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டது. எனவேதான், என் குடும்பத்தினர் அனைவரும் தினமும் ஒரு மணி நேரமாவது பூஜை, பிரார்த்தனையில் செலவிடுகிறோம்.

மேஜிக் நிகழ்ச்சிகளின்போது, தந்திரத்தின் மூலம், பற்பல வித்தைகளைச் செய்து காட்டினாலும், பிராணிகளைப் பயன்படுத்திச் செய்கிற ஐட்டங்களுக்கு ரசிகர்கள் மத்தியில் குறிப்பாக குழந்தைகளிடையே மிகவும் உற்சாகமான வரவேற்பு இருக்கும். அதனால்தான் மேஜிக் கலைஞர்கள் தங்கள் வசதிக்கேற்ப வெள்ளை எலி, முயல், கிளி போன்ற சிறு பறவை, பிராணிகளில் தொடங்கி சிங்கம், புலி போன்ற காட்டு மிருகங்கள் வரை பலவிதமானவற்றைத் தங்கள் நிகழ்ச்சிகளில் பயன்படுத்துகிறார்கள். இப்படிப் பெரிய விலங்குகளை வைத்து, மேஜிக் செய்ய வேண்டும் என்றால், அதற்குத் தனியே அரசாங்கத்திடமிருந்து அனுமதி பெற வேண்டியது அவசியம். ஆனால் சில கடுமையான சட்ட திட்டங்கள் காரணமாகவும், பிராணிகள் நல அமைப்பினரது கெடுபிடிகள் காரணமாகவும் சர்க்கஸ்களிலேயே விலங்குகளை வைத்துப் பராமரிப்பதில் ஏகப்பட்ட பிரச்னைகளை சந்திக்க வேண்டியுள்ளது. எனவேதான், மேஜிக் கலைஞர்களில் பெரும்பாலானவர்கள், விலங்குகளைப் பயன்படுத்துவது இல்லை.

வனவிலங்குகளைப் பயன்படுத்துவது கொஞ்சம் ரிஸ்க்தான். விலங்குகள் எப்போதும், ஒரே மாதிரியாக நடந்து கொள்



"அந்தப் பத்திரிகை சினிமா விமர்சகருக்குக் குறும்பு கொஞ்சம் ஜாஸ்தி தான்!"

"படத்தை தியேட்டரில் பார்க்கணும்னா ஒரு வாரத்துக்குள்ளே பார்த்துடுங்க. இல்லேன்னாலும் குடிமுழுகிடாது. டி.வில பார்த்துக்கலாம்னு எழுதியிருக்காரே!"

— மங்கை

ளும் என்று சொல்ல முடியாதே! எனவே அதனுடன் மிகவும் நட்புடன் பழகி ஒருவித நேசமான உறவை ஏற்படுத்திக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். ஒருதடவை ஜப்பான் போயிருந்த சமயம், எங்களிடம் புலி இல்லை என்றாலும்கூட, அங்கே ஒருவர் வளர்த்து வந்த புலியை பயன்படுத்திக் கொள்ள ஒரு வாய்ப்புக் கிடைத்தது.

ஆனால், எங்களுக்குப் பரிச்சயமில்லாத புலியைப் பயன்படுத்துவதற்கு முன், ஜூனியர் அதனுடன் நட்பு ஏற்படுத்திக் கொண்டார். எப்படித் தெரியுமா? அதன் உரிமையாளர், ஜூனியரை அழைத்துக் கொண்டு, புலியுடன் தோட்டத்தில் உலா வருவார். அதன் பின், ஜூனியரின் மேஜிக் காஸ்ட்யூமை அவர் அணிந்துகொண்டு, அதனுடன் இருப்பார். அதனையடுத்து, மேஜிக் காஸ்ட்யூமில் ஜூனியர் புலியுடன் இருப்பார். கூண்டில் இருக்கும் புலிக்கு உணவு கொடுத்துப் பழக்கிக் கொண்டார். இப்படியெல்லாம் செய்தபின், மேடைக்கு அதன் உரிமையாளரும், ஜூனியரும் வந்து பழக்கினார்கள். கடைசிக் கட்டமாக, சுமார் இரண்டு வார பழக்கம், பயிற்சிக்குப் பிறகு, அந்தப் புலியை வைத்து, அது மறைவது போல மேஜிக் செய்து காட்டினோம். புலியை வைத்து செய்யப்பட்ட அந்த ஐட்டத்துக்கு மக்களிடம் ஏகப்பட்ட வரவேற்பு.

பறவைகள், முயல் இவற்றில் துவங்கி, புலி வரை மேடையிலிருந்து மாயமாய் மறையச் செய்யும் தந்திரத்தைச் செய்தாகிவிட்டது. அடுத்து புதுமையாக என்ன செய்வது என்று யோசித்தேன். பிரும்மாண்டமாக ஏதாவது செய்தால் ரசிகர்களை பிரமிக்க வைக்கலாமே என்று தோன்றியது. அப்போது பிறந்ததுதான் மேடையில் யானையை மாயமாக மறையச் செய்யும் மேஜிக்!.

(தொடரும்)

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

# [illegible]

**ச**த்யம், த்ருதமாக விளங்கும் பகவான் விஷ்ணு, பஞ்ச பூதங்களாகவும் விளங்குகிறான் என்று கர்ப்ப ஸ்துதியிலே வருவதைச் சொன்னேன்.

ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத பஞ்ச பூதங்களில் அவன் இருப்பது எப்படிப் பொருந்தும்? என்று கேட்டால் அவன் சர்வ வியாபகத்துக்கு நரசிம்ஹாவதாரமே சாட்சி.

அதனால்தான் ஹிரண்ய கசிபு பிரகலாதனைப் பார்த்து, "யாரடா அது விஷ்ணு? எங்கே இருக்கிறான் அவன்?" என்று கேட்ட போது,

"இந்த லோகத்திலே இருக்கிறான்; மேலே இருக்கிறான்...'' என்று அந்தக் குழந்தை சொல்லிற்று. "இத்தனை சொல்லுவானேன்... உன்னுள்ளும் இருக்கிறான்; என்னுள்ளும் இருக்கிறான். நீ சொன்ன சொல்லிலும் உளன். அதை விரைவில் காண்பாய்" என்று சொல்லிற்று.

அணோரணியன் மஹதோமஹியன் என்றது உபநிஷத். ''அணுவைக் காட்டிலும் அணுவாக இருக்கிறான். மஹத்தைக் காட்டிலும் மஹத்தாக இருக்கிறான். எங்கேடா இருக்கிறாய் என்று கேட்டாயே... அந்தச் சொல்லில் இருக்கிறான்."

'எங்கும் உளன் கண்ணன்' என்று அந்தக் குழந்தை கண்ணனைச் சொல்கிறதா? கிருஷ்ணனைச் சொல்கிறதா? நரசிம்ஹனைச் சொல்கிறதா? என்றால் கண்ணன் என்று சொல்கிறபோதே பொதுவாக கிருஷ்ணனைத்தான் சொல்வதாகிறது.

கண்ணன் என்ற பெயருடைய ஒருவரைப் பார்த்து, 'உமக்கு வைத்த பெயரே கண்ணன் என்பது தானா?' என்று கேட்டால், ''இல்லையில்லை... ஸ்ரீ கிருஷ்ண சர்மா; கூப்பிடுவது கண்ணன் என்று–" என பதில் சொல்லுவார்.

இந்த இடத்திலே பிரஹலாதன் கிருஷ்ணனைச் சொல்கிறானா என்றால், இல்லை. கண்ணன் என்ற சப்தத்துக்கு என்ன பொருள் என்றால் கண்ணழகு மிக்கவன் என்று இங்கே பொருள். கண்ணழகு மிக்கவன் யார் என்றால் நரசிம்ஹன். நரசிம்ஹன்தான் மிகவும் கண்ணழகு உடையவன் என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

அதை எப்படித் தெரிந்து கொள்வது என்றால், அதை அழகாக எடுத்துச் சொல்கிறார் திருப்பாணாழ்வார்.

> பரியனாகிவந்த அவுணன்
> உடல்கீண்ட அமரர்க்கு
> அரிய ஆதிப்பிரான் அரங்கத்து அமலன்
> முகத்துக்
> கரிய ஆகிப் புடை பரந்து
> மிளிர்ந்து செவ்வரி ஓடி நீண்டஅப்
> பெரியவாய கண்கள்;
> என்னைப் பேதைமை செய்தனவே!

இங்கே படுத்துக் கொண்டிருக்கிறானே ரங்கநாதன், அவன் யார் தெரியுமா?

அன்று பெரிதாக வந்தானே ஒருத்தன் – ஹிரண்யகசிபு என்று... அவனைப் பிடிப்பதற்கு வந்தானே அவனே இங்கே படுத்துக் கொண்டிருக்கிறான். இவன் கண்களைப் பாருங்களேன்... அது எப்படி இருக்கிறதென்றால், செவ்வரியோடி நீண்ட, பெரியவாய, கண்கள். காது வரைக்கும் போய் விட்டதாம் ரங்கநாதருடைய கண்கள்!

ஏன்? என்று கேட்டால், அவ்வளவு விசால நேத்ரம் எதற்கு என்று கேட்டால், காதோடு ரகசியம் சொல்கிறதாம் கண்கள். 'இதோ வந்திருக்கிறானே அவனை அனுக்ரஹம் பண்ணு, அனுக்கிரஹம் பண்ணு' என்று காதோடு பேசுகிறதாம்.

இதரானை அனுக்கிரஹம் பண்ணக்

# 44



கூடிய சக்தி கண்ணனுக்கே உண்டு. வாத்ஸல்ய பரிதமான நேத்திரம் அது. அப்படிப்பட்ட கண்ணழகு மிக்கவன் 'அங்கண் இரண்டும் கொண்டு எங்கள் மேல் நோக்குதியே....'

எம்பெருமான் திருவேங்கடமுடையானின் நேத்திரத்தில் திருமண் இட்டு மறைத்துள்ளார்கள். அந்த நேத்திரம் ஏன் அப்படி மறைக்கப்பட்டிருக்கிறது?

அந்த கடாக்ஷத்தை முழுமையாக நம் மால் தாள முடியாது. கண்ணை அப்படித் திறந்து பார்த்தானானால் அதைத் தாங்குகிற சக்தி நமக்கு வேண்டுமல்லவா? அந்த கடாக்ஷத்தை தரிக்கக் கூடிய, பெறக்கூடிய சக்தி முதலில் நமக்கு அனுக்கிரஹிக்கப்பட வேண்டாமா?

ஆகையினாலே, கொஞ்சம் கொஞ்சமாக, கிண்கிணிவாய் மெதுவாகத் திறக்கிற மாதிரி, மெதுவாகக் கண் திறந்து என்னை அனுக்கிரஹம் பண்ணு என்றார்.

எங்கும் உளன் கண்ணன்
என்ற மகனைக் காய்ந்து,
இங்கு இல்லையால்
என்று இரணியன்
தூண் புடைப்ப,
அங்கு அப்பொழுதே
அவன் வியத்
தோன்றிய என்
சிங்கப் பிரான்
பெருமை ஆராயும்
சிர்மைத்தே?



என்பது நம்மாழ்வார் திருமொழி.

ஹிரண்ய கசிபு கேட்டபோது அங்கேயே அப்பொழுதே தோன்றி தாம் எங்கும் உளன் என்பதைக் காட்டிக் கொடுத்தான்.

நரசிம்ஹாவதாரம் எதற்கு ஏற்பட்டது என்று கேட்டால், நாமெல்லாம் பதில் எழுதினோமானால் என்ன எழுதுவோம் – 'பிரஹலாதனை ரக்ஷிப்பதற்காக' என்று எழுதுவோம். 'பிரஹலாதனை ரக்ஷிப்பதற்கு' என்று நாம் பதில் எழுதினோமானால் திருத்துகிறவர் பக்கத்திலே ஒரு பெரிய சைபர்தான் போடுவார்; மார்க்கே வராது!

பிரஹலாதனை ரக்ஷிப்பதற்குத்தானே நரசிம்ஹ அவதாரம். அப்படியானால், அந்த விடைத்தாளை சரியாகத் திருத்தவில்லை என்று புனர் பரிசிலனைக்கு அனுப்புகிறோம். மறுபடியும் பார்த்துத் திருத்த அனுப்பினால் மறுபடியும் தப்புதான் போட்டு வரும்! அவ்வளவுதான்! எத்தனை நேரம் எழுதினாலும் இதுதான் நமக்குக் கிடைக்கக்கூடிய மார்க்!

ஏன்...?

பிரஹலாதனை ரக்ஷிப்பதற்காக எடுத்த அவதாரமாக அது இருந்தால்தானே!

பிரஹலாதனை ரக்ஷிப்பதற்காக அவன் எத்தனையோ காரியங்கள் பண்ணினானே! அக்னியிலே தூக்கி பிரஹலாதனைப் போட்டபோது பகவான் ரக்ஷிக்கவில்லையா? அப்படியே தூக்கி சமுத்திரத்திலே போட்டபோது ரக்ஷிக்கவில்லையா? உலர்ந்த காற்றை மேலே செலுத்தினானே, அப்போது ரக்ஷிக்கவில்லையா? யானைகளை விட்டு மிதிக்கச் சொன்னானே, அப்போது ரக்ஷிக்கவில்லையா? பாம்பை விட்டுக் கடிக்கச் சொன்னானே அப்போது ரக்ஷிக்கவில்லையா? மலை மேலேயிருந்து கீழே உருட்டினானே அப்போது ரக்ஷிக்கவில்லையா? எவ்வளவு விதமாக நரசிம்ஹாவதாரத்துக்கு முந்தியே ரக்ஷித்திருக்கிறான்! ஆகவே பிரஹலாதனை ரக்ஷிப்பதற்காகவா இந்த அவதாரம், என்றால், இல்லை! அவர் சொல்கிறார் பாருங்கள் – வியாஸ மஹரிஷி –

நிஜமான பக்தனான பிரஹலாதனுடைய வார்த்தையை ரக்ஷிப்பதற்காக நரசிம்ஹாவதாரம் என்பதை ரொம்ப ஸ்பஷ்டமாகச் சொல்கிறார்.

என்ன வார்த்தை, பிரஹலாதனுடைய வார்த்தை? – 'எங்கும் உளன் கண்ணன்.'

எங்கும் அவன் இருக்கிறான். சர்வ வியாபி, அவன் விஷ்ணு. எங்கும் நிறைந்தவன் அவன்.

"இங்கே இல்லையா?" என்று அவன் கேட்கிறபோது, அங்கேயிருந்து பகவான் வராமல் போனானானால் பகவானுடைய விபூதி – அவன் பெருமைக்கு அது இழுக்கல்லவா!

குழந்தை என்ன சொல்லிற்று – "எல்லா சராசரங்களிலேயும் அவன் இருக்கிறான், அதனால் அவனுக்குப் பெயர் விஷ்ணு" என்றது. எல்லா சராசரங்களிலேயும் நரசிம்ஹனாகவே உட்கார்ந்து விட்டான் பகவான். எந்த இடத்தைத் தட்டினாலும் உடனே வரவேண்டும் என்பதற்காக.

இதைத்தான் சுவாமி தேசிகன் ரொம்ப அழகாகச் சொல்கிறார் :

உலகமெல்லாம் விஷ்ணுவினுடைய கர்ப்பத்திலே இருக்கிறது என்று சொல்லாமல், 'நரசிம்ஹ கர்ப்பத்திலே இருக்கிறது' என்கிறார்.

அதனால்தான் சஹஸ்ரநாமத்திலே 'நரசிம்ஹ விபு நம : விஷ்ணவே நம : என்று விஷ்ணுவைச் சொல்லி நரசிம்ஹனையும் சொல்லியிருக்கிறது. விச்வம் என்கிற சப்தத்துக்குப் பொருளாக இருப்பவன் நரசிம்ஹன் என்பதைப் பார்த்துக் கொள்ளலாம்.

**வி**ஷ்ணுவின் அந்தர்யாமித்வத்தை உபநிஷத் எடுத்துக்காட்டுகிறது. அந்தர்யாமி பிராமணம் என்றே அதற்குப் பெயர் – மூன்றாவது ஸ்ருதி என்று சொல்வார்கள் இதை.

ஸ்ருதியிலே மூன்று – பேத ஸ்ருதி, அபேத ஸ்ருதி, கடக ஸ்ருதி. ஒவ்வொரு வேத வாக்யமும் ஒவ்வொரு ஸ்ருதியிலே அமைந்திருக்கும். ரிக், யஜுர், சாம வேதங்கள் மூன்றிலும் மூன்று விதமான ஸ்ருதிகளிலும் வாக்யங்கள் அமையும்.

## அருள்வாக்கு

**வெ**ளிதேசத்து விஷயம் ஒன்று புதிதாக நம் ஊருக்கு வந்தால் அதற்கு உள்ளூர் பாஷையில் வார்த்தையிருப்பதில்லை. வெளிநாட்டிலிருந்து நம் தேசத்துக்கு வந்த ரேடியோ, டெலிபோன், பஸ் முதலியவற்றுக்கெல்லாம் நம் பாஷையில் வார்த்தையில்லை. பிற்பாடு இப்போது இவற்றுக்கும் ஏதேதோ புரியாத தமிழ்ச் வார்த்தைகளை உண்டாக்கிக் கொண்டிருக்கிறோம். ஆனாலும் அது பழக்கத்தில் சரளமாக வர மாட்டேன் என்கிறது.

வேதம், யாகம் முதலியன சிலர் சொல்கிற மாதிரி தமிழ்நாட்டின் ஆதி நாகரிகத்துக்குப் புறம்பாகப் பிற்பாடு வந்தவை என்றால், யாகம், வேதம் முதலிய பதங்களுக்குச் சரியான தமிழ்



வார்த்தை இருக்க முடியாது. ஆனால் மிக மிகப் பழைய தமிழ் இலக்கியங்களிலேயே 'வேதம்' என்பது 'மறை' என்றும், 'யாகம்' என்பது 'வேள்வி' என்றும் புகழ்ந்து பேசப்படுகின்றன. இவை மிகவும் அர்த்த புஷ்டி நிறைந்த பதங்கள் என்பதை சம்ஸ்கிருத பண்டிதர்கள், தமிழ்ப் புலவர்கள் இருவருமே ஒப்புக் கொள்வார்கள். வேட்டலிலிருந்து 'வேள்வி' வந்திருக்கிறது. எல்லா தர்மத்துக்கும் வேரான வேதம், வேரைப் போலவே வெளியே தெரியாமல், அதாவது எல்லாரிடமும் புழக்கத்துக்கு வராமல், அதை ரக்ஷிப்பதற்கான கடும் நியதிகளைப் பின்பற்றும் சிலரிடமே மறைந்து இருக்க வேண்டும் என்ற உயர்ந்த கருத்தைச் சொல்லும் வார்த்தைதான் மறை. வைதிகப் பண்பாடும், யக்ஞ அநுஷ்டானமும் தமிழ்நாட்டில் ஊறிப் போயிருந்தாலொழிய அந்த நாகரிகத்தைக் காட்ட இத்தனை அழகான சொந்த மொழி வார்த்தைகள் உண்டாகியிருக்க முடியாது. வேதத்தை எழுதி வைத்துப் படிக்காமல், தலைமுறைத் தத்துவமாக வாயால் சொல்லிக் காதால் கேட்டே வைக்க வேண்டும் என்பதால் தமிழில் 'எழுதாக் கிளவி' என்ற பெயரும் வேதத்துக்கு உள்ளது. கேள்வியாலேயே பாடம் பண்ணுவதால்தான் வேதத்துக்கு சம்ஸ்கிருதத்திலும் ''ச்ருதி'' என்று பேர். 'மறை' என்பதைப் போல் வேத லட்சணத்தைப் பளிச்சென்று சொல்கிற நேர் வார்த்தை சம்ஸ்கிருதத்திலேயே இல்லை.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

அவன் வேறு, இது வேறு, இதுபோன்று அவன் இல்லை; அவன் இதைக் காட்டிலும் வேறு லக்ஷணம் உடையவன் என்பது பேத ஸ்ருதி. 'அவனிடத்திலிருந்து இதெல்லாம் தோன்றிற்று; அவன்தான் இதற்கெல்லாம் காரணம்' என்று சொல்கிறபோதே, அவன் வேறு இது வேறு என்று பிரித்துச் சொல்கிறது.

இப்படி பிரும்மத்திலிருந்து தோன்றியவைதான் சகலமும் என்று ஒரு உபநிஷத் சொல்கிறது. சாந்தோக்ய உபநிஷத்தில் போய்ப் பார்த்தோமானால் 'இது மொத்தமே பிரும்மம்தான்' என்கிறது. தத்வமஸி! த்வம் – நீ; தது – பரமாத்மா; அஸி – இருக்கிறாய்.

நீ என்று உன்னை நினைத்துக் கொண்டிருக்கிறாயே, நீ நீ அல்ல! நீயே பரமாத்மாதான். 'நீ' என்ற வேற்றுமைத் தோற்றம் விகாரத்தினாலே ஏற்பட்டது.

ஆதி சங்கர பகவத் பாதாள் இதை ரொம்ப அழகாக விவரிக்கிறார் அத்வைதத்திலே –

'இதெல்லாம் வெறும் தோற்றம்தான்– கானல் நீர் போலே. உண்மைப் பொருள் அல்ல. இதையெல்லாம் பார்த்து மயங்காதீர்கள்' என்கிறார்.

எதிரே பார்த்தோமானால், மத்தியானம் பன்னிரண்டு மணிக்கு மோட்டார் காரில் வரும்போது, தார் ரோடிலே ஒரே ஜலப் பிரவாகமாய்த் தெரியும். எதிரே ஒரு பர்லாங் தூரத்திலே ஜலம் போகிறதே! ஏதாவது ஆறு இருக்கிறதா என்றால், எங்கே இருக்கும்? வெறுமே கண்ணுக்குத் தென்படுகிறது அவ்வளவுதான்.

மான்களெல்லாம் காட்டிலே இந்த மாதிரி கானல் நீர் தோன்றக் கண்டு அப்படியே மருண்டு போகும். மான்களை மயக்கக்கூடிய இந்த கானல் நீருக்குப் பெயர் ம்ருக த்ருஷ்ணிகா.

வெயிலில் ஏற்படக்கூடிய இந்தத் தோற்றம் மறைந்து போய் விடுகிறதல்லவா...

அந்த மாதிரி இதெல்லாம் அபேத வேற்றுமையெல்லாம் வெறும் தோற்றம் என்கிறது உபநிஷத்.

ஒருத்தர் நடந்து போய்க் கொண்டேயிருக்கிறார். "ஐயோ பாம்பு!" என்று அலறுகிறார். எதிரே வளைவு வளைவாக ஒன்று இருக்கிறது. அதைப் பார்த்துவிட்டுப் பாம்பு படுத்துக் கொண்டிருக்கிறது என்று அலறினார்.

பாம்பா? இவ்வளவு வெயில் காய்கிறதே, பாம்பு படுத்துக் கொண்டிருந்தால் இந்த வெயிலுக்கு இத்தனை நேரம் எழுந்து போயிருக்குமே... என்று மனத்தில் நினைத்தார். யாரோ கையிலே குடத்தில் ஜலம் எடுத்துக் கொண்டு போயிருக்கிறார்கள். அந்தக் குடம் ஓட்டையாக இருந்திருக்கிறது. அந்த ஓட்டை வழியாக ஜலம் சொட்டியிருக்கிறது. அது வளைவு வளைவாகத் தெரிகிறது. 'அம்பு தாரா!' என்று நினைத்தார்.

'அம்பு' என்றால் தீர்த்தம். தீர்த்த ஒழுக்கு அப்படித் தெரிகிறது என்றார். ஆனால் ஜலமாக இருந்தால் இவ்வளவு வெயிலுக்குக் காய்ந்து போயிருக்குமே... அது ஜலமில்லை; பூமி வெடித்திருக்கிறது. பிளவுபட்டிருக்கிறது... அதுதான் நம் கண்ணுக்கு இப்படித் தெரிகிறது... என்று தீர்மானம் பண்ணினார்.

இவர் இப்படியெல்லாம் யோசித்துக் கொண்டிருந்தபோதே எதிர்ப்பக்கத்திலிருந்து ஒருத்தர் அதை மிதித்துக் கொண்டே வந்தார்!

(தொடரும்)

# உயிர்களைத் தேடி

"ரஷ்ஷு! கேளுடா! கோபக்ஸ் என்னை அழித்து விட திட்டம் போட்டிருக்கிறது. கிழே மிஸ்டர் மயனைக் கொன்று விட்டார்களாம். அப்பாவும் ஹவுஸ் அரெஸ்ட்டாம். என்னையும் தீர்த்துக் கட்டச் சொல்லி உத்தரவாம். நீயும் என்னைக் காப்பாற்றப் போவதில்லை" - கால்கள் மடங்கி அப்படியே சரிந்து ஓவென அழ ஆரம்பித்தாள் சூர்யா.

"கோபக்ஸ்! இதெல்லாம் உண்மையா? சூர்யாவை அழித்து விட உன்னிடம் திட்டமிருக்கா?"

"இல்லை. நம்பாதே. பொய் பேசுகிறாள் அல்லது தனிமை பயத்தில் உளறுகிறாள். ஹிஸ்டாரிகல்"

அவள் எழுந்து ஆவேசமாய் ரஷ்ஷுவின் கையைப் பிடித்து இழுத்தாள்.

"வா! கம்ப்யூட்டரை ஆன் பண்ணு. பாஸ்வேர்ட் நான் தருகிறேன். வர்ற செய்தியைப் படிச்சுப் பாரு. உம் தட்டு S.E. RENO. 2200"

"இரு. இரு முதல்ல நீ என்ன பார்த்தேன்னு சொல்லு."

"நாம் பூமிக்கு திரும்பிச் செல்லும்போது தோராயமாய் பதினெட்டு நாட்கள், ஒன்பது மணி, இருபது நிமிட பயணம் முடியும் நொடியில், செவ்வாய்க்கு ஹரிஸான்டல் பேரலாக்ஸ் 32°, 10 நிமிடம், 7 செகன்ட்களில் ஹாலி வால் நட்சத்திரத்தின் பாதை குறுக்கிடுகிறது. அந்த இடத்தில் ஓசைப்படாமல் என்னைத் தூக்கி வெளியே வீசி விட திட்டமிட்டிருக்கிறது. நான் படித்து விட்டேன்" - அவள் சொல்லும்போதே வெடவெடவென்று நடுங்கினாள். அழுகை பொங்கியது.

"அந்தப் பாதையில் மாட்டிக் கொண்டால் எவ்வளவு முயன்றாலும் என்னைக் காப்பாற்ற முடியாது. ஒரு சுற்றுச் சுற்றி வர எழுபத்தியாறு வருஷங்கள். அதற்குள் என் உடல் அந்த சூன்யத்தில் பாடம் செய்யப்பட்டு விடும்."

கோபக்ஸ் எதுவும் பேசாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தது.

"உம்... தட்டு SE-RENO-2200"- அவன் தட்டினான். திரையில் எழுத்துக்கள் பளிச்சிட்டன.

LOGIN INCORRECT - சூர்யா சொன்னதைப் போன்ற ஒரு தகவலும் இல்லை என்று கம்ப்யூட்டர் காட்டியதும் சூர்யா குழப்பமாய்ப் பார்த்தாள்.

"இல்லை... இல்லை. நம்ப மாட்டேன். கோபக்ஸ்! நீ புத்திசாலித்தனமாய் எல்லாவற்றையும் அழித்து விட்டாய் அல்லது பாஸ்வேர்டை மாற்றி விட்டாய். நிச்சயம் என்னை நீ கொன்று விடப் போகிறாய். என் தம்பி அப்போதும் பார்த்துக்கொண்டுதானிருப்பான். கிழே அப்பா, அவரையும் கொன்னுடுவீங்க."

கையால் முகத்தை அறைந்துகொண்டு அழுதாள்.

கோபக்ஸ் அமைதியாய்ச் சொன்னது:

"சூர்யா! உன்னைக் கொல்ல மாட்டேன். ஆனால் உன் செய்கை எங்கள் வேலைக்கு இடையூறு ஆகிறது. பலமுறை சொல்லி விட்டேன். எங்கள் ரகசியத்தை கண்டுபிடிக்க முயற்சி செய்தால் கொன்றுவிட உத்தரவு இருக்கிறது. இது உனக்கு கடைசி எச்சரிக்கை. இத்துடன் நிறுத்திக் கொள். பலமுறை உன்னைக் கவனித்தாகி விட்டது. எங்களை வேவு பார்க்கின்றாய். நான் வெளியே போய் வந்தால் இங்கு எல்லாம் கலைத்துப் போடப் பட்டிருக்கிறது. நேற்றுக் கூட எல்லா இடங்களிலும் எதையோ தேடியிருக்கிறாய். பாசம் என்று சொல்லி ரஷ்ஷுவின் மனதை கலைக்க முயற்சிக்கின்றாய். கவனமாயிரு. அழிந்து விடுவாய்!"

அதற்கப்புறம் ரஷ்ஷு நெடுநேரம்

செய்யாறு தி.தா. நாராயணன்

எதுவும் பேசாமல் ஆழ்ந்த சிந்தனை யிலிருந்தான். சூர்யாவும் எதுவும் பேசத் தோன்றாமல் அமைதியாகத் தலை கவிழ்ந்து உட்கார்ந்திருந்தாள். கோபக்ஸ் அது பாட்டுக்கு மானிட்டரில் எதையோ குறிப்பெடுத்துக் கொண்டு இருந்தது. இடையிடையே ரஷ்ஷுவை கவனித்துக் கொண்டிருந்தது. சற்று நேரம் கழித்து கோபக்ஸ் எதற்காகவோ கீழ் சேம்பருக்கு செல்ல, ரஷ்ஷு உடனே அதை எதிர் பார்த்திருந்தவன் போல அவசர அவசரமாய் ஒரு துண்டு பேப்பரில் சரசரவென்று எழுதி சூர்யாவிடம் காட்டினான்.

"இமேயிருந்து வந்த தகவலை யார் உனக்குச் சொன்னார்கள்? பதிலை சொல்ல வேண்டாம். எழுதிக் காட்டு. பயப்படாதே. கோபக்ஸ் மானிட்டரின் சில இன்பர்மேஷன்களை பூமிக்கு அனுப்ப இமே போயிருக்கிறது. வருவதற்கு பத்து நிமிஷமாவது ஆகும். உம் சொல்லு யார்?"

சூர்யா எழுதினான்.

"தெரியவில்லை. உங்கள் நலம் விரும்பி என்றிருந்தது."

பின்பு எழுத்துமூலமே பேச்சைத் தொடர்ந்தார்கள்.

"கோட் வார்த்தைகளா?"



"எஸ்!"

"என்ன அவசர புத்தி உனக்கு? இமேயிருந்து வந்த செய்தியை இப்படியா கோபக்ஸ் எதிரில் போட்டு உடைப்பாய்? அப்பொழுதே கோபக்ஸ் செய்தியைத் தலைவருக்கு அனுப்பி விட்டிருக்கும். தகவல் சொன்ன உன் நலம் விரும்பியைத் தேடி இந்நேரம் உளவுப் படைகள் பறந்துகொண்டிருக்கும்."

சூர்யா எதுவும் சொல்லத் தோன்றாமல் அவசரப்பட்டு விட்டோமே என்று அந்த நலம் விரும்பிக்காக வருந்தினாள்.

**ம**றுநாள் அதிகாலையிலேயே வழக்கம் போல் ரஷ்ஷு போய் விட்டான். கொஞ்ச நேரம் கழித்து கோபக்ஸும் எதுவும் சொல்லிக் கொள்ளாமல் வெளியேறியது. சே! இவ்வளவு பெரிய செவ்வாய் உலகத்தில் இருப்பது மூன்று பேர் மட்டுமே. அதிலும் ஒன்று யந்திரம். இந்த லட்சணத்தில் ஒருத்தருக்கொருத்தர் தோழமையின்றி தனித் தனியே கூட்டுப் புழுவாய், எல்லாம் ரகசியம்... ரகசியம்... ப்ளடி ரகசியம்! அன்றைக்கு மத்தியானத்திற்கு மேல்தான் கிளம்பத் தீர்மானித்திருந்தாள். தனிமை சலிப்பாயிருந்தது. ஒன்றிரண்டு வார்த்தைகள் இயந்திரத்தனமாய்ப் பேசுவதற்கும் கோபக்ஸ் இல்லை. இப்போதைக்கு வருவதாகவும் தெரியவில்லை. இரண்டு விஷயங்கள் உறுத்திக் கொண்டிருக்கின்றன. ஒன்று இமேயிருந்து வந்த அனாமதேயச் செய்தி. இரண்டு S.E. RENO 2200. இரண்டுமே என் சாவை ஊர்ஜிதப் படுத்துகின்றன. மனத்தில் படபடப்பு வந்தது. ஆனால் இல்லையென்று கோபக்ஸ் மறுக்கிறதே. அதையும் நம்பாமல் இருக்க முடியவில்லை. ரோபோ பொய் பேசாது. பேசத் தெரியாது. ஒருவேளை பொய்யையும் இதற்கு ப்ரோக்ராம் பண்ணியிருக்காங்களோ? பார்ப்போம். ரஷ்ஷு கூட இருந்தால் ஜெயித்து விடுவேன். அவனையும் எவ்வளவு தூரம் நம்பலாம் என்று தெரியவில்லை.

மன உளைச்சல்களை மூட்டை கட்டி வைத்துவிட்டு மினி கம்ப்யூட்டர் முன் உட்கார்ந்தாள். இதில் ஏதாவது தட்டுப் படுகிறதா பார்ப்போம்.

மனம் போன போக்கில் எதையெதையோ தட்டி பதிலைப் பார்த்துக் கொண்டே வர, கம்ப்யூட்டர் திடீரென்று திறந்து வழிவிட்டு, தன் டைரக்டரியில் பதிந்து வைத்திருந்த ரகசியம் ஒன்றைத் துப்பியது.

"இரண்டு ஹைட்ரஜன் குண்டுகளை மார்ஸில் நட வேண்டும்"

அவ்வளவுதான்! வேறு எதுவும் மேற்கொண்டு வரவில்லை! இதற்கு மேல் முழு விவரத்தை சப் டைரக்டரியில் தேட வேண்டும். இதற்கு பாஸ்வேர்ட் எட்டு இலக்க எண்களில்தான் அமைக்கப் படுகிறது. கண்டு பிடிக்க முடியாது. ஓ.கே. எப்படியிருப்பினும் ஹைட்ரஜன் குண்டை இங்கே வெடிக்கப் போகிறார்கள். அதைத்தான் அன்றைக்கொரு நாள் பேசிக்கொண்டிருந்திருக்கிறார்கள். இங்கே எதற்காக? மனசு அடித்துக்கொண்டது.

"பாவிகளே! இப்போதுதான் உருண்டு திரண்டு உயிரினங்கள் வாழக் கூடிய சரியான சூழலுக்கு வந்துகொண்டிருக்கிறது. அதை உடனே பொசுக்கி அழித்து விட்டு இன்னும் ஐம்பது அறுபது வருஷங்களுக்கு உயிர் வாழத் தகுதியற்றதாக இக் கிரகத்தை ஆக்கி விடுவதால் என்ன பயன். இதன் மூலம் எதைச் சாதிக்க விரும்புகின்றீர்கள்?

எழுந்து சென்று வெளிப்புறம் நின்றாள். பசுமை திட்டுத் திட்டாய் கண்களுக்கெட்டிய தூரம் வரை விரிகிறது. வளைந்தோடும் நீரோடைகள், ஸ்...வ்ஸ்...ஸ் என்று வீசியடிக்கும் ஆக்ஸிஜன் மிகுந்த குளிர் காற்று. இந்த ரம்மியமான காட்சிகள் தானாக வந்து விடவில்லை. இருநூறு வருஷங்களுக்கு முன்பே மனிதன் திட்டம் போட்டான். படிப்படியாக ஆக்ஸிஜன் பெருக்கம், கார்பன்டையாக்ஸைடை குறைத்த நைட்ரஜனை நிலைப்படுத்துதல்... சே! மனித சமுதாயத்தின் இத்தனை பாடுகளும் வியர்த்தமாகிப் போக அணுகுண்டா வெடிக்கப் போகிறீர்கள்? என்ன பயன் உங்களுக்கு? உங்கள் நாட்டுக்கு? அப்பா! நீங்களும் இதற்கு உடந்தையா? வெறுப்பாகவும் வேதனையாகவுமிருந்தது. உருவாக்கியவனே அழித்து விடும் அவலம்! கூடாத புத்தி. கூடாது! விடக் கூடாது, விட மாட்டேன். ரஷ்ஷுவிடம் பேச வேண்டும். எடுத்துச் சொல்லி மனத்தை மாற்ற வேண்டும். ஏற்றுக் கொள்வான். இந்த கோபக்ஸ்தான் பிரச்னை. மறுத்து விடும். அப்பாவிடமும் தலைவரிடமும் பேசிப் பார்க்கலாம். ஊஹூம்! ஜெயிக்க முடியாது. எல்லா காரியங்களும் திட்டமிட்டுத் தானே நடக்கிறது? சொன்னால் அலட்சியப்படுத்துவார்கள்.

ஒரு சான்ஸ்! என்னை அழிக்கத் திட்டம் போட்டிருக்கும் தலைவரை இப்போது ஒரு

கை பார்க்கலாம். ஹைட்ரஜன் குண்டு திட்டத்தைக் கேன்ஸல் செய்யவில்லையென்றால் கோபக்ஸை அழித்து விடுவேன் என்று சொல்லி விளையாடிப் பார்க்கலாம். இப்படியே சூர்யா பலவிதமாய் சிந்தனையோட்டங்களுடன் சூன்யத்தில் வெறித்து உட்கார்ந்திருக்க, திரை ஹைட்ரஜன் பாம் விஷயத்தை இன்னும் கூட்டிக் கொண்டிருந்தது. திடீரென்று யாரோ அவனைப் பற்றித் தூக்கினார்கள்.

கோபக்ஸ்!

"கோபக்ஸ்...! கோபக்ஸ்...! நிறுத்து... ஸ்டாப் இட்!" - அவன் உச்ச ஸ்தாயியில் வீறிட்டலற, அது பொருட்படுத்தாமல் அனாயாசமாய் அவனைத் தூக்கி, ஒரு சுற்று சுற்றி நச்சென்று ராக்கெட்டின் பக்கச் சுவரில் அழுத்தமாய் இடிக்க, சுவரின் விளிம்பில் மோதி தலை பிளந்து ரத்தம் பீறிட்டது. ஆ! வென்று ஒற்றைக் கேவலாய் அலறிவிட்டு சூர்யா மயங்கிச் சரிந்தான்.

திரும்பவும் அவனுக்கு விழிப்பு வந்த போது படுக்கையில் கிடத்தப் பட்டிருந்தான். தலை விண் விண் என்று தெறித்தது. தலையைத் தொட்டுப் பார்த்தான். மருந்து வைத்து காயங்கள் சீல் செய்யப் பட்டிருந்தன. நடந்ததை ஒவ்வொன்றாய் நினைவுப் படுத்திப் பார்த்தான். அழுகை வந்தது. கேவலம் என்னைப் போன்ற மனித வர்க்கத்தினரால் உயிரூட்டப்பட்டு, கொஞ்சம் புத்தியையும் வைத்து உருவாக்கி விட்ட ஒரு மெஷின், என்னை அடிப்பது இது இரண்டாவது முறை. எழுந்து உட்கார்ந்து கோபக்ஸை தீர்க்கமாய்ப் பார்த்தான்.

"சூர்யா! இது கடைசி எச்சரிக்கை. எங்கள் சம்பந்தப்பட்ட எந்த ரகசியங்களை நீ கண்டு பிடிக்க முற்பட்டாலும் உன்னை அழித்து விடுவேன். எனக்கு உத்தரவு இருக்கிறது."

"நான் உங்களின் சக பயணிதானே? ஏன் கேட்கக் கூடாது. தெரிந்து கொள்ள எனக்கு உரிமையுண்டு. என்னை அழித்து விடுவது அத்தனை சுலபமில்லை. அப்படிச் செய்தால் இமே உன்னையும், ரஷ்ஷுவையும் சும்மா விட மாட்டார்கள். ஜாக்கிரதை!"

"நம்பிக் கொண்டிருக்காதே! நீ எங்களுடன் வந்த அதிகாரபூர்வமான சக பயணி அல்ல. தெரியாமல் வந்துவிட்ட அகதி போல. எஸ்! மிஸ்டர் தாமு அப்படித்தான் சொல்லியிருக்கிறார். ஒரு அகதிக்கு உள்ள உரிமைகள் மட்டுமே உனக்கு உண்டு. எங்களுடன் இருக்கலாம். ஏன்? என்று கேட்க அனுமதியில்லை. எங்கள் வேலையில் தலையிடாதே."

"ஓ.கே! தலையிடவில்லை. ஒன்றை மட்டும் உண்மையாய்ச் சொல்லி விடு. ஏன் இங்கே ஹைட்ரஜன் பாமை வெடிக்கப் போகிறீர்கள்? வேண்டாம். இருநூறு வருஷங்களாக மனிதன் வளர்த்து விட்ட சுற்றுச் சூழலைக் கொண்டிருக்கும் கிரகம் இது. நொடியில் இந்தச் சூழலை அழித்து விடாதீர்கள். ப்ளீஸ்!"

அது மௌனமாயிருக்க, அவனுக்குச் சற்று நம்பிக்கை வந்தது.

"கோபக்ஸ்! ரஷ்ஷுவுக்கு நான் சொல்லுகிறேன். ஏற்றுக் கொள்வான்."

"சாரி! முடியாது. வேறு உத்தரவுகளை என் மேல் திணிக்க முடியாது மற்றவர்களால்."

"கடைசியாய்க் கேட்கிறேன். உன்னால் முடியாது என்றால் என்னுடன் ஒத்துழை! உன் மைக்ரோ ப்ரோக்ராமை திருத்தி விடுகிறேன்."



''மேரேஜ் முடிந்து கரெக்டா 30நாள்ல உங்க கணவரை டைவர்ஸ் பண்ணிட்டீங்களே...?''

''மேரேஜ் முடிந்த கையோடு நான் வெளிநாடு போயிட்டேன்... அதனாலதான் கொஞ்சம் லேட் ஆயிடிச்சு!''

— சீர்காழி ரேவதி

அது வேகமாய் கண்களை மூடி மூடித் திறந்துவிட்டு "இம்பாஸிபிள்" - என்றது.

சூர்யா விரைவாய் கையைத் தூக்கி கோபக்ஸின் காதின் அடிப்பகுதியைத் தடவினான். அது சடக்கென்று சற்று நகர்ந்து அவன் கையைத் தட்டி விட்டது.

"தெரியும் சூர்யா! நீ தேடுவது என்னுடைய பவர் இன்புட் ஸ்விட்ச்தானே? அவ்வளவு வெளிப்படையாக எந்த இணைப்புகளும் என்னிடமில்லை. உன்னால் அதைக் கண்டுபிடிக்க முடியாது. சொல்லிவிட்டு இன்னும் சற்று பின்னால் நகர்ந்து, அவனையே பார்த்துக் கொண்டு நின்றது. சூர்யா களைப்பு மேலிட படுக்கையில் சாய்ந்தான். மனம் மட்டும் ஓயாமல் கோபக்ஸை ஒழித்து

## இன்னொரு பாசமலராம்!

இந்தப் பெண் முகத்தைச் சிலருக்குத் தியேட்டரில் பார்த்தது போலவும், பலருக்கு சன் டி.வியில் பார்த்தது போலவும் தோன்றினால் தவறல்ல.

'சங்கமம்' விந்தியாதான். தமிழ் சினிமாவின் செண்டிமெண்ட்களை மீறித் தமது இரண்டாவது படத்தை ('கண்ணுக்குக் கண்ணாக') ஹென்றியிடம் பெற்றிருக்கிறார்.

ஒரு விசேஷம். இந்தப் படத்தில் தேவயானி, முரளிக்குத் தங்கையாக நடிக்கிறார். ஜோடி இவர்தான்.

இன்னொரு பாசமலர் என்கிறார்கள். பீம்சிங் எத்தனை செளகரியம் செய்து வைத்து விட்டுப் போயிருக்கிறார்!



விடு. ஒழிந்து விடு என்று கூக்குரல் போட்டுக் கொண்டிருந்தது. ஆமாம் இன்னும் சில தினங்களுக்குள் இதை அழித்தேயாக வேண்டும். ஐயோ இழே அப்பாவின் நிலை என்னவாயிற்றோ? விசாரிப்பதில் எந்தப் பலனுமில்லை. செய்திகள் சென்ஸார் செய்யப்பட்டுத் தானே வருகின்றன.

கோபக்ஸை ஒழித்து விடுவது என்று தீர்மானித்த பிறகு எப்படியென்று மனமனவென்று திட்டங்களை யோசிக்க ஆரம்பித்தான். ஒரு வாரம் வரை அதன் செயல்களைக் கவனித்தான். அறுபது சதவீதங்களுக்கு ரிஃப்ளெக்ஸ், கொஞ்சம் அனலைஸிங், இன்னும் கொஞ்சம் அதன் மின்னணு ஓட்டங்களைச் சரி பார்த்துக் கொண்டிருக்கும் அட்டானமஸ் சிஸ்டம். ஓ.கே. இதை லேசர் மூலம் வீழ்த்த வேண்டியதில்லை. என் மூளைக்கு வேலை. இரண்டு சங்கேத வார்த்தைகள் மூலம் ஒரு ஐந்து நிமிடம் அதைப் படுக்க வைத்து விடுவேன்.

மறுநான் மதியம் ஒரு மணியிருக்கும். எஸ்.ஈ. நின்ற ஹெல்லாஸ் படுகையின் மலைப் பிளவிலிருந்து எண்பதாவது கிலோ மீட்டரில் ஒரு பெரிய பள்ளத் தாக்கிலிருந்தான். இதுவரை எந்த உயிரினங்களும் கண்களில் படவில்லை. எதுவுமில்லையென்று சொன்னால் இருவருமே மறுக்கிறார்கள். எங்காவது ஒளிந்திருக்கலாம். நம்மை விட புத்திசாலித்தனம் குறைவாயிருக்கலாம் என்று கதை பண்ணிக் கொண்டிருக்கின்றார்கள். கண்களுக்கெட்டிய தூரம் பச்சைப் பசேல் என்று படர்ந்திருந்த அந்தச் சம வெளியை ரசித்தான். நடுவில் புதிதாய் வந்து முளைத்தாற் போல ஒரு சிறிய குன்று. தூரத்திலிருந்து பார்க்கையில் பச்சை வெல்வெட் விரிப்பில் ஒரு யானை நிற்பதைப் போல கருமையாய் மழுமழுவென்று அழகாய்த் தெரிந்தது. சற்று நகர்ந்தான். பளீரென்று சூரிய ஒளி. கண்கள் கூசியது. குன்றிலிருந்து தான் இந்த ஒளி வருகிறது. எதன் மீதோ பட்டு பிரதிபலிக்கிறது. என்னவாயிருக்கும்? கிட்டே சென்றான். பாறையின் அடுக்குகளில் வரிவரியாய் மஞ்சள் கோடுகள். தன் பையிலிருந்த கத்தியலால் தட்டினான். பாறை விரிசல் விட்டு, ஒரு கட்டை விரல் கனத்திற்கு உலோகம் மஞ்சன் டாலடித்தது. பரபரப்படைந்தான். கிட்பாக்ஸிலிருந்த பாட்டில் திராவகத்தில் சில சொட்டுக்களை அதன் மீது விட்டு சோதிக்க... அதுவேதான்! மனசு கொள்ளாத சந்தோஷம். பாறைகளில் வரி வரியாய்த் தங்கம்!

இதைச் சொன்னால் பூமியில் யாரும் ஒத்துக் கொள்ள மாட்டார்கள். வழக்கம் போல அப்பா இம்பாஸிபிள் என்று நக்கல் சிரிப்பைக் காட்டுவார். பிக்பேங் தியரிப்படி எல்லாக் கோள்களும் இந்தப் பிரபஞ்சத்தின் பெரிய வெடித்தலின் சிதறல்கள்தானே? பூமியின் அம்சங்கள் ஒவ்வொன்றும் இங்குமிருக்கலாம்தானே? ஆனால், சுலபத்தில் ஒத்துக் கொள்ள மாட்டார்கள். காரண காரியம் வேண்டும். எப்படியென்று நானூறு பக்கங்களுக்கு தீஸிஸ் எழுத வேண்டும். தட்டியெடுத்த தங்கக் கட்டி ஒன்றை மாதிரிக்கு எடுத்துக்கொண்டு அவன் ராக்கெட்டிற்கு திரும்பியபோது, அங்கே ஒரு பேரிடி காத்திருந்தது. மீள முடியாத கருங்குழியில் சிக்கிக் கொண்டது போல. ரஷ்ஷுவும் கோபக்ஸும் இவனுக்காக காத்துக் கொண்டிருந்தார்கள். ரஷ்ஷு முகத்தில் கலவரம் அப்பட்டமாய்த் தெரிந்தது.

"ரஷ்ஷு...?"

(தொடரும்)




## வட்டமேஜை

✉ "சூறாவளி கொடுமை; சுரண்டல் பெருங்கொடுமை"- தலையங்கம் படித்தோம். இலஞ்சம், ஊழல், சுரண்டல் போன்ற இதையெல்லாம் இந்தியாவிலிருந்து அழிக்க முடியாது என்று திட்ட வட்டமாகத் தெரிந்து விட்டது. இந்த விஷயத்தில் குறைந்த பட்சக் கொள்கையையாவது கடைப்பிடித்தால் அதாவது புயல், வெள்ளம், பூகம்பம் போன்ற இயற்கைச் சீற்றம் மக்களின் வாழ்க்கையில் விளையாடும் பொழுதாவது மட்டும் அரசியல்வாதிகளும், அரசு அதிகாரிகளும் கொஞ்சம் நேர்மையாக நடந்து கொள்வது என்று தீர்மானித்தால், பாதிக்கப்பட்ட மக்கள் ஓரளவாவது நிவாரணம் பெறுவார்கள்.
திருச்சுழி, எஸ். அழகேசன்.

✉ இவ் வார கார்ட்டூன்கள் அருமை. காஷ்மீர் விவகாரத்தைப் பற்றிய கார்ட்டூன் அசத்தல்.
மன்னார்குடி,
ஆர். ஞானபிரகாசம்.

✉ குழந்தைத் தொழிலாளர்களைக் காப்பாற்றியே தீருவோம் என்று எவ்வளவோ அரசியல்வாதிகள் வெற்றுப் பேச்சு பேசிக் கொண்டிருக்க, அமைதியான முறையில் ஆர்ப்பாட்டமில்லாமல் அலோஷியஸ் அவர்கள் குழந்தைத் தொழிலாளர்களுக்காகச் செய்து வரும் பணி மகத்தானது.
சென்னை - 59,
ரோஸாரியோ ரவிசந்திரன்.

✉ மக்களிடையே, உடலுறுப்புகள் தானம் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்துகிற உன்னதமான பணியை மேற்கொண்டிருக்கும் டாக்டர் சுமனா பெரிதும் பாராட்டிற்குரியவர். இது போன்ற பயனுள்ள விஷயங்களை வெளிச்சத்திற்குக் கொண்டு வரும் 'கல்கி'க்கு எமது பாராட்டுக்கள்!
போடிநாயக்கனூர்,
எம். பாலசுப்ரமணியன்.

✉ பொதுவாக டாக்டர்கள் அனைவருமே மக்களிடம் கண் தானம், இரத்த தானம் போன்ற தானங்களைக் கூறி அது பற்றிய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவது அவர்களின் கடமை. இப்பொழுது பொதுவாக எந்த டாக்டரும் அது மாதிரி செயல்படுவதில்லை. அப்படியிருக்கையில், தம் டாக்டர் பணியை விட்டு விட்டு மக்களுக்கு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு செயல்படும் டாக்டர் சுமனா உண்மையிலேயே வித்தியாசமான டாக்டர் தான்.
திருச்சி - 18, அம்மனூர் என். சாம்பமூர்த்தி.

✉ தெய்வ தரிசனம் பகுதியில் கண்டுள்ள 'திங்களூர்' பற்றிய விஷயங்கள் ஆத்ம திருப்தியை ஏற்படுத்தி விட்டன.
விழுப்புரம் - 2, வை. வெங்கடேசன்.

✉ 'மருந்தே இல்லாமல் ஒரு மருத்துவமனை!' 'வரும் முன் காக்க, வந்தபின் வாழ!' ஆகிய இரு கட்டுரைகளுமே ஆரோக்கியத்தின் திறவுகோலாக இருந்து என்றும் மகிழ்வைத் தரும் வகையில் அமைந்திருந்தன!
பெத்தானியாபுரம், வி.பி. காந்திமதி.

✉ விசுவநாதனின் தமிழ்ப் பற்றும் தமிழ்த் தொண்டும் 'வாழிய வாழிய! பல்லாண்டு வாழிய!' என்று பாடத் தோன்றியது. தமிழ் மீது அவருக்கு இத்தனை காதலா என மூக்கில் விரல் வைத்து வியந்தேன்.
திருவண்ணாமலை, அருளானந்தம்.

✉ துன்ப காலங்களிலேயே உறவுகளின் உண்மையான முகங்கள் வெளிப்படுகிறது என்ற கருத்தை உணர்த்திய ஆரூர் சேகரின் 'நேசத்தைத் தேடுகிறேன்' கவிதை நெஞ்சைத் தொட்டது.
பூனாம்பாளையம், ஆர்.பி. ஜெயச்சந்திரன்.

✉ வித்தியாசமான விக வீட்டு திருமணம்' வியக்க வைத்தது. காப்பிக்காக சம்பந்திகள் சண்டை போடுகிற காலத்தில் சத்தமில்லாமல் ஒரு சமூகப் பணி செய்துள்ளார். இது எல்லோரும் சிந்திக்கவும் பின்பற்றவும் வேண்டிய ஒன்று.
சித்தோடு, டி. சந்திரன்.

✉ த.மா.கா தலைவரை ஜெ. பார்த்ததன் நோக்கம் என்றதன் பதிலைப் பார்த்தாவது ஜெ. தமது தவறை உணர்வாரா?
அம்பத்தூர், எஸ். குமரசாமி.

## பாதுகாப்பு வளையங்கள்

சீச்சி... கோல்கேட் சமாசாரமல்ல... அது முப்பத்திரண்டிற்கு (அவ்வளவு பல் இருந்தால்) ஒன்று என்ற விகிதத்தில் செயல்படும் வளையம்; இது ஒன்றுக்கு முப்பத்திரண்டாக வழங்கப்பட்டிருக்கும் வளையம் - செக்யூரிட்டி கவர்! 4500 போலீஸ் கான்ஸ்டபிள்கள், சப்-இன்ஸ்பெக்டர்கள், இன்ஸ்பெக்டர்கள் போன்றோருக்கு. 'வி.ஐ.பி.'க்களைப் பாதுகாப்பதே பெரிய தொல்லையாயிருக்கிறது. அரசியல்வாதிகள், சினிமாக்காரர்கள், பிஸினஸ்மென், பத்திரிகையாளர்கள், டாக்டர்கள்... இத்தனை ஏன்... கிரிமினல்களுக்கும் பாதுகாப்பு வழங்குவதிலேயே காவல் துறையின் பாதி சக்தி விரயமாகப் படுகிறது! கார் திருடி அரசியல்வாதிகளுக்கு விற்றவன், அரசியல்வாதிகளைக் கொன்றவன், குண்டு வெடிப்பு அப்ரூவர்களைத் தீர்த்துக் கட்டியவன் ஆகியோருக்கும் பாதுகாப்பு வழங்கப்பட்டிருக்கிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்! கொதித்துப் போய் விட்டார் சகன் பூஜ்பல்! ஹோம் மினிஸ்டராயிற்றே? "பாதுகாப்பு" விவரங்களைப் பட்டியலிட்டுத் தரச் சொல்லி விட்டார். Z; Z ப்ளஸ் பாதுகாப்பு 'அனாவசியமாக' சிலருக்குப் போவது அவர் கண்களை உறுத்தாதா என்ன? அட... தாக்கரேவின் மீது அவருக்கு எந்த காழ்ப்புணர்ச்சியுமில்லை! மிஞ்சி மிஞ்சிப் போனால் அவரது மகன் உதவ்வுக்கும் மருமகன் ராஜ்ஜுக்கும் வழங்கப்பட்டிருக்கும் ஜீப் நிரம்பிய காவற்படையினரை, வேறு உபயோகமான வேலையில் அமர்த்துவாராக இருக்கும்!

## பெரியோரைப் பேணுவோம்

மும்பை நீதிமன்றங்களில் இனி, 65 வயதுக்கு மேற்பட்டவர்களின் வழக்குகளுக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டு, அவை சீக்கிரம் பைசல் செய்யப்பட்டு விடுமாம். 'நீ சும்மா கிட' என ஒதுக்கப்பட்டிருக்கும் பெரிசுகளுக்கு இனி நல்ல காலம்தான். அவர்களை முன்னிறுத்தி சர்ச்சைகளையும் தகராறுகளையும் துவங்கினால், விரைவில் நீதி கிடைக்க வாய்ப்பிருக்கிறதே!

## மைத்துனி டிராமா!

அண்மையில், அந்தேரியில் 'விகாஸ் டவர்' கட்டடத்தில், தமது பத்தாவது மாடி ஃப்ளாட்டில் ஜிக்னேஷ் சோலங்கி என்பவரை, ஒரு தங்கச் சங்கிலி, இரண்டு மோதிரம், வாட்ச், 45,000 ரூபாய் பணத்துக்காக சிலர் கொலை செய்த



• பிடிபட்ட கொலைஞிகள்...



• வெற்றி பெற்ற கடிகார மாடல்

# மறக்க முடியாத மாடல்!

செய்தியை மும்பைக்காரர்கள் நூறோடு நூற்றி ஒன்றாக எடுத்துக் கொண்டதில் ஆச்சரியம் எதுவுமில்லை. கொலையாளிகள் நால்வரும் பிடிபட்டனர் என்ற செய்தியைக் கண்டுதான் திடுக்கிட்டனர். நால்வரில்



• டிவிங்கிள், ரிங்கி கன்னா

இருவர் பெண்கள்! சஞ்சு, பூஜா, இருவருமே இளைஞிகள். முன்பு சோலங்கியிடம் வேலையிலிருந்த சஞ்சு, கீழேயுள்ள 'செக்யூரிட்டி'யிடம் தன்னை, சோலங்கியின் மைத்துனி 'மாதுரி' என அறிமுகப்படுத்திக் கொண்டிருக்கிறார். அவரும், சோலங்கிக்கு தொலைபேசி, "உங்கள் மைத்துனி மாதுரியாம்; அனுப்பலாமா?" என வினவியிருக்கிறார். சோலங்கி, 'ஓகே' சொல்லிவிட்டு, வாயிற்கதவையும் திறந்து வைத்திருக்கிறார், மாதுரியை வரவேற்க. உள்ளே நுழைந்த பெண்களிருவரும் அவர் காலை கெட்டியாகப் பிடித்துக் கொள்ள, மற்றவர்கள் குரலை நெறித்திருக்கிறார்கள்! சஞ்சு ஏற்கெனவே ஒரு வைர வியாபாரியின் குடும்பத்தையும் இதே முறையில் தீர்த்துக் கட்டியிருக்கிறாராம்!

## உருக்கமான கொண்டாட்டம்

தீபாவளியைத் தொடர்ந்த கொண்டாட்டங்களில் டிம்பிள் கபாடியாவும், அவரது பெண்கள் ட்விங்கிள் கன்னா, ரிங்கி கன்னாவும் உருகி வழிந்தார்கள் – விற்றது மெழுகுவர்த்திகளை ஆயிற்றே? "Faraway Tree" என்ற பெயரில் இவர்கள் ஆரம்பித்திருக்கும் மெழுகுவர்த்தி பிஸினஸில் குடும்பமே படு பிஸியாகி விட்டது. விதவிதமான வடிவங்கள், நிறங்களில் பிரத்யேக மெழுகுவர்த்திகள் செய்வது நல்ல பசையான பொழுதுபோக்காகி விட்டது இவர்களுக்கு; 'உங்கள் கையெழுத்திட்ட மெழுகுவர்த்தி கிடைக்குமோ?' என சிலர் இவர்களிடம் கேட்கிறார்களாம். திவாலாகும் ஆசை வந்து விட்டது போலும்!

## 'ஆடா'த ஆட்டம்!

எம்.டீ.விக்காரர்களுக்கு ஆனாலும் ரொம்ப குசும்பு! இவர்களிடம் ஏமாறாதவர்களே இருக்க மாட்டார்கள் – அண்மையில் ஒரு பொய்யான 'கிட்நாப்பிங்'கை, உண்மை என்று நம்பி, போலீசே ஏமாந்து விட்டனராம்! தீபாவளியை முன்னிட்டு, பத்திரிகையாளர்களுக்கெல்லாம் ஒரு திருமண அழைப்பிதழ் அனுப்பியிருந்தார்கள் – சைரஸும், நஃபீஸாவும் (MTV - VJ's) மணமுடிக்க இருக்கும் தேதி, நேரம், இடம், விருந்தினர்களுக்கான ட்ரெஸ்கோட் என படு அமர்க்களமாயிருந்தது; அடுத்த பக்கத்தில் "எம்.டீ.வி. பக்ரா' (ஏப்ரல் முட்டாள் போல் எம்.டீ.வி. முட்டாள்!) ஆனதற்கு வாழ்த்துக்கள்" என்றிருந்தது! கூடவே தீபாவளி, புது வருட வாழ்த்துக்கள்!

## ம'ர'க்க முடியவில்லை!

மாதேரானிலுள்ள (மும்பைக்கருகிலுள்ள மலைவாசஸ்தலம்) மரங்களைப் பாதுகாக்க யார் யாரோ என்னென்னவோ செய்கிறார்கள். ஆனால் 'க்ரியேட்டிவிடி – 29' (யு.எஸ்.ஏ.) விழாவில் தங்கத்தை தட்டிச் சென்ற, உதய்பார்கரின் யுக்தி அலாதியானது. வனப்பாதுகாப்பை வலியுறுத்தும் இந்த விழாவில், 41 நாடுகள் பங்குபெற்றன. "மாதேரான் பசாவ் சமிதி"யைச் சார்ந்த உதய், மரத்தாலான ஒரு கடிகாரத்தை வடிவமைத்திருந்தார். கடிகாரத்தின் இரண்டு கைகளுடன், மூன்றாவதாக ஒரு மரம் வெட்டும் அரிவாளை இணைத்து, "காலம் கடப்பதற்குள் கானகத்தைக் காப்போம்" என கச்சிதமான வரிகளை இடைச் செருகியிருந்தார். வழி'காட்டு'ம் இளைஞர்!

— ஜெயஸ்ரீ ராஜ்

# முதல் மழைத் துளி

**பிரபஞ்சன்**

சந்தியா பாரதியை நெருங்கி உட்கார்ந்து கொண்டு, "அம்மா, உங்ககிட்ட ஒன்னு சொல்லணுமே" என்றாள். "சொல்லேன்" என்றாள் பாரதி.

அவர்கள் வாசலில் அமர்ந்திருந்தார்கள். அப்பா இன்னும் டியூஷனில் இருந்து திரும்பியிருக்கவில்லை. தூணில் சாய்ந்து கொண்டு, தேய்பிறையின் மங்கல் வெளிச்சத்தில், ஆகாயத்தின் விசித்திரத்தைக் கவனித்துக் கொண்டிருந்தாள். சின்ன வயசில், அவளுக்குச் சந்திரன் மேல் பாவம் பாவமாய் இருக்கும். அப்போதுதான் கர்ணன் கதையை அப்பா சொல்லிக் கேட்டிருந்தாள். நிலா ஏன் தேய்ந்து கொண்டே போகிறது. அது கொடுத்துக் கொண்டே இருக்கிறது. அதனால். கர்ணனுக்குச் சிவந்த கரம் வந்தது போல, அதுக்குத் தேய்மானம் வந்து விடுகிறது. சரி. அது எதனால் மீண்டும் நிரம்புகிறதாம்? அப்பாவையே ஒருநாள் கேட்டாள். அப்பா, நெற்றி உயரச் சிரித்தார். குழந்தைகள் மனசில்தான் எத்தனை விதமான எண்ணங்கள் பொங்குகின்றன?

'கொடுத்துகிட்டே இருக்கிறது, நிலா. அதனால தேஞ்சு போயிடறது. கடவுள் பார்த்து, ஐயோ பாவம்னு நினைச்சு, அதை நிரப்பி விடறாரு...' என்றார், அப்பா.

"என்னம்மா, உனக்குள்ள சிரிச்சுக்கிறே?" என்றாள் சந்தியா.

"ஏதோ கேட்டயே, என்னடி?"

"வீடியோ கேம் விளையாடிட்டு இருக்காங்க. கோபுவும், கோமளாவும். அது என்ன விலை ஆகும்?"

"விலையைப் பற்றி என்ன? உனக்கு வேணுமா?"

"ரொம்ப 'காஸ்ட்லி'ன்னு சொல்றாங்களே?"

பாரதி மகளைப் பார்த்தாள். மனம் சுருங்கியது. குழந்தை ஆசைக்கு ஏன் விலை வைக்கிறான்?

"அதனால என்ன? வாங்கித் தர்றேன்."

"வேணாம்மா."

"ஏன்டி!"

"அப்பா கோவிச்சுக்குவாங்க. நீ பாவம்."

"அதெல்லாம் மாட்டார். குழந்தைக்குப் பண்றதுக்கு என்ன கோபம்?"

"இல்லை, வேணாம். நீ சும்மா சொல்றே, என்னால உனக்குக் கஷ்டம்." சந்தியா எழுந்து போனாள். போய்ப் படுக்கையில் படுத்துக் கொண்டாள். தனியாக விடப்பட்டாள் பாரதி. விமலானந்த யோகி சொன்னது நினைவுக்கு வந்து உதவியது.

'அழகான, புதுசாக வாங்கின பட்டுத் துணியைக் கசக்க மனம் வருமா? இறைவனுக்குச் சாத்த என்று பறித்த பூவைக் கிள்ளித் தரையில் போட மனம் வருமா? மனமும் கூட



அது போலத்தான். அது எப்போதும் புத்தம் புதுசாக இருக்கிற அற்புத அமுதசுரபி. அமுத சுரபியில், விஷமா கேட்பீர்கள்? உங்களுக்கு வேண்டிய அமுதுகளை அல்லவா கேட்பீர்கள்? பின் எதற்கு, மனதைக் கசக்குகிறீர்கள். எப்போதும் சுத்தமான, கழுவிக் கவிழ்த்தபடி மனசை வைத்திருங்கள்.'

இதைத்தான் யோகம் என்பார்களோ? எப்போதும் புதுப் புத்தகம்போல, புதுத் துணிபோல, மனசை



வைத்துக் கொள்ள முடியுமா? அதற்குச் சும்மா அல்லவா இருக்க வேண்டியிருக்கிறது. சும்மாயிருக்க முடியுமா? ஒருகணம், கணத்தை நூறு, ஆயிரம் துண்டுகளாக்கி, அதில் ஒன்றின் அளவுக்கேனும் மனசைச் சும்மா வைத்துக் கொள்ள முடிகிறதா? எத்தனை குரங்குகளின் கூத்து

ஆரம்பமாகிவிடுகிறது?

அந்தத் தொடக்க நாட்களில் அவர்கள் உறவினர் வீட்டு விருந்துகளுக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். அப்படித்தான் அந்தக் கடற்கரை ஊருக்குப் போயிருந்தார்கள். ஒரு மகானின் சந்நிதி அங்கு இருந்தது. அவரது அடக்கத் தலம். மகான்களின் அடக்கத் தலம், சந்நிதி ஆகி விடுகிறது. அவர்கள் சந்நிதி முன் நின்றார்கள். பாரதி, கண்களையும், மற்ற புலன்களையும் மூடிக் கொண்டு, மனதுக்குள், 'எந்தரோ மகானுபாவுலு... அந்தரிகி வந்தனுமு' என்று வார்த்தைகளைப் புஷ்பங்களாக்கி, நமஸ்கரித்துக் கொண்டிருந்தாள். கனகராஜ், அவளை லேசாக இடித்தான். 'என்ன' என்றாள் அவள்.

"இத்தனை புஷ்பங்கள், சமாதிமேல் தேவைதானா?" என்று அவனிடம் கேட்டான். உண்மையில் இது மலர்களின் பிரச்னை-மலர்கள், நிச்சயம், அவரது சமாதியை அலங்கரிப்பதில் சந்தோஷப்பட்டிருக்கும். அந்தச் சந்நிதி, மலர்களாலும் மரியாதை செய்யப்பட்டு, தங்களுக்கு அவை மரியாதை தேடிக் கொண்டதை அவள் கண்டாள். அற்புதமான, சிவப்பு, மஞ்சள், வெள்ளை, மஞ்சள் என்று பல வண்ணங்களால், வட்ட வடிவமாகவும், நட்சத்திர வடிவாகவும் அலங்காரம் செய்யப்பட்டிருந்தது அது. சமாதியை ஒட்டி, ஒரு அழகிய நந்தவனமும் உருவாக்கப்பட்டிருந்தது. விதவிதமான பல நாட்டு மலர்களாலும் ஒரு விந்தை, தோட்டம் என்கிற பெயரில் உருவாக்கப்பட்டிருந்தது.

அவன் கேட்ட கேள்வி, அப்படியே அந்தரங்கத்தில் தொங்கிக் கொண்டிருந்தது.

"ஏன், அலங்காரம் பண்ணினால் என்ன? மகான்களுக்கு மனிதர்கள் செய்கிற மரியாதை."

"இல்லை. மனித உழைப்பு வீண். தவிரவும், மண்ணின் சத்தை இப்படி அழகு என்ற பெயரால் உறிஞ்சக் கூடாது."

"மண்ணின் சத்து, மனிதரின் சத்துக்குத் தானே. அதே போல மனிதர்களின் சத்து, மண்ணுக்கும்தானே."

அவர்கள், வெளியே வரும்போது கடல், அவர்களைக் கூப்பிட்டது. மிகவும் பக்கத்தில் இருந்தது, கடல். கடற்கரை மண்ணின் மேல் அவர்கள் அமர்ந்தார்கள். அவனை அறியாமல், அவள் தனக்கு மட்டும் பாடிக் கொள்பவள் போல, முனகினாள்.

'கள்ளம் புகுந்ததடி – மனதில்
கண்ணன் என்னும் காலச் சுழல் செய்யும்
கள்ளம் புகுந்ததடி....'

"ஆமாம், பாரதி. பாட்டில் எப்போதும் ராமா, கிருஷ்ணா, கண்ணா என்றே ஏன் பாட்டுக் கட்டுகிறீர்கள். இன்றைய வாழ்க்கைக்கு உதவும்படி அறிவியல் தொழில் நுட்பத்தை ஏன் பாட்டாக்கவில்லை, யாரும்?"

பாரதி சிரித்தாள். எத்தனை சந்தேகங்கள், எத்தனை புரியாததுகள்.

"ஏன் பாடினால் என்ன? இசை, லௌகிக வாழ்க்கைக்கும் விஷயம் கொடுக்கலாம். கொடுக்கவும் வேணும். ஆனால், மனிதப் பிறவியைப் பெரியவர்கள் இரண்டு பக்கமாகப் பார்த்தார்கள். ஒருபக்கம், அவனது லௌகிகப் பக்கம். மற்றது, அவனது ஆன்மீகப் பக்கம். பெரியவர்கள், உடம்பை அல்ல, மனசுக்கே முக்கியத்துவம் தருகிறார்கள். அவர்கள் மனசைக் கட்டி எழுப்பும் என்ஜினீயர்கள்..."

அவனுக்கு பாட்டு என்பது, ஓவியம் என்பது, கதை என்பது எல்லாம் தேவையில்லாத சமாச்சாரங்களாக இருந்தன. அவற்றை அவன் வெறுக்கிறான் என்று இல்லை. வெறுப்பதற்கு அவற்றைப் புரிந்திருக்க வேண்டுமே! அவன் பௌதிகமான மனிதனாக இருந்தான். வெளி உலகவாசி. கோழி எதனால் வளர்க்க வேண்டும் என்பது அவனுக்குத் தெரியும். அது முட்டை போடும். முட்டையின் விலை அவனுக்குப் புரிகிறது. பாட்டுப் பாடினால் என்ன வரும். சங்கீதம் முட்டை போடுவது இல்லை.

அப்பா அடிக்கடி சொல்வார்.

"இரண்டு உலகங்கள் இருக்கம்மா. ஒண்ணு பணத்துக்கு, புகழுக்கு, படாடோபங்களுக்கு அலைகிற உலகம். மற்றது, ஞானத்தை, சீலத்தை, மேன்மையைத் தேடி அலைகிற உலகம். அது இதை மட்டம் என்று சொல்லும். இது அதைப் பெரிய விஷயம் இல்லை என்கும். இருவும் இருந்து, தெளிவும் இருக்கிறது சிலாக்கியம். அது பெரும்பாலும் லபிக்கிறது இல்லை..."

அரவிந்தன், லாண்டரிக்குச் சென்று அழுக்கைப் போட்டுவிட்டு, புதுத் துணிகளை வாங்கிப் பின்னால் வைத்துக் கொண்டு புறப்பட்டான். தெப்பக்குளம் வந்தபோது, அவனுக்கு அங்கு மட்டும் விற்கிற, உலர்ந்த திராட்சைப் பழங்களின் ஞாபகம் வந்தது. திராட்சை, முந்திரி, தேங்காய்க் கீற்று எல்லாம் கலந்த கலவை. அவனுக்கு மிகவும் பிடிக்கும். கடையில், நான்கு பாக்கெட்டுகள் வாங்கினான். அருகில்தான் பாரதி சொன்ன அவள் வீடு இருந்தது. ஒரு

எட்டு போய்ப் பார்த்துவிட்டு வந்து விட லாம் என்று தோன்றவே, புறப்பட்டான்.

வீட்டு வாசலில், சந்தியா விளையாடிக் கொண்டிருந்தாள். அவளிடம், ''பாரதி மேடம் வீடு இதுதானே'' என்றான்.

தன் அம்மாவின் பெயரை இப்படி வித்தியாசம் தோன்றச் சொல்லிக் கொண்டு ஒருவன் வருவது அவளுக்கு வேடிக்கையாக இருந்தது.

"இதான்."

"சரி" என்றபடி அவன் இறங்கி, வீட்டுக் கதவைத் தட்டினான். பாரதி, ஒட்டடைக் குச்சியுடன் வந்தாள். இவனைக் கண்டதும், வியந்தாள். அவசரமாகக் குச்சியைச் சுவர் ஓரம் சாத்தி வைத்தாள்.

"வாங்க அரவிந்தன்" என்றாள். "ஏய் சந்தியா, இங்க வா... இது அரவிந்தன் மாமா. இவ என் மகள்" என்று பரஸ்பரம் அறிமுகம் செய்து வைத்தாள்.

சூழ்நிலையின் ஒவ்வாமையை உணர்ந்து, அரவிந்தன் மன்னிப்புக் கேட்டான்.

"ஏதோ, பார்க்க வேண்டும் போல் தோன்றியது. வந்தேன். மன்னிக்கணும். சூழ்நிலை சரியில்லை போல இருக்கிறதே?"

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. உட்காருங்கள்" என்றபடி, ஒரு நாற்காலியைக் காட்டினாள். அவன் அமர்ந்தான்.

"நேற்று ராத்திரி கூட, உங்கள் கேசட்டைப் போட்டுக் கேட்டேன். ரொம்ப நன்றாக அனுபவித்தேன். முக்கியமாக..."

"சொல்லுங்கள்" என்றபடி, தன் தலையில் படிந்திருந்த ஒட்டடையை எடுத்துக் கொண்டு நின்றாள், பாரதி.

''யாரோ சிலர் யாரோ... என்ன பேரோன்னு பாடினீங்களே... அது- இப்போ கூட நமக்குப் பொருந்தும். எங்கள் பிளாட்டில், பக்கத்து, எதிர்வீட்டு வீடுகளில் யார் இருக்கிறார்கள் என்பதே எங்களுக்குத் தெரியாது. கவிராயர் பாட்டு எவ்வளவு பொருந்துகிறது என்பதைப் பாருங்கள்..."

பாரதி சிரித்தாள்.

"குழந்தைக்கு என்ன பெயர்?"

"சந்தியா."

அவள் அவன் முன் அமர்ந்தாள்.

"அழகான பெயர்."

"சந்திக்கு உரியவள். காலையும் மாலையும் சந்திக்கிற மாதிரி, ஒரு புதுயுகம் சந்திக்கிற வேளையில் பிறந்த மனுஷின்னு, இந்தப் பேரை வச்சேன்."

''புரிகிறது. நீங்கள் எந்த யுகத்தைச் சேர்ந்தவர்?''

பாரதி யோசித்துச் சொன்னாள்.



''ஒரே மழையா இருக்கே! எப்படி வீட்டுக்குப் போவீங்க? பேசாம நம்ம வீட்டிலேயே சாப்பிட்டுடுங்க!''

''அப்படின்னா கொஞ்சம் உங்க குடையைக் குடுங்க. வீட்டுல போய் சொல்லிட்டு வந்துடறேன்!''

– கே. அனிதா

"பழைய யுகம்."

"இல்லை. உங்கள் மாதிரி கலைஞர்களுக்கு யுகம் இல்லை. நீங்கள் எப்போதும், புது யுகம்தான்."

"இது அதிகமான பாராட்டு."

''கலைஞர்கள், சோற்றால் வாழ்வது இல்லை. அவர்கள், பாராட்டால் வாழ்கிறவர்கள். தகுதியானவர்களைப் பாராட்டுவது, கலையைக் கௌரவப்படுத்துவது ஆகும்."

"நான்தான் பாடுவதை நிறுத்திட்டேனே."

"மேடையில் பாடுவதை. மனசுக்குள் பாடுவதை நிறுத்த முடியுமா உங்களால்?"

"அது முடியாது."

"ஆகவே, நீங்கள் கலைஞர் என்பதில் என்ன தடை?"

"குளியல் அறைக்குள் பாடுகிறவர்கள்?"

அரவிந்தன் சிரித்தான். பழங்களைத் தந்தான். மேலும், பாலமுரளி கேசட் ஒன்றையும் தந்தான்.

"எதுக்கு இதெல்லாம்?"

"ஒரு வகையான நிவேதனம்."

சங்கடப்பட்டாள் பாரதி. அவன் எழுந்தான்.

"நீங்கள் தப்பு செய்றீங்க, பாரதி. இருக்கிறவர்கள், இல்லாதவர்களுக்குக் கொடுக்கிறது சரி. கொடுக்காமல் இருப்பது தப்பு. அது மாதிரி, ஞானம் உள்ளவர்கள், பாடாமல் இருப்பது தப்பு. அது குற்றமும் கூட. அடுத்த வெள்ளிக்கிழமை எங்கள் கம்பெனி ஆண்டு விழா. நீங்கள் பாடுகிறீர்கள். நான் ஏற்பாடு செய்து விட்டேன். அழைப்பு வரும். அட்வான்சும் வரும்."

பாரதி பேச நினைப்பதற்குள், அவன் போய் விட்டிருந்தான்.

(தொடரும்)



# அதிருப்தியில் முதல்வர்!

## காதில் விழுந்தவை:

● வாழப்பாடியாருக்கு டாக்டர் ராமதாஸ் மீதுள்ள கோபம் இன்னமும் குறைய வில்லையாம். சமீபத்தில் வெள்ளைக் கொடியோடு இரண்டு முறை டாக்டர், வாழப்பாடியாரை தொலை பேசியில் தொடர்பு கொள்ள முயன்றிருக்கிறார். ஆனால் வாழப்பாடியார் லைனுக்கு வரவில்லையாம். "நெல்லிக் குப்பம் கிருஷ்ணமூர்த்தி, பண் ருட்டி ராமச்சந்திரன் ஏ.கே. நடராஜன் (இவர்தான் வன்னி யர் சங்கத்தைத் துவக்கியவர்) ஆகியோர் போன்று நான் ஒரேயடியாக அமுங்கிப் போய்விடமாட்டேன்; நான் யார் என்பதை டாக்டருக்கு உணர்த்தியே தீருவேன்" என்று சொல்கிறாராம் வாழப் பாடியார். இதற்கிடையில் ஆர்.கே. குமார் மறைவு காரணமாக ஏற்பட்டுள்ள ராஜ்யசபா காலியிடத்தில் தம்மைத் தேர்ந்தெடுத்து தில்லிக்கு அனுப்ப வேண்டும் என்று கலைஞரிடம் அன் பான வேண்டுகோள் வைத் திருக்கிறாராம் வாழப்பாடி யார்.

● ஒவ்வொரு வருடமும் டிசம்பர் முதல்தேதி எய்ட்ஸ் கட்டுப்பாடு விழிப்புணர்வு நாளாக அனுசரிக்கப்படுகிறது. உலக சுகாதார நிறுவனம், யூனிசெப், போன்ற ஐக்கியநாடுகள் அமைப்புகளிலிருந்து, மத்திய அரசின் சுகாதாரத் துறை வழியாக மாநில அரசு மற்றும் தன்னார்வத்தொண்டு நிறுவனங்களுக்கு 'எய்ட்ஸ்' விழிப் புணர்வு பிரசாரத்துக்குப் பணம் அனுப்பப்படுகிறது. இப்போது இந்த விழிப்புணர்வின் இரண்டாம் கட்ட பணிக்கு நாடு முழுவதற்கும் 1500 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளதாம். தமிழகத்தில் உள்ள 46 தொண்டு நிறுவனங்களுக்கு தலா 20 லட்சம் இந்த வருடம் ஒதுக்கப்பட்டுள் ளது. டிசம்பர் ஒன்று அன்று, பள்ளிக் குழந் தைகளை வைத்து ஊர்வலம், பொதுக் கூட் டம் மற்றும் லாரி டிரைவர்களுக்கு ஆணு றைகள் கொடுப்பது என்று பேருக்குச் சிலவற் றைச் செய்து 20 லட்சத்தையும் 'ஸ்வாஹா' செய்து விடுகின்றன வாம் சில நிறுவனங்கள். "எய்ட்ஸ் விழிப்புணர்வு என்பது சிலரது வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வந்திருக்கும் காமதேனு!" என்கிறார் தில்லி உயர் அதிகாரி ஒருவர். அதிலும், மத்திய அரசின் சில அதிகாரிகள் 'லெட்டர்பேட்' தன்னார்வ நிறு வனங்களோடு மிக இணக்கமாகத் தொடர்பு வைத்துக் கொண்டு நிதியை அவர்களுக்கு அள்ளி விடுகிறார்களாம்.

● ஒரு சில அமைச்சர்களைத் தவிர மற்ற அமைச்சர்களின் செயல்பாட்டில் முதல்வருக்கு அவ்வளவாக திருப்தி இல்லை என்பது தெரிந்த விஷயம். ஆனால் கட்சிப் பிரமுகர்கள் மற்றும் சுற்றியிருப்பவர்களின் 'அழுத்தம்', 'எதிர் அழுத்தம்' மற்றும் ஜாதி ரீதியான ஒதுக்கீடு பிரச்னைகள் காரணமாக அமைச்சர வையில் அவரால், மாறுதல்களைச் செய்ய முடியவில்லை. சட்டமன்றத் தேர்தலை சந்திக்க இன்னமும் ஒன்றரை வருடங் களே இருக்கும் நிலையில் "கண்டிப்பாக எந்த மாற்றமும் இருக் காது" என்று பூரிப்புடன் பணிகளில் தங்கள் மெத்தனத்தைத் தொடர்ந்து காட்டுகிறார்களாம் சில அமைச்சர்கள். சமீபத்தில் முதல்வரின் அலுவலகத்தில் மேலும் சில திறமையான அதி காரிகள் பணியில் அமர்த்தப்பட்டிருக்கிறார்கள். மிகக் குறிப் பிட்ட சீனியர் அமைச்சர்கள் தவிர, மற்றவர்கள் துறைகளில் முதல்வர் அலுவலக அதிகாரிகள் நேரடியாகவே தலையிட்டு காரியங்களை விரைவு படுத்திக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலையில், சட்டமன்றத் தேர்தலில் பாஸிடிவ் வோட்டு பெற இன்னும் திறமையான டீம் தேவை என்ற எண்ணம் முதல்வருக்கு மேலும் வலுப்பட்டு வருகிறதாம்.

● உடன்பிறவாச் சகோதரியின் கணவருக்கும் கட்சிக்கும் எந்த சம்பந்தமுமில்லை என்று புரட்சித் தலைவி அவ்வப்போது சொல்லி வந்தாலும் அவரது வழிகாட்டுதல்கள் தோழியின் வழியாகச் செயல்படுத்தப்படுகிறதாம். மாற்றுக் கட்சியிலிருந்து ஆட்களை இழுப்பது, கட்சிப் பிரச்னைகளை சரிப்படுத்துவது என்று பல பணிகளில் அவர் ஈடுபடுகிறாராம். மிக வருத்தமாக இருக்கும் ம.தி.மு.க. பிரமுகர் ஒருவருக்கும் தோழியின் கணவர் சமீபத்தில் வலை வீசினாராம்.

— சஞ்சயன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

இல்லதரசிகளுக்கு புதிய துணை
சமையல் கலையில் திருப்புமுனை
மில்க் பாய்லர், இட்லி குக்கர்,
வாட்டர் ஃபில்டர், குழிகரண்டி
எல்லாம் தந்திடும்

# Murugan

முருகன் மெட்டல் என்றாலே
முகம் மலரும் தன்னாலே






















## முருகன் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்

21, பொன்னப்ப செட்டி தெரு, சென்னை – 3.
போன்: 5350182, 5343412

